# சிவானந்த யோகம்

ஆக்கியோர் :
சிவ-பாத-ரேணு
சுவாமி வெங்கடேசானந்தர்




மொழிபெயர்ப்பாளர் :
அத்தியாத்ம-ரத்ன
கி. வானமாமலை

பதிப்பாளர் :
யோக வேதாந்த ஆரண்ய விசுவ
வித்யாலயம்
சிவானந்த நகர் போஸ்ட்
ரிஷிகேசம் ஹிமாலயம்

PUBLISHED BY
The Yoga Vedanta Forest University

OUT OF THE
MAGNANIMOUS DONATION OF
The Maharaja of Ettayapuram
M. R. Ry. Raja JagaVeeraRama Muthukumara
Venkateswara Ettappan Ayyan Avl.

IN COMMEMORATION OF
THE 70TH BIRTHDAY OF
MAHAMANDALESWAR
SRI SWAMI SIVANANDA SARASWATI MAHARA.



8TH SEPTEMBER 1956.





RS. 2/-

கவியோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அருளிய

# நான்முகம்

— (✲) —

உலகெலாம் போற்றும் உத்தமச் சித்தன்
நலமெலாந் திரண்ட நற்குணச் செம்மல்
உருவுகொண் டொளிரும் உபநிஷத் தனையான்
**குருசிவா- னந்தன்** பெருமையென் சொல்வேன் !
மலையினு மிக்க மாண்புடை மன்னன்
அலைகடல் போலே அருட்கட லானேன்....
அள்ளி அள்ளி அறிவைப் பொழிந்தோன்
எள்ளுவா ருக்கும் இனிதே செய்வோன்
எளிய நடையான் இனியநற் பெரியான்
தெளிமிகு கங்கா தீரத் தொளிரும்
பொங்குவே தாந்தக் கங்கை யனையான் .......
ஆதிசங் கரரும் அப்பை யருமே
ஓதிய ஞான உருக்கொண் டுற்றான்!
அழியும் உடலுள் அழியாப் பொருளை
விழியுள் ளாக்கி விளங்கிடக் கண்டான்.
அதுவே அதுவாம் அதுவே தானாய்ப்
பொதுநோக் குடனே பொலியும் புனிதன்.
அன்பும் அறிவும் அருட்பணித் திறனும்
பொன்மணி யணிபோற் பூமண வழகுபோற்
பொருந்தி வாழும் புனிதநல் யோகி.
இருந்த படியே எங்கும் இருப்போன்
பந்தனை தீர்க்கும் பரம வைத்தியன்
எந்தை எனது சிந்தையைக் கவர்ந்தோன்
யோகவே தாந்த உத்தமக் குருவரன்

ஏக ரஸத்தில் இலகுமெய்ப் போதன்,
அருமை பெருமையை அறிந்துரை நூலிது.
**வானமா மலை**சொலும் ஞானமா மலையின்
தேனமர் மொழிகளைத் தினந்தினம் பருகி
உலகெலாம் தெய்வ ஒளிபெறு வாழ்வு
பொலிக, பொலிக, பொலிகநீ டூழியே !

*யோகசமாஜம்,*
*வடலூர்,*
8—9—'56

**சுத்தானந்த பாரதி.**

---

ஐயமகற்றும் ஆனந்த குமர மதனில் அன்பரெலாம்
உய்ய வந்த தவஞான ஒருவன் அறுவர் தமைவென்றோன்
செய்ய கங்கைக்கரை வாழும் சித்தன் சித்த சிகாமணியாம்
**வை**யம் புகழும் **சிவானந்த** வள்ளல் வாழி வாழியவே.

*திருப்புகழ் ஜோதி, திருமுருக,*

**கிருபானந்தவாரி.**

---

Lieut Colonel
A. N. S. MURTHY, B.A., B.L.,
*Head of the Academic Dept.*
*Military College.*

*Dehradun,*
*20—8—'56*

# அணிந்துரை

திருவாளர் கி. வானமாமலை அவர்கள் என்னை இப்புத்தகத்திற்கு முகவுரை எழுதக் கேட்டுக்கொண்டது, விளக்கு தனக்கு வெளிச்சம் தர மின்மினியை அழைத்ததுபோலும்!

திருவாளர் அவர்கள் தெய்வீகத்திற்கும் தமிழிற்கும் செய்துவரும் தொண்டு யாவரும் அறிந்ததே. அவர்கள் வெளியிட்டுள்ள "அன்பின் ஆக்கம்", "மனிதனின் மாண்பு!" முதலிய மொழிபெயர்ப்புகள், கட்டுரைகள் மூலம் அவர்களது தெய்வீக ஆற்றலைப் பலரறிந்து, தெளிந்திருக்க வேண்டும்.

திருவாளரின் கட்டுரைகளும் மொழிபெயர்ப்புக்களும் ஓர் தனிச் சிறப்பு வாய்ந்தவை என்று நான் சொல்லவேண்டியதில்லை.

இமயமலையில் வீற்று, உலகம் போற்றப் பணியாற்றி வரும் ஸ்ரீலஸ்ரீ சுவாமி சிவானந்தரின் ஆங்கில நூல்களை திருவாளர் அவர்கள் நம் தெள்ளிய தமிழில் மொழிபெயர்க்க முன் வந்திருப்பது நம் தமிழ் நாட்டின் பெரும் பாக்கியமென்றே நான் கருதுகிறேன்.

இப்புத்தகத்தையும், இன்னும் இவர்கள் மூலம் வெளிவரப்போகும் தமிழ் நூல்களையும் வாசித்து தெய்வீக மோங்கி, தமிழ்நாடு சிறப்புற எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராக.

இப்படிக்கு,
**ஆ. நீ. சுந்தரமூர்த்தி**

# நன்கொடையாளர்

# எட்டய்யபுரம் மகாராஜா



மேன்மை தங்கிய எட்டய்யபுரம் மஹாராஜா உயர்திரு ராஜ ஜகவீரராம முத்துக்குமார வெங்கடேசுவர எட்டப்பன் அய்யன் அவர்கள் தமது குழவிப்பருவம் முதற்கொண்டே கல்வியில் கரையின்றிய கருத்துக்கொண்டு விளங்கிவருகிறார். 2—11—1914ல் தோன்றிய மகாராஜா அவர்கள் அரண்மனையிலேயே பேராற்றல் வாய்ந்த பற்பல ஆசிரியர்களின் சீரிய மேற்பார்வையில் கல்வி பயின்று வரலானார். எந்த ஒரு கலையிலும், கல்வித்துறையிலும் ஆர்வத்துடனும் ஆராய்ச்சித் திறனுடனும் மஹாராஜா அவர்கள் சிறந்து தோன்றலானார்கள். அவர்களின் அபார மேதையின் முன் சாதாரண பண்டிதர்கள் நிற்க முடியாது!

அரசியல், சமூகவியல், சமயவியல், வேதாந்தவியல், தர்க்கவியல், விஞ்ஞானவியல், கலையின் பல்வேறு பிரிவுகளான இயந்திரக்கலை, சித்திரக்கலை, சிற்பக்கலை, முதலிய பல்வேறு கலையிலும் மிகுந்த தேர்ச்சி பெற்றுள்ள மஹாராஜா அவர்கள் தன்னிடம் வரும் கலைஞர்களையும், அறிஞர்களையும் தமது பேரறிவால் பிரமிக்கச் செய்துவிடுகிறார்கள் என்ற உண்மையை அவர்களுடன் நெருங்கிப் பழகும் அன்பர்களிடமிருந்து தெரிந்துகொள்ளலாம்.

மக்களின் தொண்டிலேயே அதிகமாக ஈடுபடவேண்டும் என்ற கருத்துடைய மஹாராஜா அவர்கள் கர்மயோகத்தை மிகவும் பாராட்டி வருகிறார். உலகியலிலேயே அழுந்தி

நன்கொடையாளர் :



எட்டய்யபுரம் மஹாராஜா
உயர்திரு. ராஜ ஜகவீரராம முத்துக்குமார
வெங்கடேசுவர எட்டப்பன் அய்யன் அவர்கள்

நிற்கும் சிப்பந்திகள், நண்பர்கள் பலரின் மத்தியில் மஹாராஜா ஞானப்பொக்கிஷமாக விளங்கும் பேராற்றலுடன் விளங்கி வருகிறார். அவர்களது உயரிய வேதாந்த அறிவை அறியும் வாய்ப்புடையவர்கள் மஹாராஜாவின் மாபெரும் மனோவலிமையைத் தெரிந்து போற்றுவர்.

நல்ல வழியிலே செல்லும் ஆத்மீய ஊழியர்களுக்கு வேண்டும் உதவி செய்யவேண்டும், ஆத்மீகப்பிரசாரத்திற்குத் தன்னாலியன்ற மட்டும் உதவ வேண்டும் என்று உறுதியுடன் செயலாற்றிவரும் மஹாராஜா அவர்கள் 'இமயத்தின் ஜோதி' யென ஆத்மீக சிகரமாக விளங்கும் ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் திருப்பாதங்களைப் பொன்னேபோற் போற்றி சுவாமிகளின் திருத்தொண்டில் கருத்தூன்றி நிற்கிறார்கள்; சுவாமிகளின் ஆத்மீக இயக்கத்தில் தானும் பெருமளவு உதவி, அவர்களின் திருவருளைப்பெற்று இன்பமுற வேண்டுமென்பதற்காக அதற்கான சந்தர்ப்பங்களை வெகு ஆவலுடன் எதிர்பார்த்தும் நிற்கிறார்கள்.

இந்நிலைமையில் சுவாமிகளின் 70வது பிறந்ததின விழா நினைவுச் சின்னமாக அவர்கள் சிறுவயதிலே வளர்ந்து வரும் பேறுபெற்ற எட்டயபுரத்தில் ஓர் சிறிய மாளிகையைத் தோற்றுவிக்கவேண்டும் என்ற கருத்து ஆச்சிரமத்திலிருந்து வெளிவந்தபொழுது, இதோ எனக்குச் சொந்தமான ஒரு பெரிய கட்டிடம், பதினாயிரம் ரூபாய் பெறுமானது, சுவாமிகளின் ஆத்மீகப் பிரசாரத்திற்கென அளிக்க முன்வந்துள்ளேன் என்ற தமது கருத்தைத்தெரிவித்து, அம்மாளிகையை யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்களைக் கொண்டு உத்காடனமும் செய்யவேண்டி பெரும் முயற்சி எடுத்து

வந்துள்ள மஹாராஜாவின் குருபக்தியை என்னென்றுரைப்பது!

மேற்கூறியவற்றுடன் நில்லாது சுவாமிகளின் வாழ்க்கை அனுபவங்களைச் சித்தரிக்கும் மிகச்சிறந்த ஆங்கில நூலின் தமிழ் மொழிபெயர்ப்பை வெளியிடவேண்டும் என ஆச்சிரமத்தார் எண்ணியபோது, தாமே வலிய முன் வந்து இந்நூலை வெளியிடும் பொறுப்பை ஏற்றுக்கொள்வதாக ஒப்புக்கொண்டு உதவிவரும் மஹாராஜா அவர்களின் ஆத்மீகத்தன்மையை எவ்வளவு போற்றினாலும் மிகையாகாது.

மஹாராஜாவின் சீரிய உதவியால், நெல்லைமாவட்டத்தில் மட்டுமல்லாது, தமிழ் நாட்டிலேயே பெரும் ஆத்மீக விழிப்பு ஏற்படவேண்டும் என்பதையே குருமஹாராஜ் முதல் ஆச்சிரமத்திலுள்ளவர்கள் அனைவரும் எதிர்பார்க்கின்றனர். மஹாராஜா அவர்களுக்கு தீர்க்க ஆயுளும், நல்லாரோக்கியமும், சாந்தியும், செழிப்பும், பேரானந்தமும் ஆண்டவன் அளிப்பாராக.

---

## புனேந்துரை
### ( சிவானந்த நீலகண்டன் )

அறியாமையில் சிக்குண்டு பரிதவிக்கும் மக்களுக்கு ஸ்ரீ குருதேவரின் பெருமையை எடுத்துக் கூறவேண்டிச் செய்யப்பெற்ற திருப்பணியால் சுவாமி வெங்கிடேசானந்தரின் பெயர் உலகம் உள்ளளவும் போற்றப்படும் என்பதில் ஐயமில்லை. அவருடைய திருப்பாதங்களில் நான் எனது பணிவான வணக்கத்தைச் சமர்ப்பிக்கிறேன். **'சிவானந்த யோகம்'** என்ற இந்த அற்புதநூல் என்போன்ற பாமரனின் மனதிலே உண்டாக்கும் அசாதாரண ஆத்மீக சக்திக்காகத் தெண்டனிடுகிறேன். அத்தகைய சக்தி, மனிதசமுதாயத்தின் தெய்வீகப்பாதைக்கான எழுப்புதலுக்கு, குருமஹராஜ் தமது அனுபவத்தினாலும் அறவுரைகளாலும் காட்டியுள்ள சீரிய பாதையைப் பின்பற்ற என்னைத் தூண்டுகிறது.

# பதிப்பாளர் உரை

சம்பூர்ணயோகத்தின் அம்சங்களாகிய தமது போதனைகளின் உயிருள்ளதோற்றமாக சுவாமி சிவானந்தர் பிரகாசித்து வருகிறார். யோக வேதாந்தத்தின் பல்வேறு பிரிவுகளிலும் இருநூறுக்கும் மேற்பட்ட உயர் நூல்களின் தலைமை சான்ற ஆசிரியராக அவர்கள் விளங்கினாலும் சுவாமிஜியின் சொந்த வாழ்க்கையே சிறந்ததும், உணர்ச்சியூட்டக் கூடியதும் தமது யோகத்தின் சீரிய விளக்கப் பகுதியும் ஆகும் எனலாம்.

சுவாமிஜி தமது வாழ்க்கையின் மூலம் விளக்கிக் காட்டியுள்ள மாபெரும் யோகத்தின் சாரத்தை இந்நூலின் மூலமாக அவர்களின் நெருங்கிய சீடர் ஒருவர் மக்கள் முன் சமர்ப்பிக்கிறார். இங்கு சமர்ப்பிக்கப்பட்டுள்ள சிவானந்த யோகத்தின் அம்சங்கள் மற்றும் உயர்மொழிகள் அனைத்தும் முக்கியமானதோர் சிறு பகுதியேயன்றி முழுவதும் ஆகமாட்டா.



## மொழிபெயர்ப்பாளர்

## முகவுரை.

எப்பொழுதெல்லாம் தர்மம் சிதைந்து அதர்மம் தலை தூக்கி நிற்கிறதோ அப்பொழுதெல்லாம் ஆண்டவன் அவதாரமெடுத்துப் பூவுலகில் தோன்றி மக்களுக்கு வேண்டிய நன்மைகளைச் செய்ய முற்படுகிறான் என்பது கீதா வாக்யம். நம் புண்ணிய பாரத பூமியில் அவ்வப்பொழுது தோன்றியுள்ள அவதாரங்களை எண்ணிக்கூற முடியாது. இப்பொழுது நம்மிடையே வாழ்ந்துவரும் திருஅவதாரமான ஸ்ரீ சுவாமி சிவானந்த சரஸ்வதி அவர்கள் நம்தமிழ்நாட்டில் தோன்றி, இமயத்தில் வாழ்ந்து, அகில உலகத்துக்கும் நல் வழிகாட்டியாக விளங்கி வருகிறார்கள். அவர்களின் பெருமையை உலகெங்கிலுமுள்ள மக்கள் உணர்ந்து போற்று கின்றனர். அத்தகைய சுவாமிகளின் வாழ்க்கை, அனுபவங் களைச் சித்தரிக்கும் மிகச் சிறந்த நூலாகிய 'Sivananda's Integral Yoga' என்னும் ஆங்கில நூலின் மொழி பெயர்ப்பாகிய இந்நூல் "சிவானந்த யோகம்" என்னும் சிறந்த தலைப்புடன், தமிழ்நாட்டு மக்களை நல்வழிப்படுத்தி, மற்றவர்களையும் நல்வழி நடாத்த வேண்டி வெளியிடப் பெறுகிறது. யோகத்தின் பற்பல பிரிவுகளையும் சேர்ந்த முறையில் போற்றி வந்தால் எளிதிலே பலன்பெற முடியும் என்ற சுவாமிகளின் சம்பூர்ண யோகத்தின் தன்மையை மக்கள் எளிதிலே புரிந்து, போற்ற இந்நூல் வழிவகுக்கும் என்பதில் ஐயமில்லை.

இம்மொழிபெயர்ப்பு நூலுக்குச் சிறந்தோர் நூன் முகத்தை அருளி, என்னையும், நூலையும் பெருமைப்படுத்திய

மொழிபெயர்ப்பாளர் :



அத்தியாத்ம-ரத்ன

தி.ந. கி. வானமாமலை

கவியோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்களுக்கு பணிவுடைய எனது நன்றியும், நன்றி கலந்த வணக்கமும்.

இன்னும் அணிந்துரை வழங்கியருளிய உயர்திரு. ஆ. நீ. சுந்தரமூர்த்தி, உயர்திரு. சிவானந்த நீலகண்டன் முதலிய பெரியார்களுக்கும் எனது வணக்கம் கலந்த நன்றி.

நூலை வெளியிடுவதற்கான வழிவகையின்றி என் செய்வதென்று தெரியாது நிற்கும் நேரம், தாமே முன் வந்து வெளியிடும் எண்ணத்தை வெளிப்படுத்தி நூல் வெளி வர ஆவன செய்தருளிய எட்டய்யபுரம் மஹாராஜா அவர்களுக்கு எனது அளவுகடந்த நன்றி; நன்றிகலந்த வணக்கம்; வணக்கம் கலந்த நல்வாழ்த்துக்கள்.

நூலைப் பார்வையிட்டுப் பிழை திருத்தம் செய்து உதவிய தமிழறிஞர் இலஞ்சி திரு. அ. இ. முத்துக்குமார சாமி அவர்கட்கும், கவிபுனைந்துதவிய ஆலப்புழை திரு. சுப்பிரமணியபிள்ளை அவர்கட்கும் எம் உளம்கனிந்த நன்றி.

ஆசிஉரை அளித்து ஊக்கியருளிய குருநாதர் அவர் கட்கும், பதிப்பாளர் அவர்கட்கும் எமது சவினீத நமஸ்காரம்.

——



# ஆசி உரை.

## (சுவாமி சிவானந்தர்)

மலர்மிசையேகி, சச்சிதானந்தக் கடலாக விளங்கும் பரமனுக்கு வந்தனம். நீயே அது! தத் துவம் அஸி! உலகாயதத்தோடு அவசரம் நிறைந்த ஒரு யுகத்தில் நாம் வாழ்ந்து வருகின்றோம். வாழ்க்கையின் நோக்கத்தைப் பற்றிச் சிந்திப்பதற்கான சாவகாசம் கூட மக்களிடம் இல்லை. அவர்கள் உதவியின்றி அங்குமிங்கும் மாயை என்னும் இயந்திரத்தால் அலைக்கப்படுகின்றனர். புயலில் அகப்பட்ட சருகைப் போன்று அவர்கள் தங்களைப்பற்றி எண்ணவோ, பரிதாபப்படவோ அனுமதிக்காது அடித்துச் செல்லப் படுகின்றனர். அன்றாட வாழ்க்கைக்கான வருவாயைச் சம்பாதிப்பதில்தான் அதிகமான சமயத்தை அவர்கள் செலவு செய்து வருகின்றார்கள்.

ஆனால் இந்த யுகமும் அதனுடைய சிறிய அம்சங்களைக் கொண்டு விளங்குகின்றது. பண்டைக் காலத்தில், துடித்து நிற்கும் சாதகர்கள், கானகத்தில் உள்ள தங்கள் ஆசிரமத்தில் வசித்து வரும் முனிவர், சன்யாசிகளின் பாதாரவிந்தத்தைத் தேடிச்சென்று பலகாலம் அவர்களுக்குச் சேவை செய்து ஆத்மீக அறிவைப் பெற்று வந்தனர். அவ்வறிவை வாய் மொழியால்தான் தெரிவிக்க முடியும். நாகரிக இயந்திர உலகம் இன்றைய ஆத்மீக சாதகனைத் தன் வீட்டிலிருந்த படியே முனிவர்களின் அறிவுக் களஞ்சியமான சிறந்த சமய நூல்களின் சிறிய கருத்துக்களைப் பெற வழிவகுக்கின்றது. இந்த அரிய சந்தர்ப்பத்தை நாம் முழுவதும் பயன்படுத்தி யாகவேண்டும். ஒவ்வொரு வீட்டிலும் ஆத்மீகப் புத்தகங்கள் மலிந்து கிடக்கவேண்டும். நமது ஆண்களும் பெண்களும்

இத்தகைய ஆத்மீக இலக்கியத்தில் பெரும் பற்று உள்ளவர்களாக விளங்காவிடினும் அவர்களுடைய வீட்டை ஆத்மீக இலக்கியத்தால் நிரப்பும் திருப்பணியை நாம் நிறுத்துதல் கூடாது. ஒரு நாள் தெய்வ கிருபையால் அப்புத்தகங்கள் ஒன்றில் ஏதாவது ஒரு பக்கத்தையோ அல்லது ஒரு பகுதியையோ அவர்கள் படித்து அதனால் விழித்தெழுவது திண்ணம். அன்றைய தினம் அவர்களின் வாழ்க்கையில் மாறுதலைத் தோற்றுவிக்கும் முக்கிய நன்னாளாக விளங்கும். ஒவ்வொரு மனிதனும் தான் செய்யவேண்டியதைக் குறித்து சிந்திக்கத் தொடங்குவதோடு அரிய மானிட ஜன்மத்தின் நோக்கத்தைப்பற்றி எண்ணியும் நிற்பர். அதன் பிறகு அவர்கள் சாதனையில் ஈடுபட்டு இறுதியில் ஆத்மானுபூதியை பெற்று நிற்பர். இதுவே கடவுளுக்குப் பிரியமான அதிசய ஞானயக்ஞமாகும். அக்காலத்தில் மிகுந்த பொருள் செலவினால் செய்யப்பட்ட அஸ்வமேதம், ராஜசூயம், முதலிய யாகங்களைவிட இந்த ஞானயக்ஞம் மிகவும்பெருமை வாய்ந்தது. இத்தகைய ஞானயக்ஞத்தில் ஈடுபட்டவர்கள் உண்மையில் ஆசிர்வதிக்கப் பெற்றவர்களே. இதுவே கடவுளின் சொந்த ஜோலியாகும். இப்பணி மக்களை ஆத்மானுபூதியைப் பெற முயற்சிக்கும் நேரிய பாதையில் செல்லத் தூண்டுகிறது. அறத்தை நிலைநாட்டுவதே அவர் பணி. நாமனைவரும் அவர்களின் பெரும் பணியில் பங்கு கொள்கிறோம். ஆதலால் அவர்களுடைய பேரருளையும் நல்லாசிகளையும் பெறுகிறோம். அவர்களுடைய இச்சையும் தெய்வீக சக்தியுமே நமது கரங்கள் வழியாக வேலை செய்கின்றன.

ஆண்டவனின் இந்தத் தெய்வீகத் திருப்பணி தென்னாட்டில் **திரு. கி. வானமாமலை**யால் மிகச் சிறப்புடன் நடத்தப்பெறுகிறது. ஆண்டவனின் திருவருளும் ஆசியும் தெய்வநெறிக் கழகத்தின் இம்மாபெரும் பணியில் **எட்டய்யபுரம் மகாராஜா**வின் முழு மன உதவியையும் நல்வாழ்த்துக்களையும் பெற வழிவகுத்துள்ளன. அவர்கள் செய்துவரும் சீரிய சேவை மிகவும் போற்றுதற்குரியது. இத்தகைய பெருமை வாய்ந்ததும், தன்னலமற்றதும், சிறப்புடையதுமான பணியின் பலனில் பங்குபெறுகின்றவர்கள் உண்மையில் ஆசீர்வதிக்கப் பெற்றவர்கள். **எட்டய்யபுரம் மகாராஜாவையும், திரு. வானமாமலையையும், திருமதி டாக்டர் சுந்தரி அம்மாளையும்**, இன்னும் மற்ற துணைப்பணியாளர்களையும் ஆரோக்யம், நீண்டவாழ்வு, சாந்தி, செழிப்பு, கைவல்ய மோக்ஷம் முதலியவற்றை ஆண்டவன் அளித்துக் காப்பாராக! தமிழ் நாட்டு மக்களையும், உலகத்து மக்களையும் ஆண்டவன் ஆசீர்வதிப்பாராக!

---



# அன்புரை

(இலஞ்சி அ. இ. முத்துக்குமாரசாமி)

அன்பெனும் நீரால் அவித்தனை சினத்தை
அருங்கொடைப் பண்பால் அகற்றினை ஆசை
அகந்தை போக்கி அடக்கமேற் கொண்டனை
இன்பப் பேற்றால் இனிதுயிர் வாழ
இமயப் பொருப்பி லின்முகத் தருளோ
டெமையாள் தலைவ எழில்நெல்லை வாழும்
தமியன் முத்துக் குமார சாமி
அமிழ்துறழ் தமிழின் அறைதரும் அன்புரைச்;

•

சமயமும் தமிழும் பேசும் சரசுவதி!
இமயச் சிவானந்தப்பேருடன் இலங்குவாய்
குமரிதென் பகவதி கூரருள் கொண்டு
இமசேது வரையும் இன்னரு ளாழி
அமைவுறச் செலுத்தி ஆண்டுபல வாக
உய்தியீங் குண்டென் றுலகினர் உணரத்
தெய்விக ஞானம் திசையெலாஞ் சிறக்க
வாழி இவ்வையம் வளம்பெற வாழி.



# சிறப்புறவே சிந்திப்போம்.

(மு. வரதராசன்)

இமயமலையின் சாரலிலே
    இயற்கை எழிலின் சூழலிலே
அமையும் தவத்தின் இருப்பிடமாய்
    அருமைச் சாலை ரிஷிகேசம்
தமமும் ரசமும் தீர்ந்த நிலைச்
    சத்து வத்தின் நல்லிருக்கை
நமரெல்லோரும் நாடுவதாம்
    நல்லா னந்த குடீரந்தான்.

அவமே காலம் கழியாதே
    அகிலம் வாழத் தொண்டாற்றி
பவத்தின் பயனை அடைந்திடலாம்
    பண்பை வளர்த்தே உயர்ந்திடலாம்
தவத்தின் திருவாம் சிவானந்தர்
    தண்மை அருளால் அன்புரையால்
சிவமே அன்பும் இன்புமெனச்
    சிந்திப் போமே சிறப்புறவே.



மஹாமண்டலேசுவரர்

ஸ்ரீ சுவாமி சிவானந்தரும்



ஸ்ரீ சுவாமி வெங்கடேசானந்தரும்

## கடவுளின் திருஅவதாரம்

# சுவாமி சிவானந்தர்



இற்றைக்குப் பல ஆண்டுகட்கு முன்பு இந்தியாவின் தென்பகுதியில் அப்பைய தீக்ஷிதர் என்ற பெயருடைய மிகச் சிறந்த பண்டிதர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் வேதசாஸ்திர வல்லுனர் மட்டுமல்லர்; சிறந்த பக்தராகவும் விளங்கிவந்தார். அவர்களிடம் அதிசயிக்கத்தக்க பல சித்திகள் அமைந்திருந்தன. சமஸ்கிருதத்தில் பல நூல்களை ஆக்கிய பெருமை படைத்திருந்தார். அரசர்கள் பலருடையவும் அவைதனில் அவர் போற்றப்பட்டு வந்தார் எனினும், பணிவுடைமை, பக்தி என்ற இரு அணிகளையும் தாங்கி வந்தார்.

**சுவாமி வெங்கடேசானந்தர்**

அவருடைய குடும்பத்தில் துறவிகள் பலர் தோன்றினர். சென்ற நூற்றாண்டில் நெல்லையை அடுத்த 'பத்தமடை' என்னும் கிராமத்தில் வெங்கு ஐயர் என்ற சீரிய அந்தணர் சிறப்புடன் வாழ்ந்து வந்தார். அப்பைய தீக்ஷிதரின் பரம்பரையில் உதித்த வெங்கு ஐயரும் அவரது மனைவி பார்வதி அம்மாளும் இல்லறத்தை முறையே நடாத்தி வந்தனர். அன்றாட வழிபாட்டு நேரங்களில் வெங்கு ஐயர் தன்னை மறந்த நிலையில், கண்ணீர் தாரை தாரையாகப் பெருக் கெடுத்து ஓட சிவபெருமானைப் பிரார்த்தித்து நிற்பார். அவரது உயரிய பக்தியின் சின்னங்களே இவை.

1887 செப்டம்பர் 8ம் தேதி இவ்விரு பக்தர்கட்கும் ஒரு அதிசயக் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தைக்கு 'குப்புஸ்வாமி' என பெயர் சூட்டினர். தங்களது கடைசிக் குழந்தையாதலால் அவர்கள் 'குப்புஸ்வாமி'யை வெகுவாக நேசித்து வந்தனர். அக்குழந்தையும் அதிசயிக்கத்தக்க பல அம்சங்களைப் பெற்றிருந்தது. எனவே, தாய் தந்தையர் குழந்தையை ஆண்டவனின் வரப்பிரசாதம் என எண்ணினர். விரைவிலேயே அக்குழந்தையும் அவ்வுண்மையை நிரூபித்து விட்டது. சிறு குழந்தையாக இருக்கும் பொழுதே தந்தையின் வழிபாட்டில் மிகுந்த கருத்துக் கொண்ட குழந்தை வழிபாட்டுக்கெனப் பூக்களைப் பறித்து வரும். குறும்புக் காரனாகவிருப்பினும் ஓர் பேரறிவாளியின் குறிப்பென மிகவும் நல்ல தன்மைகள் பொருந்தப் பெற்று விளங்கிற்று.

குப்புஸ்வாமி தைரியமும், பெருந்தன்மையும், சுதந்திர பாவமும் கொண்டவராக விளங்கினார். எனினும் பணிவுடைமை, பலம், அன்பு இவைகளையும் கொண்டு விளங்கலானார். பள்ளிக்கூடத்திலுள்ள சுறுசுறுப்பும் பலமும் வாய்ந்த பையன்களுள் இவரும் ஒருவர். இவரது அறிவிற்காகப் பள்ளித் தோழர்கள் குப்புஸ்வாமியைப் பெரிதும் போற்றினர். பையன்களது பிரச்னைகளைத் தீர்த்து வைப்பதிலும் சண்டைகளைத் தீர்த்துக்கட்டிச் சமாதானத்தைஏற்படுத்துவதிலும் குப்புஸ்வாமி அவர்களின் தலைவராக விளங்கினார். பள்ளியில் குப்புஸ்வாமி பங்கு கொள்ளாத சமூகசேவை இருக்கவே முடியாது. பள்ளிக்கூட நாடகத்தில் நடித்தும், கவர்னரை வரவேற்கும் கீதமொன்றைப்பாடியும் பெருமை பெற்றார். அச்சம் என்பதே

அவரிடம் கிடையாது. அவர் சிறந்த உடற்பயிற்சியாளர். தன்னுடைய உடற்பயிற்சியாசிரியர்களைப் போன்று தானும் "பார்" விளையாட்டுக்களில் ஈடுபடுவார்.

கல்லூரியில் நுழைந்தபொழுதே தனது பிற்கால வாழ்க்கைத் திட்டத்தை வகுக்க முற்பட்டார். அன்புடன் சேவை செய்வதையே அவர் விரும்பினார். ஆதலால் வைத்தியத் தொழிலைத் தேர்ந்தெடுத்து, பாடங்களை வெகுவாக விரும்பிப் படித்து, வகுப்பில் முதன்மையாக நின்றுவந்தார். இரண்டு வருடங்கள் கழிந்து நடைபெற விருக்கும் பாடங்களையும் முன்னமேயே கற்றுத் தெரிந்து கொள்வதற்கான ஊக்கத்தைக்கொண்டு காட்சியளித்தார். குப்புஸ்வாமியின் திறமை ஆசிரியர்களின் பாராட்டுதலையும், அன்பையும் அவருக்கு வாங்கிக் கொடுத்தது. அவ்வாசிரியர்களனைவரையும் குப்புஸ்வாமி நன்கு போற்றித் தொண்டு செய்து வந்தார். இந்தச் சீரிய குணத்தினால் தான் உயர்ந்த ஜாதிக்காரன் என்ற அபிமானமின்றி, வெலிமேயும் வேலையில் ஈடுபட்ட ஒரு ஹரிஜனத் தொழிலாளியிடமிருந்து அவ்வேலையைக் கற்றுக் கொண்டதற்காக அத்தொழிலாளிக்கு மாலையிட்டு வழிபடவும் முற்பட்டார். ஏன்? அத்தொழிலாளியும் ஒரு வகையில் அவரது ஆசிரியர் தானே!

சிறு பையனாக இருக்கும்பொழுதே தனக்கென எந்தத் தின்பண்டத்தையும் அவர் வைத்துக்கொண்டதில்லை. இளைஞன் என்ற நிலையிலும் ஆரோக்கிய சாஸ்திரத்தின் விதிகளில் உள்ள அறிவைத் தனக்கென வைத்துக்கொள்ள அவரால் முடியவில்லை. இவ்வறிவை அனைவருடனும் பகுத்துண்ண எண்ணினார். இதன் பலனாக இளைஞர் டாக்டர் குப்புஸ்வாமி 'அம்புரோஷியா' என்ற வைத்திய

சஞ்சிகையைத் தொடங்கினார். அது உண்மையிலேயே படிப்பவர்கட்கு 'அம்புரோஷியா' (அமிருதம்) என விளங்கியது. அதன் அட்டையில் ஒரு பயில்வானின் படம் செதுக்கப்பட்டிருந்தது. எல்லோரும் பயில்வான்களாக வேண்டும் என்ற அவரது சிறப்புடைய எண்ணத்தை இவ்வட்டைப்படம் வெளிப்படுத்தியது. தன் வருமானத்தைப்பற்றி அவர் சிறிதும் கவலை கொள்ளவில்லை. அதே சமயம் எல்லோரும் ஆரோக்கியமாக வாழவேண்டும், பிணி வந்துற்ற காலை தங்களுக்குத் தாங்களே டாக்டராக விளங்க வேண்டும் எனவும் எண்ணினார்.

மலேயாத் தோட்டங்களில் தொழிலாளர் படும் அவதியை டாக்டர் குப்புஸ்வாமி ஏற்கெனவே கேட்டிருந்தார். ஆகவே அங்கு சென்று அத்தோட்டத் தொழிலாளர் சேவையில் ஈடுபடத் துணிந்தார். இந்த எண்ணம் வைதிகத்துக்குப் புறம்பாகக் கருதப்பட்டது. ஆனால் டாக்டர் குப்புஸ்வாமி எல்லாவற்றிற்கும் சிறந்ததாகச் சேவையையே கருதி வந்தார். சமயவாதியாக இருந்து குருட்டு நம்பிக்கையுடன் இருப்பதை அவர் எதிர்த்தார். நேர்மையைக் கொண்டிருந்தாரெனினும், சாதாரண புறச் சமயச் சடங்குகளில் அவர் ஒட்டிக்கொண்டிருக்கவில்லை.

டாக்டர் குப்புஸ்வாமி மலேயா மக்கட்குச் செய்த சேவையைப்போல் மற்றெந்த டாக்டரும் செய்ததில்லை. அவர் பெரும் பொருள் தேடினார் என்பது உண்மையே. ஆனால் அப்பொருள் அவரிடம் ஒரு நாள்கூட நிலைத்து நின்றது கிடையாது. பணம் அவர் கைகள் வழியே சென்று கொண்டிருந்தது. சேவா லட்சியத்தையே அவர் கொண்டு விளங்கினார். பிணியாளனை சிகிச்சை செய்து இலவசமாக

மருந்துகளைக் கொடுத்து, ஏழையென்றால் உணவுக்கான செலவையும் தன் கையிலிருந்தே கொடுத்துத் தொண்டு செய்து வந்தார். இது யாரும் அறியாத அரிய குணமே. டாக்டரின் புகழ் ஓங்கி வளர்ந்தது; அவரது வேலை அதிகரித்தது; வருமானம் பெருகியது; செலவும் வளர்ந்தோங்கியது. இதை விடப் பன்மடங்கு அவருடைய விவேகமும் வளர்ந்து வந்தது. ஆத்மீக நூல்கள் பலவற்றையும் அவர் படிக்க முயன்றார்.

1923ல் கடவுள் டாக்டர் குப்புஸ்வாமியை உலகத்தைத் துறப்பதற்குத் தூண்டினார். ஒரு பேனாவைத் தியாகம் செய்வது எவ்வளவு கடினம்! நல்ல வசதியான படுக்கையைத் துறந்து, தரையிலே படுத்துறங்குவது கஷ்டமானதல்லவா? ஆனால் நம் டாக்டர் குப்புஸ்வாமி தனது பெரும்செல்வத்தையெல்லாம் மலேயாவிலுள்ள ஏழைகட்குப் பகுத்துக் கொடுத்துவிட்டுத் தாய்நாடு திரும்பினார். தன்னுடன் ஒரு சிறு பையில் ஒரு சட்டையும், வேஷ்டியும் மட்டுமே உடையவராய் காசிக்குப் பிரயாணமானார். கையிலிருந்த மீதிப் பணத்தையும் ஏழைகட்குக் கொடுத்துவிட்டார். இம்முறையே தனது சிறந்த செல்வமென தெய்வீக அருளையே தன்னுடன் கொண்டு டாக்டர் குப்புஸ்வாமி காசியை அடைந்தார். மலேயாவில் ஆயிரக்கணக்கானவர்களுக்கு உணவு, உடை, உறைவிடம் மூன்றையும் அளித்துக் காப்பாற்றிய அதே டாக்டருக்குக் கிழிந்த உடையுடன், பிச்சை கேட்டு உண்டு ஒரு சத்திரத்தின் திண்ணையில் படுத்துறங்கவும் நேரிட்டது. ஆனால் அவர் அதைச் சந்தோஷமாகவே அனுபவித்து வந்தார். துறவினாலன்றோ கடவுளை அடைய முடியும்!

சிலகாலம் மஹாராஷ்டிர நாட்டில் குப்புஸ்வாமி ஸஞ்சாரம் செய்து கொண்டிருந்தார். ஒரு போஸ்ட்மாஸ்டருக்குச் சேவை செய்யும் திருப்பணியில் ஈடுபட்டார். ஒரு பரிசாரகனையும், மேலும் அரை டஜன் பணியாட்களையும் கொண்ட செல்வவந்தனின் வாழ்க்கையில் வாழ்ந்தவர் போஸ்ட்மாஸ்டரிடம் வேலை செய்ய முன்வந்தார். டாக்டரின் பெருமையைத் தெரிந்த போஸ்ட்மாஸ்டர் ரிஷீகேசத்தின் பெருமையை டாக்டருக்கு உணர்த்தி அவர்களை அங்கே அனுப்பியும் வைத்தார்.

டாக்டர் குப்புஸ்வாமி 1923ம் வருட முற்பகுதியில் ரிஷீகேசத்தை அடைந்தார். ஒரு ஆத்மீக குருவைத் தேடலானார். ஏகாந்தமான இடத்தில் சாந்தியுடன் கடவுளின் பெயரைப் பாடி அவனையே தியானித்துத் தனது வாழ்க்கையைக் கழிக்க எண்ணினார். விரைவிலேயே ஒரு குருவைக் கண்டுகொண்டார். அவர்தான் "**ஸ்ரீ ஸ்வாமி விசுவானந்தர்**". மாட்சிமை பொருந்திய சீடனைக் கண்ட குருவும், மிக மகிழ்ச்சியை அடைந்தார். விசுவானந்தர் டாக்டர் குப்பு ஸ்வாமியை சன்யாச ஆச்ரமத்தில் அனுமதித்து அவருக்கு "**சுவாமி சிவானந்தர்**" என்ற பெயரையும் சூட்டினார்.

அடுத்த ஏழு வருடங்கள் "சுவாமி சிவானந்தர்" கடும் தவத்தில் ஈடுபடலானார். அவரது சாதனைகளைக் கேட்பவர்கள் அதிசயித்து நிற்பர் என்பதில் சந்தேகமில்லை. பிச்சை கேட்டு உண்டு வாழ்ந்தார். சில சமயம் அதுவும் இன்றி வாழலானார். அல்லது ஒரு சில உலர்ந்த ரொட்டிகளை ஒரு மூலையில் வைத்து அதை மட்டும் உட்கொண்டு தன் குடீருக்கு வெளியே வராமலேயே பல

நாட்கள் இருந்து வருவார். உலர்ந்த ரொட்டியை தண்ணீரில் ஊறவைத்து உண்ணுவார். பாலை ஒரு படாடோபப் பொருளாகக் கருதினார். இனிப்புப் பண்டங்களையும், சுவைமிகும் உணவையும் அறவே விலக்கினார். பாலுக்காகப் பக்தர்கள் கொடுத்த பணத்தைச் சுவாமிகள் துண்டுப் பிரசுரம் வெளியிடுவதில் பயன்படுத்தினார். தனக்கு அவர் பால் வேண்டுவதில்லை. ஆனால் அறிவுப் பாலை ஆயிரக் கணக்கானவர்களுக்கு ஊட்டி வந்தார்.

இக்காலத்திலும் ஏழை பிணியாளர் சேவையில் சுவாமிகள் சிறிதும் பின் வாங்குவதில்லை. அவர் ஒரு சிறிய ஆஸ்பத்திரியையும் ஏற்படுத்தினார். தனது வட்டாரத்தில் 'காலரா' முதலிய பயங்கர வியாதிகளால் பீடிக்கப்பட்டவர்களுக்குச் சேவை செய்வதில் சுவாமிகள் மிகவும் பிரபலமடைந்தார். குணப்படுத்தும் கைராசியைக் கொண்ட சுவாமிகளின் திருப்பார்வையே பிணிகளை அகற்றி மக்கட்குச் சந்தோஷத்தைஊட்டி வந்தது. சில காலத்திற்குப் பின் சுவாமிகள் செய்தது மிகுந்த ஆச்சர்யத்தை உண்டுபண்ணுவதாயிருந்தது. கேட்காமலேயே அவருக்கு மலேயாவிலிருந்து இன்ஷ்யூரன்ஸ் பணம் சிறிது வந்து சேர்ந்தது! அத்தொகையை நம் போன்றவர் நமது சொந்த வசதிகட்குப் பயன்படுத்த எண்ணுவது இயற்கை. ஆனால் சுவாமிகள் அதை ஒரு வங்கியிற் போட்டு அதிலிருந்து கிடைத்த வட்டியைக் கொண்டு பால், பழங்கள், தயிர் முதலியன (தனக்கல்ல!)பிணியால் அவதியுறும் ஏனைய சாது சன்னியாசிகட்காகச் செலவிட முற்பட்டார். தினமும் தாம் உலர்ந்த ரொட்டியையே உண்டு வருவார். அதன்பின் பால் பழங்களைக்கொண்டு சென்று, சாதுக்கட்கு விநியோகித்து

வருவார். அத்தகையது சுவாமிகளின் சஹானுபூதி; அத்தன்மையது சுவாமிகளின் துறவுணர்ச்சி!

அன்பிற்குக் காந்த சக்தி உண்டு. அது எல்லோரையும் ஆகர்ஷிக்கிறது. அன்புப்பணி, கடும்ஜபம், ஆழ்ந்த தியானம் இம்மூன்றும் சிவானந்தருக்கு ஆத்மீக விழிப்பையும் அபார சக்தியையும் அளித்துள்ளன. மக்கள் அவரது வழிகாட்டுதலையும் அருளையும் வேண்டி உலகத்தின் பல மூலைகளிலிருந்தும் ஓடி வருகின்றனர். பாரதத்தின் பெரும் நகரங்களையும், கிராமங்களையும் சுற்றிப் பார்க்கச் சுவாமிகளை மக்கள் அழைத்தனர். அதன் பலனாக சுவாமிகள் அடிக்கடி யாத்திரையில் ஈடுபடலானார்; திவ்ய நாமத்தைப் பாடினார்; சங்கீர்த்தனம் செய்தார்; சொற்பொழிவுகளை ஆற்றினார்; யோகாசனங்களைச் செய்து காட்டினார்; மாணவர்களைப் பயிற்றுவித்தார்; மேலும் ஆயிரக் கணக்கானவர்கட்கு ஆத்மீகப் போதனைகளையும் அளித்து வந்தார்; பற்பல சஞ்சிகைகள் மூலமாகவும், கடிதப் போக்குவரத்து வழியாகவும் அனைவருக்கும் வழிகாட்டி வந்தார்.

சுவாமிகளின் கட்டுரைகள், சொற்பொழிவுகள், கடிதங்கள் முதலியன மக்களை விழிப்புறச் செய்தன. அவர்கள் சுவாமிகளை ஆத்மானுபூதியைப் பெற்ற முனிவராக, ஏன், கடவுளின் அவதாரமாகவே எண்ணினர். பெருவாரியான எண்ணிக்கையில் மக்கள் சுவாமிகளை அணுகினர். அநேகம் இளைஞர்கள் உலகைத் துறந்து சுவாமிகளின் சீடராயினர். அவர்களைச்சுற்றி ஓர் ஆச்சிரமம் வளரத்தொடங்கியது. 1936ல் சுவாமிகள் தெய்வ நெறிக் கழகத்தை நிறுவினார்.

தெய்வ நெறி சகாப்தம் — திவ்ய ஜீவன சகாப்தம் — 1936ல் துவங்கி லக்ஷக் கணக்கான மக்கட்கு அருட் பிரசாதத்தை அள்ளி அள்ளி அளித்து வந்திருக்கிறது. மானிட உள்ளத்தைத் தூய்மையாக்கும் சகாப்தமே அது. ஆயிரக் கணக்கானவர்களின், ஏன், மனித சமுதாயம் முழுவதினுடையவும் வாழ்க்கையில் ஒரு மாறுகாலமே அது. சிவானந்த சம்வத்சரத்தின் துவக்கம் உலகெங்கிலும் தர்மத்தின் புனருத்தாரணத்தைக் குறிப்பிடுகிறது. உலகின் எல்லாப் பகுதியிலும் திவ்ய ஜீவனச் செய்தி ஒலிக்கிறது; மாற்றொலிக்கிறது. சத்தியம், அன்பு, தூய்மை இம்மூன்றும் அதிகமான உள்ளங்களில் வீற்றிருக்கத் தொடங்கியது. சேவை, அன்பு, தியானம், ஆத்மானுபூதி இவையே தெய்வ நெறியின் தத்துவங்கள்.

•

ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் அரிய செய்திகளைத்தாங்கும் துண்டுப் பிரசுரங்கள், சிறுவெளியீடுகள், சஞ்சிகைகள், புத்தகங்கள் முதலியன உலகிலே பெருக்கெடுத்துப் பாய்கின்றன. இன்று நம் சுவாமிஜி இருநூறுக்கும் அதிகமான நூல்களின் ஆசிரியராக விளங்குகிறார். தெய்வ நெறிக் கழகத்தின் முன்னூறுக்கும் அதிகமான கிளைகள் சுவாமிகளின் மேற்பார்வையில் உலகெங்கிலும் சேவை செய்து வருகின்றன.

தலைமைப் பீடத்தில் சிவானந்தாசிரமம் மாபெரும் ஸ்தாபனமாக ஓங்கி வளர்ந்துள்ளது. சாதகர்களுக்கு நேரிடையான பயிற்சியளிக்க வேண்டி சுவாமிகள் 'யோக வேதாந்த ஆரண்யப் பல்கலைக் கழகத்தை' 1948ல் ஏற்படுத்தினார். எல்லா மதத்தைச் சார்ந்த மக்களையும் ஒன்று சேர்க்க சுவாமிகள் 'அகில உலக சமயப் பேரவையை'

நிறுவியுள்ளார்; அதே போல் சாதுக்களை ஒன்று சேர்க்க 'அகில உலக சாதுக்கள் பேரவையை'யும் சுவாமிகள் ஏற்படுத்தியுள்ளார். சாதன வாரங்களைச் சுவாமிகள் வருடமிருமுறை நடத்தி வருகிறார். உலகின் நாலுபகுதிகளிலுமுள்ள மக்கள் யோகவேதாந்தத்தில் பயிற்சி பெறுகின்றனர். பல பள்ளிகளிலிருந்தும் கல்லூரிகளிலிருந்தும் மாணவர்கள் தங்கள் கோடைகால விடுமுறையை ஆச்சிரமத்தில் நம் மாமுனிவரிடம் யோகத்தைக் கற்றுக் கொள்வதில் பயன் படுத்தி வருகின்றனர். நீங்கள் அடுத்த தடவை ஆச்சிரமத்திற்கு விஜயம் செய்யும்போது யோகப் பொருட்காட்சி அரங்கைப் பார்க்கத் தவறாதீர்கள். உலகத்தில் ஒரே ஒரு மாதிரி அரங்கம் அதைத் தவிர வேறு கிடையாது. யோக வேதாந்தத்தின் சாரத்தை உங்களுக்கு ஆச்சரியகரமான முறையில் அது தெரிவிக்கிறது. ஆச்சிரம ஸ்டுடியோவில் யோகாசனத்தைப் பற்றிய சலனப்படங்கள் முதலியன இருக்கின்றன.

1950ல் இலங்கை — இந்தியாவிலுள்ள பல இடங்களுக்கும் சுவாமிஜி இரண்டு மாதச் சுற்றுப் பிரயாணத்தில் ஈடுபட்டார். நூற்றுக் கணக்கான கூட்டங்களில் சுவாமிஜி பேசினார். கடவுள் நாமமும் தெய்வீக வாழ்க்கையின் செய்தியும் நாடுமுழுதும் பரந்தன. லட்சக்கணக்கானவர்கள் சுவாமிஜியை வழிபட்டு அவரது உயரிய மொழிகளைக் கேட்டனர். அது சரித்திர முக்யத்வம் வாய்ந்த நிகழ்ச்சியேயாகும்.

1953ல் சுவாமிகள் ரிஷீகேசத்தில் சமயப்பேரவையைக் கூட்டினார். அகில உலகத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தனர். பல்வேறு மதத்தலைவர்கள்

சுவாமிகளின் தலைமையில் சர்வமத ஒற்றுமையைப் பிரகடனம் செய்தனர். இது இன்னொரு சரித்திர நிகழ்ச்சியாகும்.

ரிஷிகேசத்தில் கங்கைக்கரையில் ஒரு தனித்த குடீரில் இருந்துகொண்டு இந்தப் புனித முனிவர், மக்களால் ஆண்டவனின் அவதாரமெனப் போற்றப்படும் மகாத்மா, உலகெங்கிலுமுள்ள மக்களுக்குச்சந்தோஷத்தைத் தந்தருளி யுள்ளார். இப்பொழுது ஐரோப்பா, அமெரிக்கா முதலிய அயல்நாடுகளில் ஆயிரக்கணக்கானவர்கள் அவருடைய செய்தியை ஆர்வத்துடன் படிக்கின்றனர். எல்லா ஐரோப்பிய—இந்திய மொழிகளிலும் சுவாமிகளின் உயர் நூல்கள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. அயல் நாட்டி லுள்ள மக்கள் அங்கிருந்து கொண்டே சுவாமிகளைத் தரிசனம் செய்யவும், அவருடைய உயரிய சொற்களை ஆச்சரியப்படுமளவில் கேட்கவும் செய்யுமளவில் அவரிடம் தெய்வீகச் சக்திகள் செறிந்து விளங்குகின்றன. இருப் பினும், அவரை நீங்கள் சந்திக்கும்பொழுது குழந்தைகட்கு மத்தியில் உலாவும் மற்றோர் குழந்தையைப்போல் நீங்கள் அவரைக் காண்கின்றீர்கள். சுவாமிகள் குழந்தைகளுடன் பேசிப் பாடி விளையாட விரும்புகிறார். ஏன், தெரியுமா? "இளமையிலேயே மக்கள் ஆத்மீய விழிப்பைப் பெற வேண்டும்", என்று சுவாமிகள் கூறுவதே அதன் காரணம்!

இந்தத் தெய்வீகாம்சமான ஸ்ரீ சுவாமி சிவானந்தர் இளமையுடனும், இளமையுணர்ச்சியுடனும் பலகாலம் வாழ்வாராக! அவர்களின் நல்வாழ்த்துக்கள் உங்கள் அனைவர் மீதும் மலர்வதாக!



# நமது குருநாதர்
# பூவுலகின் கண் கண்ட கடவுள்

( டாக்டர் சிவானந்த சுந்தரி, திருநெல்வேலி )

ஆச்சிரமத்தில் குருநாதரின் புனிதமான பாதகமலங்களில் சேவை செய்து வந்த அந்த நன்னாளைக் குறித்துத் தான் எப்பொழுதும் நான் எண்ணி வருகிறேன். நமது மதிப்புக்குரிய குருதேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்தரிடம் நான் கொண்டுள்ள எண்ணங்களை ஒரு சில வரிகளில் எழுதுவதற்கு என்னுள்ளிருக்கும் ஏதோ ஒன்று என்னை வற்புறுத்தியது.

பற்பல தடவைகளிலும் என்னுடைய சகோதர சகோதரிகள் நமது குருதேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்தரிடம் நான் கொண்டுள்ள எண்ணங்களைத் தெரியப்படுத்த என்னை வேண்டினார்கள். ஒவ்வொருவரிடமும் "சுவாமிஜியே பூவுலகின் கண் கண்ட கடவுள்" எனப் போற்றுவதாகத் தெரிவிதது வந்தேன். சுவாமிகளைப்பற்றி யார் என்ன தெரிவிக்க முடிந்தாலும் அதுவே மிகச் சிறந்ததாக விளங்குகிறது. அவரே கடவுள். பகவான் கிருஷ்ணர் கீதையில் தெரிவிப்பது போல், அத்திரிமுனிவர் அவரது ஸ்மிருதியில் தெரிவிக்கிறார்: "........—கடவுளுக்கு இரண்டு வகையான தோற்றங்களுண்டு. ஒன்று நகர்ந்து செல்வது. மற்றது நகராத்தன்மையது. நகர்ந்து செல்லும் தோற்றமே சன்யாசி.

நகராத்தன்மையதே கோவிலில் வழிபடும் விக்ரகம்."
சிவானந்த ஆச்சிரமத்தில் நமது குருதேவர் தான் நகர்ந்து செல்லும் கடவுள். விசுவநாதர் ஆலயத்தில் உள்ள விக்ரகம் தான் கடவுளின் அசையமுடியாத தோற்றம்.

குருதேவருடன் தெய்வ நெறிக் கழகத்து அங்கத்தினர் என்ற முறையில் நெருங்கிப் பழகிய பின் ஏழு வருடங்கள் ஆகின்றன. முதன் முதலாக 1948ல் நவராத்திரி விழாவின் முதல் நாளில் சுவாமிகளின் தரிசனம் எனக்குக்கிடைத்தது. அவரது திருப்பாதங்களில் விஜயதசமி நாள் வரையிலும் தங்கி வந்தேன். அதற்குப் பிற்பாடு இதுவரையிலும் குரு தேவருக்கு நான் ஒரு கடிதமும் எழுதவில்லை. "இந்த வருடம் நான் ஆச்சிரமத்திற்கு சென்றிருந்தபொழுது சுவாமிகளே இதைக் குறிப்பிட்டார்கள். எதையும் எழுது வதற்கான அவசியம் எனக்கு ஏற்படவில்லை. ஏன்? குரு தேவர் எப்பொழுதும் என்னுடனேயே இருக்கிறார் என்ற எண்ணம் அன்று முதல் இன்றுவரையிலும் இருந்து வருவ தனால்தான். அதுதான் 1948ல் விஜயதசமி நாள் மாலையில் அவரைவிட்டுப் பிரிந்து வந்தபொழுது நான் பெற்ற பேறு.

எப்பொழுதெல்லாம் நல்லுரைகளும் தைரியமும் எனக்குத் தேவையாக இருந்ததோ அத்தகைய பல சந்தர்ப் பங்களிலும் எனக்கு சுவாமிஜியின் திருஉரு தரிசனம் கிடைத்து வந்தது; விழித்துக்கொண்டிருக்கும் பொழுதும், உறக்கத்திலும், சுவாமிஜியின் அன்பான வார்த்தைகளை நான் உண்மையாகவே கேட்டிருக்கிறேன். சரீரத்தால் குரு தேவரிடமிருந்து இரண்டாயிரத்துக்கும் அதிகமான மைல்கள் தூரத்தில் நான் இருந்தாலும் சாவகாசம் கிடைக் கும்பொழுதெல்லாம் மானசீகமாகவும் சுவாமிகள் அன்பு

கூர்ந்து அனுப்பிவைத்த புஸ்தகங்கள் என்னை ஆச்சிரமத்தில் தங்கி அவருடனேயே இருந்து வரும் சீடர்களுள் ஒருவராக எண்ணச் செய்தன. கடவுளின் கிருபையால் இந்த வருடம் (1954)ஆச்சிரமத்திற்குச் சென்று 47 நாட்கள் சுவாமிஜியின் புனித பாதங்களில் தங்குவதற்கான பாக்கியம் பெற்றிருந்தேன். என்னை ஆத்மீகப் பாதையில் குருதேவர் அழைத்துச் செல்வதற்கு முன்னுள்ள ஒழுக்கப் பயிற்சிக்கான காலம் தான் சென்ற ஆறு வருடங்கள் என்பதை நான் திரும்பி வந்தபொழுது உணர்ந்தேன். சுவாமிஜியின் பாத கமலங்களில் நான் அடைந்த சாந்தியும், ஆனந்தமும் சொல்லுதற்கெளிதன்று.

ஆச்சிரமத்தைப் பற்றியோ, குருதேவரைத் தலைவராக கொண்ட தெய்வ நெறிக் கழகத்தைப்பற்றியோ, சிறிது சொல்வதென்றால் இந்த ஆறு வருடத்தில் அது வியக்கத் தகுந்த முறையில் முன்னேறியுள்ளது என்பதாகவே கூற முடியும். உயரிய தெய்வீக சக்தி தான் இந்தக் குறுகிய காலத்திற்குள் இவ்வளவு பெரிய மாறுதலை ஏற்படுத்த முடியும். ஆதலால் குருதேவரே பூவுலகத்தின் கண் கண்ட கடவுள் என்பது என் நம்பிக்கை.



# சிவானந்தரின் சீரியபோதனைகள்

1. படைப்பின் சரித்திரம் முழுவதும் மனதிலே செதுக்கப் பட்டிருக்கிறது.
2. கரிய சிந்தனைகள் பற்பல பயங்கரத் தோற்றங்களைக் கொள்ளும்.
3. ஆத்மானுபூதியே உயரிய லட்சியமாகும்.
4. தீய விருத்திகளுடன் உங்களை ஒன்றுபடுத்தாதீர்கள்.
5. சுயநலமில்லாத சேவையாகிய சீரிய லட்சியத்தின் மேல் உங்களுடைய வாழ்க்கையை அமையுங்கள்.
6. ஒவ்வொரு சுயநலப்பற்றின்றிய செய்கையும் அன்பு, உள்ளத் தூய்மை இவற்றின் வெளிப்படுகையே.
7. மனித சமுதாயத்தின் நலனில் ஈடுபட்டவன்தான் கடவுளின் மிகச்சிறந்த அன்புக்குப் பாத்திரமானவன்.
8. சுயநலமற்ற, கடமையுணர்ச்சியுடைய மனிதனே சாந்தியை யுடையவன்.
9 உங்கள் மனத்தைக் கடவுள் சிந்தனையால் போஷியுங்கள்.
10. கடவுள், மனித சமுதாயம் இவர்களின் சேவைக்காக உங்கள் வாழ்கையைத் தயார் செய்யுங்கள்.
11. அன்பே அகில உலக மதம்.
12 இந்த உலகில் அன்பினுல் ஆகாததொன்றுமில்லை.
13. உள்ளத்தூய்மையில் நிலைபெற்றவனிடம் எல்லாக்குறை களும் பலவீனமும் தானுகவே மறைந்துவிடும்.
14. ஒழுக்கமே மனிதனின் முதுகெலும்பு.
15. பணிவு, காலந்தாழ்த்தாமை, தூய்மை இவை ஒழுக்கத்தின் மூன்று அம்சங்களே.
16. சக்தியையும் பலத்தையும் உள்ளிருந்தே பெறுங்கள்.
17. பணிவுதான் உங்களது வழிகாட்டி.
18. ஆத்மீக அறிவு அல்லது மெய்யறிவே சிறந்த செல்வம்
19. நித்தியனையறிபவன் மரிப்பதில்லை.
20. தன்னையறியும் அறிவை அறியாது இருப்பவன் அதிர்ஷ்டமில்லாதவன்; அதிகமாகத் துன்பமுறுகிறவன்.

21. அகில உலகத்தின் ஜோதிதான் ஆத்மா.

22. ஒவ்வொரு தூண்டுதலும் உங்களது ஆத்மீக பலத்தின் சோதனையே.

23. ஒவ்வொரு கஷ்டமும் உங்களது கடவுள் நம்பிக்கையின் சோதனையே.

24. உங்கள் மனதை நன்றாகக் கட்டுப்படுத்துங்கள்.

25. தன்னையறிவதுதான் எல்லோரையும் தெரிவது.

26. கோபத்தை மன்னித்தலாலும், பேராசையைத் திருப்தியாலும் அடக்குங்கள்.

27. காமவலையில் விழுந்தவன் மானிடவாழ்க்கையையும், தெய்வீக வாழ்க்கையையும் இழந்து விடுகிறான்.

28. சமயமே மிகச்சிறந்த வரப்பிரசாதம்.

29. தரித்திரர் சேவையே சீரிய சமயமாகும்.

30. கேடுற்ற மனமே உங்களது பெரும் பகைவன்.

31. தூய எண்ணம், சொல், செயல் மூலமாக பிரம்மசரியம் தன்னை வெளிப்படுத்துகிறது.

32. உள்ளத் தூய்மையே கடவுளையடைவதற்கான வாதிலாகும்.

33. ஆத்மீகவாழ்க்கையே ஆத்மானுபூதிக்கான திறவுகோல்.

34. தன்னலமற்ற தொண்டினால் மனதைத் தூய்மைப் படுத்துங்கள்.

35. தன்னம்பிக்கையைக் கொள்ளுங்கள்.

36. ஆத்மாவின் உணவே தெய்வீக அன்பு.

37. மிகத்தாழ்ந்த ஜீவனையும் தன்னைப்போல் நேசி.

38. ஆத்மீக அறிவுடையவன் உண்மையில் சிறந்தவன்.

39. அன்பு கடும்சித்தமுடையவனையும் இளகவைக்கிறது.

40. தனது மனத்தை அடக்கியவனுக்கு ஒவ்வொரு மனத்தினதும் ரகசியம் தெரிகிறது.

41. மயக்கமுற்ற மனமே ஆத்மீக அமுதத்தைத் திருடிய திருடனாகும்.

2. வைராக்கியத்தால் மனதை வெல்லுங்கள்.





# முன்னுரை.

## சிவானந்த யோகத்தின் சிறப்பியல்புகள்.

உல்லாசத்தின் உயரிய செழுமை, கொண்ட கொள்கையை நிறைவேற்றத் தன்னையே தியாகம் செய்யும் உணர்ச்சி, அன்புடன் தோன்ற அளவிலாத் திறமை, ஒறுத்தாரைப் பொறுத்து இன்னாசெய்தாரை மன்னித்து அருளும் மட்டற்ற மாண்பு, உதவிபெறுவோரின் தகுதியைக்கருதாது தன் கட்டுப்பாடுகளையும் தகர்த்தெறிந்து அனைவருக்கும் தொண்டு செய்யும் தளராத ஊக்கம் — இவையனைத்தும் ஸ்ரீ சுவாமி சிவானந்தருடன் சேர்ந்து தோன்றியவை. வாழ்க்கையின் பல்வேறு நிலைகளிலும் இவைகளே அவரது செயல்களின் சிறப்பினங்களாகத் திகழ்ந்தன. இக்குணங்களின் காரணமாகவே மாணவப் பருவத்தில் ஆசிரியர்களின் அன்புக்குப்பாத்திரமானார்; தோழர்களின் தலைவரானார்! இந்தியாவிலும் மலையாவிலும் டாக்டராகப் பணியாற்றியபோது இந்தக் குணங்கள் மக்களின் நன்மதிப்பையும் பேரன்பையும் அவருக்கு அள்ளிக் கொடுத்தன. பிற்காலத்தில் பெரும் மாறுதலைத் தோற்றுவித்து அவரை மாபெரும் மகாத்மாவாக விளங்க வழிவகுத்தனவும் இக்குணங்களே!

சின்னாட்கள் சென்று சிவானந்தர் ஸ்தாபித்த தெய்வீக வாழ்க்கையின் அஸ்திவாரத்தை ஆக்க உதவிய மூன்று மகாமந்திரங்கள் அம்முறையே தோன்றின. அத்தகைய அஸ்திவாரத்தின் மீது ஆத்மானுபூதி என்ற தெய்வீக மாளிகையை எழுப்புவதற்கு நான்காவதொன்றன் உதவியும் தேவைப்படுகிறது. அவை தாம் முறையே சேவை, அன்பு, ஈகை, தியானம் என்பன.

நாம் நன்கு சிந்தித்துப் பார்க்கவேண்டிய விஷயம் ஒன்றுண்டு. அது என்ன? சிவானந்தருக்கு அவரது கையைப் பிடித்து அழைத்துச் செல்லவும், அவர் செய்யும் குற்றம் குறைகளைத் திருத்தவும், அவரது பேறுகளைப் பெருக்கவும் முன் நின்று வழிகாட்டிய குரு யாரும் கிடையாது. அவரைச் சன்னியாச ஆசிரமத்திற்கு அழைத்துச் சென்ற சுவாமிகள், சிவானந்தரைப்போன்ற ஒருவர் சீடராகக் கிடைப்பது குரு செய்த தவப்பயனே என எண்ணி நின்றார்; அத்துடன் விழிப்படைந்த நம் சுவாமிகளுக்கு வேண்டிய போதனைகளை அளிப்பதிலும் தயங்கவில்லை. இதே போல் இன்னொரு பண்பும் சிவானந்தரிடம் நாம் காணவேண்டியதொன்று. புத்தக யோகமோ வேதாந்த நூல் ஆராய்ச்சியோ சுவாமிகளிடம் பெருமளவிலே பதிந்து நிற்கவில்லை. யோகமும் வேதாந்தமும் அவர்களுக்கு வாழ்க்கை வாழ்வதற்காக என்றே புலப்படுகிறது; அஃதின்றி மனப்பாடம் செய்வதற்குரியதோ அல்லது பல்வேறு கருத்துக்களைத் தெரிந்து கொள்வதற்கோ அல்ல!

சுவாமிகள் பெருமளவிலே படித்திருக்கிறார்கள் என்பதும் அவற்றைவிட அதிகமாக எழுதியிருக்கிறார்கள் என்பதும் உண்மைதான். அவர்கள் சதா சக்தி வாய்ந்த ஞானி

பாக விளங்கி வருகிறார்கள். தன்னுடைய வாழ்க்கையை ஆராய்ச்சிக்கூடமாக மாற்றினார். தெய்வீக வாழ்க்கையைக் கண்டுபிடித்த வாழ்க்கை விஞ்ஞானியாக சிவானந்தர் விளங்கி வருகிறார்! தனது மாபெரும் ஆராய்ச்சிகள் அனைத்தும் பிறவியிலேயே தனக்கு நாப்பெற்ற பெரும் சக்தி வாய்ந்த கருவிகளின் உதவியினால் செய்யப் பெற்றவை. அன்பு ததும்பும் உள்ளத்தின் தெய்வீகப் பரிசுகள், அள்ளி அள்ளிக் கொடுக்கும் கை, சுறுசுறுப்பான சுபாவம், இவைகளே அந்தக் கருவிகள். இந்தக் குழுவில் நான்காவதாக 'தியானம்' என்பது எப்பொழுது, எப்படி வந்து சேர்ந்தது என்பதைச் சிவானந்தரால் கூடத் தெரிவிக்க முடியவில்லை. எவன் ஒருவன் தொடர்ச்சியாகத் தன்னலமற்ற சேவை, பேரன்பு, இடைவிடாத ஈகை, இவற்றில் ஈடுபட்டு நிற்கின்றானோ, அவன் தியானத்தில் தான் சிறந்து விளங்குவதை உணர்வான் என்ற உண்மையைச் சுவாமிகள் உறுதியுடன் கூறி வருகிறார். அத்தகைய தகைமை வாய்ந்தவன்தான் உண்மையான முறையில் தியானத்தில் ஈடுபட்டுச் சிறப் பெய்த முடியும். மற்றவர்களும் அதற்காக முயற்சி செய்ய முனையவேண்டும். தியானத்தின் விளைவே ஆத்மானுபூதி.

சேவை, அன்பு, தியானம், ஆத்மானுபூதி என்ற நான்கும் சிவானந்தரின் வாழ்க்கை, சாதனைகள் ஆகிய இவற்றின் அடிப்படைத் தத்துவங்களாக அமைந்துள்ளன. இவற்றுள் சேவையும் அன்பும் சேர்ந்து அமைந்த ஒரு சிறிய செயலே 'கொடுத்தல்' என்பது. இத்தனையும் சேர்ந்ததே சிவானந்தரின் சிறப்பான கண்டு பிடித்தம். அன்றியும் 'சம்பூர்ண யோக'த்தின் பலனும் அதுதான். இந்த நான்கு மகாவாக்கியங்களையே கொள்கைகளாகக் கொண்டுள்ள **தெய்வநெறிக் கழக**த்தின் வித்தும் அதுவே.

இந்த நான்கும் ஆத்மானுபூதிக்கான நான்கு சிறந்த பாதைகள் என்பதில் சந்தேகமில்லை. சேவை கர்மயோகத்தின் சாரத்தை நமக்கு அறிவுறுத்துகிறது. அன்பு நமது முக்கிய கடமையை நினைவூட்டுகிறது. ஆண்டவனை உள்ளன்போடு ஆத்மார்த்தமாக நேசிக்கவேண்டும் என்ற கடமையை அன்பு நமக்கு எடுத்துரைக்கிறது. இதைத்தான் பராபக்தி என்றும் சொல்லுகின்றனர். பதஞ்சலியின் அஷ்டாங்க யோகத்தில் தெரிவித்துள்ள ராஜயோக சாதனையைக் கடைப்பிடிக்க நம் அனைவரையும் தியானம் அழைக்கிறது. நித்தியத் தன்மை வாய்ந்த உயரிய ஆத்மாவின் ஜோதிரூபமான நீங்கள்தான் பேரானந்த ஊற்று, இன்பக்கடல், சாந்தியும் சக்தியும் சேர்ந்து நிற்கும் தடாகம் என்ற உண்மையை ஆத்மானுபூதி உணர்த்துகிறது.

மகிமை பொருந்திய இந்த நான்கு மகாவாக்கியங்களை சிவானந்தரின்சம்பூர்ண யோகமான‘**சிவானந்தயோகத்**’தை வெளிப்படுத்துகின்றன. இவற்றின் மீதுதான் பாரனைத்தும் பரந்து நிற்கும் **தெய்வநெறிக் கழகம்** சுவாமி சிவானந்தரைத் தன் தலைவராகக் கொண்டு பெருந் தொண்டாற்றி வருகிறது. கழகத்தைப் பாராட்டுவதிலும், சிவானந்தரின் சம்பூர்ண யோகத்தைப் போற்றுவதிலும் முனைந்து நிற்கும் நாம் இவையனைத்தும் சுவாமிகளின் சொந்த வாழ்க்கையின் விளைவு என்ற உண்மையை மறந்துவிடக்கூடும். ஆனால் நாம் அனைவரும் அவர்கள் செய்துள்ள பயிற்சியின் பலனை அடையவேண்டும் என்பதே சிவானந்தரின் விருப்பம். சுவாமிகள் இத்துடன் நிற்கவில்லை. அவரது சம்பூர்ண யோகத்தைக் கடைப்பிடித்து நாமனைவரும் அவரைப்போல் பூர்ணயோகிகளாகத் திகழ வேண்டும் எனவும் சுவாமிகள் எண்ணுகின்றார்.

# சிவானந்தரின் லட்சியம்.

*எத்தகைய சாதனைகளை இயற்றி எவ்வகை ஆத்மானு பூதியைப் பெற்றார் என்பதைத் தெரிவிக்க சிவானந்தரை நாங்கள் வேண்டினோம். அவர் தெரிவித்த உண்மை எந்த ஒரு சாதகனது கண்களும் உண்மையாகவே திறக்கக்கூடிய அளவில் அமைந்துள்ளது. நாங்கள் எல்லோரும் உயிருள்ள படிகத்தின் முன் ஊமையராய் நின்றுவிட்டோம் என் பதை உணர்ந்தோம்.*

"அதிகமாகப் பேசுவதாலும், சர்ச்சை செய்வதாலும், கேள்வி கேட்பதாலும் பலன் ஏற்பட முடியாது. முழு மனதுடன் நீங்கள் செயலில் ஈடுபடவேண்டும். ஜாலவித்தையால் ஆத்மானுபூதியைப் பெற்றுவிடலாம் என எண்ணி ஏமாறுதீர்கள். நன்கு சிரமப்படவேண்டும். எங்கும் நிறைந்த அறிவாக ஆண்டவன் விளங்குகின்றார். இந்த மிக அருகிலுள்ள உண்மையை உணர்வதே நமது லட்சியமாக இருக்க வேண்டும். நீங்கள் ஆண்டவனைப் பார்க்க முடிகிறதில்லை. ஏன்? உங்கள் உள்ளம் கருங்கல் போன்று கடுமையாக இருப்பதால் தான்! அது வெண்ணெய் போன்று உருகிவிடவேண்டும். ராஜஸ தாமஸங்களால் உண்மையானது மூடப்பட்டிருக்கிறது. தாமஸத்தைத் தொலைத்து, ராஜஸத்தை இல்லாதாக்கி, சாத்விகத்தை வளர்க்கவேண்டும். அப்பொழுது நீங்கள் கடவுள் தன்மை பொருந்தியவராய்க் கடவுளைக் கண்டு களிப்பீர்கள் !!

கடவுள் ஒருவர்தான் என்ற உண்மையை நீங்கள் உணருகின்றீர்களா? எல்லாவற்றுடனும் நீங்கள் ஒன்றி நிற்பதை

உணருகின்றீர்களா ? உங்களது உள்ளத்தில் உறைந்து கிடக்கும் அழுக்காறு, பகைமை, கோபம், நம்பிக்கையின்மை, பற்றுதல் இவற்றின் தன்மையை என்னென்று சொல்வது? இவைகளைத் தொலைத்துக் கட்டினாலன்றி மற்றவற்றுடன் நமக்குள்ள ஒருமைப்பாட்டை உணர முடியாது.''

*சுவாமிகளது மேற்கூறிய பொருள் பொதிந்த வாக்குகள் அஸ்திரம் போன்று அகத்தே பாய்ந்து எங்களது அஞ்ஞானத்தைத் அகற்றி நின்றன. மிகவும் வலிமை வாய்ந்த அத்வைதியின் முன் நாங்கள் நின்றுகொண்டிருப்பதைத் திடீரென உணர்ந்து கொண்டோம். அம்முனிவர் தனது ஒவ்வொரு நிமிட வாழ்க்கையிலும் ஒருமைப்பாட்டையும் ஒற்றுமையையும் வெளிப்படுத்தி வருகிறார்! எந்த வாழ்க்கையின் வாசனையானது தெய்வீகமாகத் திகழ்கிறதோ, அத்தகைய தெய்வீக வாழ்க்கையில் வாழ்ந்து வழிகாட்டி வருகின்றார்கள் சுவாமிகள்.*

*இத்தகைய உயரிய நிலையை சுவாமி சிவானந்தர் எப்படி எய்தினார் என்பதை நாம் அனைவரும் தெரிந்துகொள்ள வேண்டுவது அவசியமல்லவா? ஆம்! பின்வரும் செய்திகளிலிருந்து உண்மையைத் தெரிந்து கொள்வோமாக.*



# அத்தியாயம் 1

## ஹட யோக சாதனை

1. அன்றாட யோகாசனப்பயிற்சி சிவானந்தருக்கு இளமை உணர்ச்சியை ஊட்டுகிறது.

2. சுவாமிகளிடம் நிலவி நிற்கும் அபார சக்திக்குக் காரணம் பிராணாயாமம்தான். அதுவே அவரிடமுள்ள மனோசக்தி, ஞாபகசக்தி ஆகிய இவற்றின் இரகசியமுமாகும்.

# யோகாசனங்கள்

உடல்நிலை எப்படியிருப்பினும், யோகாசனப் பயிற்சியைச் சுவாமிகள் ஒருநாள் கூடப் புறக்கணிப்பது கிடையாது. "நான் இந்தச் சரீரமல்ல", என்னும் வேதாந்தத் தேற்றத்தைத் தவறுதலாகக் கையாளுவதிலிருந்து சாதகர்களைச் சுவாமிகள் அடிக்கடி எச்சரித்திருக்கிறார்கள்.

ஒரு சில நூல்களின் உதவியுடன் சிரசாஸனம் முதலிய சில முக்கிய ஆசனங்களைப் பழகுவதற்குச் சுவாமிகள் மலயாவிலிருக்கும்பொழுது தொடங்கினார். அவரது ஆர்வம் அடுத்தவரையும் ஆர்வம் கொள்ளச் செய்தது. சமையல்காரர் திரு. நரசிம்மய்யரும் ஆசனங்களைச் செய்ய ஆரம்பித்தார். (பல வருடங்கட்குப் பிறகு இந்தப் புனித ஆத்மா தனது எஜமானனைத் திரும்பவும் அடைந்து சுவாமி சிரத்தானந்தர் என்ற பெயருடன் துறவியாகித் தொண்டு செய்த பின் 1952-ல் சிவானந்தரின் திருவடிகளிலேயே முக்தியையும் அடைந்தது.)

இளமையிலிருந்தே சுவாமிகள் உடற்பயிற்சி செய்வதில் நன்கு தேர்ச்சி பெற்றிருந்தார். 'பார்' விளையாட்டில் பிறருடைய உதவியின்றி மிகவும் கடுமையான வேலைகளையும் எவ்வளவு நன்றாகச் செய்து வந்தார் என்பதை அவர்களின் உடற்பயிற்சி ஆசிரியர் திரு. சாம்பசிவய்யர் இன்றும் நன்கு ஞாபகத்தில் வைத்திருக்கிறார். சுவாமிகளின் உடற்பயிற்சித் திறமை ஆசிரியரின் உள்ளத்தில் உயரிய இடத்தை உண்மையாகவே ஏற்படுத்திவிட்டது எனலாம். அதன் காரணமாகவே ஆசிரியர் தானில்லாத நேரம் சுவாமிகளைக்கொண்டே உடற்பயிற்சி வகுப்பை நடத்திவரச் செய்தார்.

சரீர ஆரோக்பம் சாதனைக்கு இடையூறாக இருக்க முடியாது என்பதோடு அதுவே அதற்கு உறுதுணையாகவும் அமைகிறது என்ற விஷயத்தை அன்று போல் இன்றும் சுவாமிகள் சொல்லி வருகின்றார்கள். சாதனையைத் தொடங்குவதற்கான காலம்கடந்துவிட்டது என நினைக்கவேண்டாம். சுவாமிகளே தனது முப்பதாவது வயதில்தான் யோகாசனப் பயிற்சியில் ஈடுபட ஆரம்பித்தார். எந்த ஒரு நிலையிலும் அதை விட்டுவிட வேண்டும் என்பதில்லை. நோய்வாய்ப் பட்டிருக்கும் பொழுதும் ஏதாவது சில யோகாசனங்களைப் பழகுதல் வேண்டும். ஆனால் அப்பொழுதுள்ள உடல் நிலைக்குத் தக்கவாறுள்ள ஆசனங்களையே பழக வேண்டும்.

முழு சிரசாஸனம் செய்ய முடியவில்லை என்றால் 'முயல்' தோற்றம் (தரையிலே குனிந்து தலையின் உச்சியைத் தரையோடு சேர்த்துவைத்துக்கொண்டு முதுகெலும்பை ஒரு கமான் போன்று வளைப்பது) போதுமானது. இதுவும் விரும்பத்தக்கதல்ல என்றால், படுக்கையில் படுத்தபடியே தலையைச் சிறிது நேரம் கட்டிலிலிருந்து கீழே தொங்கவிட்டால் போதுமானது. ஆனால் ஆசனப்பயிற்சி செய்யாமல் சுவாமிகள் ஒரு நாள்கூட இருந்ததில்லை.

## உடற் பயிற்சிகள்

சிவானந்தரின் அன்றாட வாழ்க்கைத் திட்டத்தில் யோகாசனப் பயிற்சியைப்போல் சில உடற்பயிற்சிகளும் இடம் பெறுகின்றன. "உறங்கி எழுந்தவுடன் படுக்கையில் இருந்தபடியே ஐந்தே நிமிடங்களில் இந்த உடற்பயிற்சிகளைச் செய்துவிட முடியும்," என்கிறார் சுவாமிகள்.

பத்மாஸனத்தில் அமர்கிறார். முன் பக்கமாக குனிகிறார். பிறகு பின் பக்கமாக முதுகெலும்பை இரு கைகளாலும் தாங்கியவாறு வளைகிறார். மறுபடியும் உட்காரும் நிலைக்கு வருகிறார். அதற்குப்பின் உடலை வலது பக்கம் ஒரு முறையும் இடது பக்கம் ஒரு முறையும் வளைத்து கொடுக்கிறார்.

கால்களை முன் பக்கமாக நீட்டி உட்கார்ந்து கொண்டு கால்முட்டைச் சிறிது வளைத்துக் கைகளால் கால் கட்டை விரல்களை இறுகப் பற்றிக்கொண்டு, முதுகின்மேல் முன்னும் பின்னும் உருளத்தொடங்குகிறார்!

படுக்கையை விட்டு எழுந்திருந்தவுடன், சுவரின் மேல் சாய்ந்து கொண்டு எளிய முறையில் முதுகெலும்பை வளைத்துப் பல பயிற்சிகளை நின்றுகொண்டே செய்கிறார்கள். யாவரும் இவைகளை எளிதிலே செய்ய முடியும். இவைகளால் ஏற்படும் பலனோ அளவு கடந்தவை.

## பிராணாயாமம்

சுவாமி சிவானந்தர் பிராணாயாமத்தின் சிறந்த போஷகர் என்பதை நாம் கருத்தில் கொள்ளவேண்டும். தன்னுடைய அலுவல்கள் மிகுந்த நாளிலும் பிராணாயாமத்துக்காகப் பல மணி நேரம் பயன்படுத்தப்படுவதுதான் சுவாமிகளிடம் காணக்கூடிய அதிசயிக்கத்தக்க அம்சமாகும்.

தன் சீடர்கள் அனைவரும் அதிகாலையில் நான்கு மணிக்கே எழுந்திருக்க வேண்டும் என்று கூறுகின்ற சுவாமிகள் மூன்று மணிக்கும் முன்னதாகவே துயிலெழுகின்றார்கள். உடனேயே ஒரு மணி நேரத்துக்கு மேல் பிராணாயா

மம் செய்கிறார். அவர்கள் பிராணாயாமம் செய்யும்பொழுது 'ஓம்' என்ற பிரணவத்தையும் மனனம் செய்துகொண்டே இருக்கின்றார். சாதாரணமாக அவர்கள் செய்து வருவது சுகபூர்வகப் பிராணாயாமமே. இருப்பினும் பனி காலத்தில் ஒரு சில தடவை பாஸ்திரிகப் பிராணாயாமமும், வேனிற் காலத்தில் சிறிது சிதாலிப் பிராணாயாமமும் செய்து வருகிறார்கள். காலைச் சிற்றுண்டிக்குப் பின் மறுமுறையும் அரைமணி நேரத்திற்குக் குறையாமல் பிராணாயாமத்தில் ஈடுபடுகிறார். இதேபோல் நடுப்பகலில் அலுவலகத்திலிருந்து திரும்பியவுடன் அரைமணி நேரம் பிராணாயாமம் செய்கிறார். மாலையில் மறுபடியும் அப்படியே. கடைசியாக ஒவ்வொரு நாளும் இரவு படுக்கைக்குச் செல்லும் முன் ஒரு முறை பிராணாயாமம் செய்வதில் முனைகிறார். இப்படித் தன்னுடைய அலுவல் நிறைந்த நாளிலும் நான்கு மணி நேரத்தை இந்த முக்கிய சாதனையை இயற்றுவதில் சுவாமிகள் ஈடுபடுத்தி வருகிறார்கள்.

சிவானந்தரின் லட்சியம் சம்பூர்ண யோகமே என்பது குறிப்பிடவேண்டிய ஒரு விஷயமாகும். அதில் உடற்பயிற்சிக்கும் இடமுண்டு. அதேபோல் பிராணாயாமமும் இடம் பெறுகிறது. முக்கியத்துவத்தின் தன்மை மட்டும் வித்யாசப்படுகிறது. பிராணாயாமம் நமது உடலிலே உள்முகமான சக்தியை உண்டாக்குகிறது; மேலும் மனதில் சாந்தியையும் சந்தோஷத்தையும் வளர்ச் செய்கிறது. இதே காரணத்தினால், யோகாசனம், உடற்பயிற்சி முதலியவற்றுக்கு ஒதுக்கப்படும் காலத்தைவிட அதிக நேரம் பிராணாயாமத்தை அப்யசிப்பதில் பயன்படுத்தி வருகிறார்கள் சுவாமிகள். சிவானந்தரின் யோகம் 'பொது அறிவு யோகமாக' விளங்குகிறது.

## நன்மைகள்

யோகாசனப் பயிற்சியும் பிராணுயாமமும் தொடர்ந்து செய்து வருவதன் காரணமாக அறுபத்தொன்பது வயது டைய சுவாமிகள் இருபத்தெட்டு வயதுடைய வாலிபனைப் போல் வேலையில் ஈடுபட்டு வருகிறார்கள். இது நமக்கு மிகுந்த ஆச்சரியத்தை உண்டாக்கும் என்பதில் ஐயமில்லை. சன்யாசியாவதற்கு முன்னதாகத் தான் டாக்டராகப் பணி யாற்றிய பொழுது மலாயா — இந்தியா மக்கட்குத் தன் சக் தியை இடைவிடாது கொடுத்து உதவி வந்தார் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. கல்லூரியை விட்டபின் ஒரு வினாடி கூட அவர் வீண் பொழுது போக்கியது கிடையாது. 'அம்ப்ரோஷியா' என்ற வைத்திய இதழை நடத்துவது என் பது வயதில் சிறிய வைத்தியருக்கு எளிய செயலன்று. சிவா னந்தர் எப்பொழுதும் ஆர்வத்தின் உறைவிடமாகவே விளங் குகிறார். வரப்போகிற பல வருடங்களைவிட அவருக்கு அப்பொழுதைய அந்த நிமிடமே அதிக விலையுள்ளது. அத் துடன் தான் செய்யும் திருப்பணியில் தனக்கென வைத்துக் கொள்ளாமல் உள்ளத்தையும் அதனுள்ளிருக்கும் ஆத்மாவை யுமே அர்ப்பணம் செய்து விடுகிறார்.

1950ம் வருடத்திய அகில இந்திய யாத்திரையின் போது ஒவ்வொரு நாளும் ஐந்து அல்லது ஆறு கூட்டங் களில் சுவாமிகள் சொற்பொழிவாற்ற வேண்டியிருந்தது. அந்தக் கூட்டங்களில் எல்லாம் சிவானந்தர் பேசினார்; பாடி ஞர்; ஆனந்தக்கூத்தாடினார்! இப்படி அவர் செய்தது அவ ரது வாழ்க்கையின் தத்துவம் அதுதான் என்பதை உணர்த் தியதோடு சொற்பொழிவைச் செவிமடுப்போர்க்குத் தன்

உயிரையே அளிக்க முன் வருவதாகவும் தோன்றிற்று. இவற்றைத் தவிர இன்னும் பல சிறிய கூட்டங்களையும் ஸ்தாபனங்களையும் பார்வையிட்டார். அந்த இடங்களிலும் பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடும் பொதுக்கூட்டங்களில் காட்டிவந்த அதே ஆர்வத்துடன் சொற்பொழிவு ஆற்றவும் சங்கீர்த்தனம் செய்யவும் செய்தார் சுவாமிகள். ஒரு குடும்பத்தின் நாலு பேரடங்கிய மிகச்சிறிய கூட்டத்திலும் தெய்வீக வாழ்க்கையின் நற்செய்தியைப் பரப்ப முனைந்தார் சுவாமிகள்! திவ்ய நாமத்தின் பெருமையையும், சமயபோதனைகளின் சாரத்தையும் அவர்கட்கு எடுத்துக்கூற முயன்றார். கூட்டம் சிறியதாக இருந்தாலும் அதையும் ஐம்பது லட்சம் மக்கள் சேர்ந்த கூட்டத்தில் பேசுவது போன்ற எண்ணத்துடன், ஓர் அரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தும் முறையில், சொற்பொழிவாற்றி வந்தார்! இவ்விஷயமனைத்தும் இன்று பொதுவாக யாவரும் அறிந்ததே.

மலயாவில் இருக்கும்பொழுதும், அதற்கு முன்பும், எண்ணற்ற நண்பர்களின் வேலைகளைத் தானே சிரமேல் கொண்டு செய்து வந்தார். இந்தகைய உயரிய தன்மை அவருடன் பிறந்ததே. சேவை செய்யும் ஆர்வத்தில் தனது சக்தியின் ஒவ்வொரு சிறு பகுதியையும் உபயோகித்து வருவார். சன்யாசம் பெற்ற அதே முப்பத்தெட்டாவது வயதில் சுவாமிகளைத் தவிர வேறு யாராக இருந்தாலும் வயோதிகத் தன்மையை அடைந்திருப்பார்கள்.

ரிஷீகேசத்தில் சுவாமிகளை எதிர்நோக்கியிருந்த வாழ்க்கை மலயாவில் செலவு செய்த சக்தியைத் திரும்பவும் பெறும் வகையில் அமையவில்லை. புகழ் இல்லாத நிலை, பட்டினி, பழக்கத்திற்கு மாறுபட்ட உணவு, எதிர் நின்ற

சக்தியையும் சிதறடிக்கும் சூழ்நிலைகள் முதலியன சிதைந்த சக்தியை மீட்டுவருவதற்கு மாருக முதுமைப் பருவம் வளர வழிகோலும் வகையிலிருந்தது.

நிலைமை மேற்கூறிய வகையில் அமையாமல் நேர்மாருக அமைந்தது. ஏழு வருடங்கள் கடுந்தவம்புரிந்த பின் 1930ம் வருடத்தில் முதன் முதலாக யூ. பி. பீஹாரில் நடைபெற்ற கூட்டங்களில் பேசும்பொழுது சுவாமிகளிடம் மக்கள் இளமை பொருந்திய யோகியைக் கண்டனர்! ஆத்மீக சக்தி, முதுமையை வென்று சோர்வைச் சிதைந்த அச்சக்தியோ டிணைந்த அருமையான தொனி, இவைகளுடன் தோன்றிய யோகியை மக்கள் கண்டு மகிழ்ந்தனர்!! உள்ளடங்கின ஆத்மீய சக்தியின் இத்தகைய திடீர் தோற்றத்திற்குக் காரணம் பிராணுயாமம், தியானம், ஜபம் என்னும் மூன்றுமே என்ருலும் பிராணுயாமமே முக்கியமானது எனச் சுவாமிகள் கருதுகிருர்கள்.

சிவானந்தரின் சொற்களில் சொல்லுதற்கரிய சக்தி சேர்ந்திருக்கிறது. அச்சக்தி அவரது இதயத்திலிருந்து, ஆத்மாவிலிருந்து தோன்றுகின்றது. ஒவ்வொரு பேச்சுக்குப் பின்னும் சுவாமி ராமதீர்த்தர்உயிரற்றவராகவே திரும்புவார் என்று அவரது சொற்பொழிவுகளைக் கேட்டவர்கள் கூறுகிருர்கள். இத்தகைய சோர்வுக்குக் காரணம் அவர்தாம்சொல்லும் ஒவ்வொரு சொல்லுக்காகவும் தன் உயிரையே அர்ப்பணித்து வந்தார் என்பது தான். இதே நிலை தான் சுவாமி சிவானந்தரிடமும் நிலவி நிற்கிறது. இத்தகைய நிலை முந்நாட்களில் அவர்கொண்ட பிரசார யாத்திரையிலேயே நின்று நிலவியது.

அவர் கூறும் வார்த்தைகள் எல்லாம் சக்தியே. 1930ம் வருடத்தில் சிதாபூர் உயர்நிலைப் பள்ளியிலே நடைபெற்ற கூட்டத்தில் சுவாமிகள் பேசினார்கள். அந்தப் பள்ளிக் கூடத்தில் படித்து வந்த மாணவன் ஒருவன் சுவாமிகளின் சொற்பொழிவைக் கேட்டபின் ஒரு சிறு கடிதத்தை எழுதி வைத்துவிட்டு வீட்டைவிட்டு எங்கோ சென்றுவிட்டதாக அந்தப்பையனின் பெற்றோரிடமிருந்துச் சுவாமிகட்கு,அவர் ரிஷீகேசம் திரும்பியதும், கடிதமொன்று வந்து சேர்ந்தது. "எனது உண்மையான பிதாவாகிய சுவாமி சிவானந்தரைச் சந்திக்க நான் செல்கிறேன்!", என்று தான் விட்டுச் சென்ற கடிதத்தில் அந்தப் பையன் தெரிவித்திருந்தான். அத்தகைய விழிப்பையும் மாறுதலையும் சிவானந்தரின் சொற்கள் ஏற்படுத்திவிட்டன. அது மட்டுமா? 1950ல் அகில இந்திய யாத்திரையின்போது சுவாமிகள் சிதம்பரம் வந்து சேர்ந்தார் அங்கு அவர் நிகழ்த்திய சொற்பொழிவைக் கேட்ட டாக்டர் ராய் என்பவர் தனது சொந்த ஜோலியை உடனே உதறித் தள்ளிவிட்டு, சுவாமிகளின் சீடராகி விட்டார்! அவர் தற்பொழுது ரிஷீகேசத்தில் சிவானந்தாச்சிரமத்தின் வைத்திய அதிகாரியாகப் பணியாற்றி வருகிறார்!

அன்றாட ஹடயோகப் பயிற்சியானது சுவாமிகட்கு நல்ல ஞாபக சக்தியையும் அஷ்டாவதானம் செய்யும் அளவு கடந்த ஆற்றலையும் அளிக்கிறது. பிராணாயாமம் நாடிகளைச் சுத்தப்படுத்தி மனதைப் பலப்படுத்துகிறது. மனோசக்தி வலுவடைகிறது. சுவாமிகளின் ஞானயோகமும் சக்தி வாய்ந்தது. ஒரே சமயத்தில் நான்கு பேர்களிடம் இன்ன இன்ன வேலைகளை அவர்கள் செய்யவேண்டும் என்பதற்கான வழிவகைகளைத் தெரிவிக்க அவரால் இயலும். ஆனந்த குடீருக்கு விஜயம் செய்யும் ஒவ்வொரு நபரும் சுவாமிகளின்

மனதில் 'ரிஜிஸ்டர்' செய்யப்பட்டு விடுகின்றனர்! பல வருடங்கள் பிந்தி வந்தாலும் சிவானந்தர் அந்த நபரைப் பார்த்த மாத்திரத்திலேயே புரிந்துகொண்டு விடுவார்!!

அகில இந்திய யாத்திரையின் போது அன்று மைசூர் முதன் மந்திரியாக இருந்த திரு. கே. வி. ரெட்டியை பங்களூர் விமான நிலையத்தில் சந்தித்துச் சில விநாடிகள் அவருடன் சுவாமிகள் உரையாடினார்கள். அவ்வளவே தான்! இரண்டு வருடங்கள் கழிந்து 1952ல், இந்திய சர்க்கார் மந்திரியாகப் பணியாற்றி வரும்பொழுது, திரு. கே. வி. ரெட்டி டெல்லியிலிருந்து ரிஷீகேசத்திற்குக் காரில் சென்று கொண்டிருந்தார். "சுவாமிஜியால் என்னை அடையாளம் கண்டுகொள்ள முடியும் என்று என்னால் நம்ப முடியவில்லை. அவர்களை இரண்டு வருடங்களுக்கு முன்னால் ஒரு சில விநாடிகள் நான் சந்தித்துப் பேசியிருக்கிறேன். யாத்திரையின்போது ஆயிரக்கணக்கான மக்களை அவர் சந்தித்திருப்பார். மேலும் அன்று நான் வேறு விதமான உடையும் அணிந்திருந்தேன்", என்று அவர் தனது நண்பரிடம் கூறிவந்தார். ஆனால் அவர்களின் நண்பரான ராவ்பகதூர் திரு. ஜி. எம். மோடி சிவானந்தரின் சீரிய ஞாபக சக்தியை திரு. ரெட்டிக்கு எடுத்துக் கூறினார்கள். ரிஷிகேசத்தை அடைந்து, ஆச்சிரமத்திற்குச் சிறிது தூரத்தில் இருவரும் சென்று கொண்டிருக்கும் பொழுதே, "வருக! வருக!! திரு. ரெட்டி மஹராஜ்! வருக!!" என்று சுவாமிகள் அவர்களை வரவேற்று உபசரித்தார்!

வருடங்கள் பத்தானாலும் ஒருவர் சொல்லிய சொற்களைக் கூட மறவாது சொல்லும் உயரிய ஞாபகசக்தி வாய்ந்த

சுவாமிகள் செய்துவரும் அதிசய நிகழ்ச்சிகள் கணக்கில் அடங்கா. சாது முருகதாசர் 1940-ல் ஆச்சிரமத்திற்கு விஜயம் செய்து பஜனைப் பாடல்களைப் பாடினார். அவர் மறுமுறையும் 1948-ல் ஆச்சிரமத்திற்கு விஜயம் செய்தார்; பஜனைப் பாடல்களைப் பாடலானார். அவர் பாடி முடிக்கும் தருணத்தில், "நாங்கள் பதிவாகப் பாடும் கடைசிப் பாட்டான 'அஸதோ மா ஸத்கமய' என்ற பாட்டைப் பாடுங்கள்!", என்று சுவாமிகள் சொன்னதும் முருகதாசருக்கு மிகுந்த ஆச்சரியம் உண்டானது. எட்டு வருடங்கட்கு முன்னால் தான் பஜனையில் கடைசியாகப் பாடிய அதே பாட்டை சுவாமிகள் எப்படித்தான் ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருக்கிறார் என்பதை அவர் எண்ணி எண்ணி வியந்து நின்றார்!!

இத்தகைய முக்கியத்வம் வாய்ந்த ஞாபக சக்திக்குக் காரணம் பிராணாயாமம், தியானம், ஜபம் என்ற மூன்றுமே என்றாலும், அவற்றுள் பிராணாயாமமே அதிமுக்யத்வம் வாய்ந்தது என்பதாக சுவாமிகள் கருதுகிறார்கள்.

சிறந்த சரீர அமைப்பு, அதிசயிக்கக் கூடிய சக்தி, சக்தி நிறைந்த தொனி, அனைவரும் ஆச்சரியப்படும்படியான ஞாபக சக்தி, மற்றும் இளமை, முதலிய பலன்களை ஹடயோக சாதனையின் விளைவாகச் சுவாமிகள் பெற்றிருக்கின்றார்கள்.



# அத்தியாயம் 2

## கர்மயோகம்

1. ஈடு இணையற்ற ஈகையே சிவானந்தரின் இயற்கையான கொள்கை.

2. சுயநலமின்றிச் சேவை செய்யும்பொழுது ஜாதி, இன, தேச வித்தியாசங்களை அவர் மனதில் கொள்வது கிடையாது.

3. பணி செய்வதில் மேன்மையானதென்றும் கீழ்த்தரமானதென்றுமுள்ள பாகுபாடு அவரிடம் கிடையாது.

4. தன் உயிரையே திருணமாக மதித்துச்சேவை செய்யும் ஆற்றல் அவரிடம் உண்டு.

5. இரக்கம், பொறுமை, தியவற்றைக்காணேன் என்ற உறுதிப்பாடு, இவைகள் தாம் அவரது சேவையின் சிறந்த அம்சங்கள்.

6. சன்யாசம் அல்லது சேவையின் ஆணவம் என்பதை அவரிடம் அணுவளவும் காண்பது அரிது.

7. எல்லோருடைய கருத்துக்களையும் அவர் மதிக்கிறார். ஆனால் பொதுஜனக் குறை கூறலுக்கு அவர் பயப்படுவது கிடையாது.

8. பிணியாளர் சேவை, அகதிகள் சேவை, சாதகர்களின் சேவை இவைகளே அவரது சேவையின் விசேஷ அம்சங்களாகும்.

9. முனிவர்களைத் தயாரிக்கும் ஒரு கருவியாக சுவாமிகள் விளங்குகின்றார்கள்.

10. 'நாராயண பாவம்' அவரது சேவையின் முக்கியாம்சமாக அமைந்துள்ளது.

11. ஆதலால் அவர் எல்லோருடைய உள்ளத்தையும் கொள்ளை கொண்டுவிட்டார்!



# சேவையின் அம்சங்கள்

கர்மத்தின் விளைவான அழிபொருளே இந்தச் சரீரம். சாதனை செய்வதற்கு இந்தச் சரீரம் சிறந்ததோர் கருவியாக இருக்கிறது. ஆனால் அது ஒரு கருவிதான்! அதைப் போற்றவேண்டும். எனினும் அதுவே வாழ்க்கையின் லட்சியம் அல்ல!

பிராணாயாமத்தினால் மனதைப் பலப்படுத்த வேண்டும். அங்ஙனம் செய்வதனால் மனோ வேகத்தை அடக்குவதற்கும் அதிலுள்ள அமுங்கி நிற்கும் வாசனைகளை இல்லாதாக்கவும் இயலும். ஆனால் மனதைப் பலப்படுத்துவதே வாழ்க்கையின் லட்சியம் அல்ல!!

இந்நிலைமையில் ஹடயோக சாதனையைச் சிவானந்தர் சேவை செய்வதற்குப் பயன்படுத்துகிறார். அவரை நன்கு உற்று நோக்குவோருக்கு அவரது லட்சியமே சேவையாகத் தென்படக் கூடும். அதுவே உண்மையுமாகும். சிவானந்தர் மக்களுக்குச் செய்யும் தொண்டு ஜீவன் முக்தர்களால் மட்டுமே செய்ய முடியும். அவரது ஜோதிமயமான ஆத்மாவிற்குக் காயமும் மனமும் அடிமைகளாகித் தன்னுடைய பல்வகைத் தோற்றமான பல கோடி ஜீவராசிகளுக்குத் தொண்டு செய்யக் காத்திருக்கின்றன.

தியான அவஸ்தைக்குச் செல்வதற்கு முதற்படியாக தூய்மைப் படுத்தும் சாதனையெனச் சாதகனுக்குச் சேவை தெரிவிக்கப்படுகிறது. மலேயா வாழ்க்கையிலும், சுவர்க்க ஆச்சிரமத்திலும் சிவானந்தர் தனது சேவையின் அம்சங்களைச் சாதகர்களை நயிந்துச் செல்வதற்காக விளக்கிக் காட்டியிருக்கிறார்கள்.

## ஈகை

பட்சபாதமின்றி ஈதலே சிவானந்தரின் தனிச்சிறப்பு. இத்தன்மை அவரிடமுள்ள மாற்ற முடியாததோர் குணமே. "சிறு குழந்தையாக இருந்தபொழுதே தனக்குக் கொடுக்கப் பட்டதையெல்லாம் உடனேயே தன் நண்பர்களுக்குச் சுவாமிகள் கொடுத்து விடுவார்கள். அதேபோல் 'அம்புரோஷியா' என்ற பத்திரிகையைத் திருச்சியில் நடத்தும்பொழுது, இலவசமாகப் பிரதிகளனைத்தையும் எல்லோருக்கும் வழங்கி விடுவார்கள். இந்த வழக்கம்வளர்ந்து வளர்ந்து மலேயாவில் இருந்த காலத்தில் உணவு, பொருள், உடை, மருந்து முதலியவைகளை இனாமாக எல்லோருக்கும் கொடுத்துதவும் நிலையை அடைந்தார். அளவின்றி அனைவருக்கும் பாரபட்சமில்லாமல் சுவாமிகள் தர்மம்செய்து வந்தார்கள். அவர்கள் வீட்டுத் திதிக்குச்சென்ற புரோகிதருக்கு வேஷ்டி வெள்ளிப் பாத்திரம் முதலியவற்றுடன் பத்து டாலர் தட்சணையும் கொடுத்துவந்தார் சுவாமிகள். அதே சமயம் மற்ற வீடுகளில் அந்தப் புரோகிதருக்கு இரண்டே டாலர்தான் கிடைத்து வந்தன. ஜோஹோர்—பாஹ்ரூவில் சுவாமிகள் வீட்டுக்கு விஜயம் செய்த ஒரு சாதுவை ராஜோபசாரத்துடன் அவர்கள் வரவேற்றார்கள்! அந்தச்சாது விடைபெற்றுச் சென்றபோது அவருக்கு வேண்டிய மரியாதைகள் செய்த பின் அவர் செல்லவேண்டிய இடத்திற்கான பிரயாணச் சீட்டையும் வாங்கிக் கொடுத்து சுவாமிகள் அவரை அனுப்பி வைத்தார்!", என்று சுவாமிகளின் பூர்வாசிரம உறவினரான திரு. கணபதி சாஸ்திரிகள் கூறினார்.

மலேயாவில் சுவாமிகள் வீட்டில் சமையல்காரராகப் பணியாற்றிய திரு. நரசிம்மய்யர் தனது முதல் மாத

வேலையைப் பார்த்து வந்தார். வேலைக்கு வரும்பொழுது ஒப்புக்கொண்ட சம்பளம் இருபத்தியைந்து டாலர். அடுத்த மாதம் முதல் தேதி சுவாமிகள் அடுக்களையை அவசர அவசரமாக அடைந்து திரு. நரசிம்மய்யரிடம் முப்பத்தி யைந்து டாலரைச் சம்பளமாகக் கொடுத்து நின்றார்! இதைக் கண்ட ஐயருக்கு ஒன்றும் புரியவில்லை!! அவர் வினவும் முறையிலே சுவாமிகளைப் பார்த்தார்! "தீக்ஷிதர் அவர்களே! இது உம்முடைய சம்பாவனை!!" என்று கூறி, "இது போதுமா?", என்று திரும்பவும் கேட்கலானார் சுவாமிகள். இந்தச் 'சம்பாவனை' என்ற சொல்லுக்குப் புனிதமான தொடர்புண்டு. பக்திச் சிரத்தையுடன் செய்யப்படும் வழிபாடே அது. தனது வேலையாட்களுக்குக் கொடுக்க வேண்டிய தொகையைச் 'சம்பளம்', 'கூலி' என்று ஒரு தடவைகூடச் சுவாமிகள் சொல்ல நரசிம்மய்யர் கேட்டதே கிடையாதாம். அந்த நாட்களிலேயே சுவாமிகள் தனது பணியாட்களைத் தனக்குச் சமமாகப் பாவித்து நேசித்தது மட்டுமல்ல, கடவுளாகவும் அவர்களை அவர் எண்ணி வந்தார்! அவர்களுக்குக் கொடுத்ததெல்லாம் கடவுளுக்குச் செய்யப் படும் வழிபாடே என எண்ணினார்!!

## வித்தியாசமின்மை

சிவானந்தரின் சேவையாகிய சூரியன் முன் ஜாதி, இன, நிற, பால் வித்யாசங்களாகிய பனி மறைந்து விடுகிறது. மலேயாவில் டாக்டராகப் பணியாற்றிய பொழுது எல்லா ஜாதி, மத, இனத்தாருக்கும் சுவாமிகள் சமமான சேவை செய்திருக்கிறார் என்பதைச் சொல்லத் தேவையில்லை. சுவர்க்காச்சிரம சாதுவான பிறகு பிணியாட்களின் சேவையே அவரது முக்கிய ஜோலியாக இருந்தது

தன்னிடம் வந்து சேரும் நோயாளிகளின் ஜாதியையோ, இனத்தையோ, தேசத்தையோ அவர் ஒரு பொழுதும் விசாரித்ததே கிடையாது. சிவானந்தாச்சிரமம் எல்லா ஜாதி, இன, மத, தேசத்தார்க்கும் வரவேற்பளிக்கிறது. திரு. கணபதி சாஸ்திரிகளைப் போன்ற மிகவும் வைதீகமான தென்னிந்தியப் பிராமணர்கள், ஆச்சிரமத்தின் நிரந்தர வாசிகளாக வாழ்ந்துவரும் எண்ணற்ற பிராம்மணரல்லாதவர்கள், சென்னையைச் சார்ந்த திரு. சுந்தரம் போன்ற பல கிறிஸ்தவர்கள், அநேக அமெரிக்கர்கள், ஐரோப்பியர்கள், திரு. லிலியானே சமாஷ தம்பதிகளைப் போன்ற யூதர்கள் பலர், திரு. அன்வாருள் ஹசன், டாக்டர் மொகம்மத் ஹமீத் சயித், திரு. சஹீதா போன்ற பல முகமதியர்கள், திரு. ஜால், திரு. ரோதரி போன்ற பார்சிகள் பலர், தாய்லாந்து வாசியான சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ ப்ர பிமலதார்மர் போன்ற பௌத்தர்கள், இவர்கள் அனைவரும் சிவானந்தரால் ஒரே போன்று வரவேற்கப்பட்டு, அன்பும் ஆதரவும் சேர்ந்த முறையில் உபசரிக்கப்படுகின்றனர்.

சேவையை எடுத்துக்கொண்டால் அங்கு பால் வித்யாசம் கூட பாராட்டப்படுவதில்லை என்பது புலனாகும். சிவானந்தர் ரிஷிகேசத்திற்கு வந்து சேர்ந்த காலத்தில், காலி கம்பளவாலா தர்மசாலையில் தங்கியிருந்த தென்னிந்தியப் பெண் ஒருத்தி நோயால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தாள். தர்மசாலையின் அமைச்சர் சிவானந்தரிடம் சென்று மருத்துவ உதவி பெற அந்தப் பெண்ணை வேண்டினார். அந்த மாது சிவானந்தர் இருந்த இடத்துக்கு வந்தாள். சுவாமிகளும் அவளுக்கு வேண்டிய ஒரு சில மருந்துகளைக் கொடுத்தார். பிணியுற்றவர்களின் பாதங்களை ஆண்டவன் திருநாமத்தை உச்சரித்துக்கொண்டே இரண்டு தடவை தடவி விடுவதால்

மருந்தைவிட அதிகமான பலன் கிட்டும் என்ற கருத்தைச் சிவானந்தர் அந்த நாட்களில் மனதில் கொண்டிருந்தார். தன்னையறியாமலேயே சிவானந்தர் இந்தக் கிரியைக்குத் தயாரானார். ஆனால் அந்தப் பெண் மிகவும் நாணமுற்று நின்றாள். மேற்கொண்டு ஒன்றும் செய்யாது சுவாமிகள் குடிருக்குத் திரும்பி வந்துவிட்டார். திரும்பியதும் நடந்த விவரத்தைச் சீடனிடம் தெரிவித்தார். "இந்தப் பெண் விஷயத்தில் நான் செய்யவேண்டிய சேவையைச் செய்யத் தவறியது ஏன்? அவள் எப்படி எண்ணினாலும், அவளது திருப்பாதங்கட்கு சேவைசெய்யும் ஓர் சிறந்த சந்தர்ப்பத்தை யல்லவா நான் நழுவ விட்டுவிட்டேன்? என்னிடமுள்ள ஆத்மா தானே அவளிடமும் நிலவுகிறது? நான் என் கடமையைச் செய்யாது பின் வாங்கியது பிசகு", என்று மேலும் கூறினார். அடுத்தநாள் காலை தன் சீடனுடன் அந்தப் பெண்ணிருக்கும் இடத்திற்குச் சென்றார். அவளுக்கு வேண்டிய மருந்துகளைக் கொடுத்தார். அதற்குப் பின் ஜகன் மாதாவாகிய சாக்ஷாத் தேவி பரமேசுவரியையே தான் அவளிடம் காண்கிறபடியால் குழந்தையாகிய தன்னை அவளது திருப்பாதங்களைத் தடவி விடுவதற்கு அனுமதிக்க வேண்டி நின்றார். மருந்து செய்யாததை இந்த மாந்திரிகத் தன்மை வாய்ந்த கிரியை செய்தது; அவளது கால்வீக்கமும் பிணியும் உடனே பறந்தோடின!

## அவரது முதுகின் மேல்!

• அவசியம் வரும்பொழுது சிவானந்தர் எத்தகைய சேவைக்கும் தயாராகி விடுகிறார். அவரது பரந்த உடலமைப்பும் அசாதாரண பலமும் மிகுந்த நன்மையைச்செய்து வருகின்றன. கங்கையும் வங்காளக்குடாக்கடலும் சேரும்

இடமாகிய கங்காசாகரத்தைத் தரிசிக்க சுவாமிகள் ஒரு தடவை சென்றிருந்தார். அவருடன் அதிக வயதான சிங்கை மகாராணியும் சென்றாள். சிறிது தூரத்திற்கு யாத்திரீகர்கள் கடல் நீரின் வழியே தண்ணீருக்குள் நடந்து செல்ல வேண்டியதிருந்தது. மகாராணியால் அது முடியாத காரியம். உடனேயே சுவாமிகள் சேவை செய்யத் தயாராகி விட்டார். மகாராணி மாட்டேன் என்று கூறியும், அவளைத் தன் தோளில் தூக்கிக்கொண்டு படகில் கொண்டு போய்ச் சேர்த்தார்!

இனியொரு தடவை லக்னௌவிலுள்ள சிங்கை மகாராணியின் அரண்மனையில் ஒரு நிகழ்ச்சி நடந்தது. அங்கு ஒரு சன்யாசினி வசித்து வந்தாள். அவள் நடத்திய பல பூஜைகட்கும் வேண்டிய பொருள் வசதி செய்து அவளை திருப்திப் படுத்த முடியாதென்று மகாராணி கூறிவிட்டாள். உடனே சன்யாசினிக்குக் கடுங்கோபம் உண்டாயிற்று. கோபாக்கினி தலைக்கேறி அவள் தன் நிலை தவறி மூர்ச்சையற்றுக் கீழே சாய்ந்தாள். சிவானந்தர் உடனேயே அவளைத் தன் தோளில் தூக்கிக்கொண்டு அடுத்துள்ள ஆஸ்பத்திரிக்கு சென்று வேண்டிய வைத்திய வசதிகளைச் செய்தபின் திரும்பினார்!

சுவர்க்காச்சிரமத்தில் சிவானந்தர் வசித்து வந்த பொழுது அவரது வயதான சீடரான சுவாமி ஞானானந்தர் நோய்வாய்ப்பட்டிருந்தார். சுவாமிகள் அவரைத் தன் தோள்களில் ஏற்றிக்கொண்டு ரிஷிகேசம் சென்று, அங்கிருந்து லக்னௌவுக்குப் பிரயாணமாகி, அங்குள்ள ஆஸ்பத்திரியில் சிகிச்சைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து வந்தார்.

## அபாயத்திற்கு அஞ்சாமை

தன்னலமற்ற சேவையின் முன் அபாயமே தோன்ற முடியாது. அதுவே தெய்வீகத் தன்மை. அங்கே விசுவாசிகளுக்குச் சிறந்த சுதந்திரம் இருக்கிறது. உயிரில் பற்றுள்ள எவனும் எட்டிப் பார்க்கத் துணியாத இடங்கட்கெல்லாம் மிகவும் தைரியத்தோடு செல்லும் புகழைத் தன் சுவர்க்காச்சிரம வாழ்க்கையின் முதற் கட்டத்திலேயே சுவாமிகள் பெற்றுவிட்டார்கள். காலரா, டைபாயிட் நோயாளிகள் அனைவரும் சுவாமிகட்காகவே ஒதுக்கப் பட்டனர். சுவாமி அனந்தானந்தர் என்பவர் காலராவினால் மிகவும் மோசமான நிலையில் வருந்திக்கொண்டிருந்தார். அவரது குடிசைக்கருகே செல்ல மக்கள் பயந்தனர். சிவானந்தர் அவரது படுக்கையில் இருந்தபடியே அவரைக் கவனித்து வந்தார். தன் கையாலேயே படுக்கையைச் சுத்தம் செய்து, மலமூத்திரங்களை அப்புறப்படுத்தி, நோயாளியின் சரீரத்தையும் கழுவி சுத்தம் செய்து வந்தார்!! திரு. விஜய ராகவாச்சாரியாரின் சீடர் அதே மாதிரி காலராவினால் துன்பப்பட்டுக்கொண்டிருந்தபொழுது சுவாமிகள் தாமாகவே சென்று சேவை செய்யமுற்பட்டார். சுவாமி கல்யாணானந்தர் நம் சுவாமிகளின் சிறியசேவையால் ஆச்சரியமுற்று அவர்கள் குடீரோடு சேர்ந்து இனிமொரு குடீரையும் சுவாமிகட்காகவே கட்டிக் கொடுத்தார்; அத்துடன் தான் எப்பொழுதாவது நோயினால் அவதிப்பட நேர்ந்தால் சுவாமி கல்யாணானந்தர் சிவானந்தரையே அழைத்து வரச்செய்வார்; மற்றவர் எவரையும் அவர் விரும்புவதில்லை. “தங்களது அதிர்ஷ்டத் தக்க சக்தி வாய்ந்த குணம் தரும் கையால் தாங்கள் எதைக் கொடுத்தாலும் அது என்னைக் குணப்படுத்தி விடும் என்பது உறுதி”, என்று கூறுவார் அவர்.

நோயாளிகளின் நாற்றம் பொருந்திய மலமூத்திராதிகளைக் கையிலேந்தச் சிவானந்தரிடம் சங்கோசமே இருந்தது கிடையாது. ஒரு சன்யாசி பிணியால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தபொழுது அவருக்கு மலம் கழியவில்லை. உடனே சுவாமிகள் தனது விரலையே அவரது ஆசனத் துவாரத்தினுள் செலுத்தி மலத்தை வெளியாக்கினார்!!

## சேவையின் சிறப்பினங்கள்

சிவானந்தரின் தன்னலமற்ற சேவையின் சிறப்பினங்களாகிய இரக்கம், சகிப்புத்தன்மை, தீயதைக் காணேன் என்னும் உறுதிப்பாடு இம்மூன்றும் அவர்களிடம் என்றும் நின்று நிலவி வருகின்றன. அவரது இரக்கத்தைப் பெறுவதற்கு எத்தகைய நியதியும் வேண்டுவதில்லை. நிவிருத்திமார்க்கத்தில் ஈடுபடும் எண்ணமின்றி, ஆச்சிரமத்தில் சேர்ந்து பணியாற்றும் மனோபாவமின்றி, உணவு, உடை, உறைவிடம் இம்மூன்றையுமே விரும்பிச் செல்கின்ற பயனான மக்கட்கும் சுவாமிகள் கருணையுடன் உதவிசெய்து வருகின்றார்கள். "நமது அரசாங்கம் இந்தக் கிழவர்களைக் காப்பாற்ற வழிசெய்யவில்லை. ஆதலால் அவர்களுக்கு வேண்டிய வசதிகளை அளித்துக் காப்பாற்ற வேண்டியது எனது கடமை ஆகிறது", என்று சுவாமிகள் ஒரு தடவை கூறியுள்ளார்!

சிவானந்தரின் சகிப்புத் தன்மைக்கு எல்லையே கிடையாது. சன்யாசியொருவர் ஆச்சிரமத்திற்குச் சிறிது சேவை செய்து விட்டுச் சோம்பேறியாக வேலை செய்யாது சுகவாசியாக இருக்கத் தொடங்கினார். சிவானந்தர் அவரிடம் வேலை செய்யுமாறோ, அல்லது ஆச்சிரமத்தைவிட்டு அகன்று சென்று விடவோ சொன்னதில்லை. மாறாக, "அவர் செய்த

சேவைக்கு ஐந்நூறு ஜன்மங்கட்கு அவருக்கு வேண்டிய வசதிகளைச் செய்ய நான் கடமைப்பட்டுள்ளேன்'', என்றார். மக்கள் சேவையில் அவர் எப்பொழுதும் ஈடுபட்டு வருகிறார் என்றாலும் அங்ஙனம் அமையாத மற்றவரிடம் அவர் குறை காண்பது கிடையாது.

சிவானந்தரால் எந்த இடத்திலும் எப்பொழுதும் தீமையைக் காணமுடியாது! அவர் மன்னிக்காத குற்றமும் இருக்க முடியாது! 1950 ஜனவரி 8உ இரவு கீழ்க் குறிப்பிட்டுள்ள சம்பவம் நடைபெற்றது. இரக்கமுடைமையின் விளைவாக ஆச்சிரமத்தில் வசிக்க சுவாமிகள் ஒருவனை அனுமதித்தார். அந்த நபர் ஆச்சிரமத்திற்குத் தொண்டு செய்ததே கிடையாது. நன்றிகொன்ற அவன் தன் மனதிலே பிசாசுக்கு இருக்க இடம் கொடுத்து நின்றான்! கருணையே உருவான சிவானந்தரை துன்புறுத்த வேண்டும் என்ற தீய எண்ணம் மோசமான மனோநிலைமையுடைய அவனிடம் தோன்றிற்று. சிவானந்தர் இரவு சத்சங்கத்திலே ஈடுபட்டு நிற்கின்ற நேரம் இந்தத் தீய மனிதன் ஒரு கூரிய கோடாரியால் சிவானந்தரின் சிரசை நோக்கி மூன்று தடவை ஓங்கி வெட்டினான்! ஆனால் அதிசயம் ஒன்று நிகழ்ந்தது!! சிவானந்தருக்குச் சிறிதளவு கூட காயமேற்படவில்லை!!! அப்பொழுது பஜனைக்கூடம் மின்சார விளக்குகளால் அலங்கரிக்கப்படவில்லை. எனினும் அந்த மங்கிய வெளிச்சத்தில் இந்த மோசக்காரனின் அடாத செயலை அங்கிருந்தோர் அனைவரும் அறிந்து, உடனேயே அவனைப் பிடித்து உதைக்கத் தொடங்கினர். அவன் உயிரே போய்விடும் போலிருந்த அந்தச்சந்தர்ப்பத்தில் சிவானந்தர் தான் ஓடிவந்து அவனைக் காப்பாற்றினார்! அவனை இம்சித்தவர்களைக் கடிந்துகொண்டார். ஏசுநாதரைப் போல் தன்னைத் துன்புறுத்த வந்தவனை விடுவித்துக்

காப்பாற்றினார்! அவனுக்கு எதிராகப் போலீஸில் புகார் செய்யவும் அவர் விரும்பவில்லை. நேர் மாறாகக் கைகளைக் கட்டிக்கொண்டு அவனுக்கு வணக்கம் செலுத்தியவாறு, "திருப்தியானதோ? மேலும் ஏதாவது எனக்குத் தர வேண்டும் என்று விரும்புகிறீர்களோ?", என்று பணிவுடன் வினவினார்! அன்பின் தன்மைதான் என்னே!! அடுத்த நாள் காலை ஆச்சிரம அதிகாரிகள் அவனைச் சொந்த ஊருக்கு அனுப்பத் தீர்மானித்தபொழுது, அவனுக்கு வேண்டிய புது உடைகள், ரெயில்வே கட்டணத்துக்கான பணம், மேலும் அவன் சொந்தச் செலவுக்காகக் கொஞ்சம் ரூபாய், புஸ்தகங்கள் பல, இவற்றையெல்லாம் அன்புடன் அவனிடம் கொடுத்து சுவாமிகள் அவனை வழியனுப்பிவைத்தார். மேலும், ஆச்சிரமத்தை விட்டுச் செல்லும்பொழுது அவனை நோக்கி சுவாமிகள் நமஸ்காரம் செய்தார். இப்படி இந்தக்காலத்தில் வேறு யாராவது நடந்து கொள்வார்களா? "என்னுடைய லட்சிய புருடராக ஜயதேவரையே நான் கொண்டுள்ளேன். ஜயதேவரைக் கொள்ளைக் கூட்டத்தார் சூறையாடினர்; அவரது கைககள் இரண்டையும் துண்டாக வெட்டி அவரைப் பாழும் கிணற்றுக்குள் தூக்கி எறிந்து விட்டனர். தேவர்கள் அவரை வைகுண்டத்துக்கு அழைத்துச்செல்ல விமானத்தைக்கொண்டு வந்து நிறுத்தியபோது, அவர் அதில் ஏற மறுத்துவிட்டார். ஏன் என்று கேட்டனர் தேவர்கள். தனது கைகளை வெட்டித் தன்னைக் கிணற்றினுள் தள்ளிய அந்தக் கொள்ளைக் கூட்டத்தாரையும் வைகுண்டத்துக்கு அழைத்துச் சென்றாலன்றித் தாம் வர முடியாதென ஜயதேவர் தெரிவித்துவிட்டார். இதுவே எனது லட்சியமுமாகும்", என்று சுவாமிகள் [illegible] சபையத்தில் தெரிவித்திருக்கிறார்கள். இத்தகைய அதிசய மூர்த்தியின் திருவடிகளைப் பணிந்து போற்றுவோமாக!

அவரது பாததூளி நமது உள்ளத்தைத் தூய்மையாக்குமென நம்புவோமாக!!

"தீய நடத்தையில் ஈடுபட்டவர்களையும் மரியாதையுடன் நடத்துங்கள். முதலில் அயோக்கியனுக்கு சேவை செய்யுங்கள். வருங்காலத் துறவியாகவே அவனைப் போற்றுங்கள். இதுவே உங்கள் உள்ளத்தைத் தூய்மையாக்குவதற்கும் அயோக்கியனின் நிலையை உயர்த்துவதற்கும் உகந்த வழி," என்கிறார் சுவாமிகள். அத்தகையவர்கட்குத் தொண்டாற்றுவதில் சிவானந்தர் எப்பொழுதும் மிகுந்த அக்கறை கொண்டுள்ளார். "என்னைச் சுற்றி என்னைப் பழித்துத் தூற்றி இம்சை செய்ய முற்படும் ஆட்களே இருக்கவேண்டும் என நான் விரும்புகிறேன். அவர்கட்குச் சேவை செய்து, கல்வி புகட்டி, அவர்களை உயர் நிலைக்குக் கொண்டு வந்து, அவர்களது உள்ளத்தையே மாற்றி அமைக்க வேண்டும் என்பதே என் விருப்பம்", என்று 1934-35ல் சுவாமி பரமானந்தருக்கு எழுதியுள்ள கடிதத்தில் சுவாமிகள் தெரிவித்திருந்தார். தீய நடத்தையுள்ளவர்கள் வெள்ளை ஆடையோ காஷாயமோ அணிந்திருப்பினும் பெருங்கூட்டத்தின் நடுவிலும் அவர்களைக் கண்டுபிடித்து அவர்கட்குச் சுவாமிகள் வணக்கம் செலுத்தி வருவார். அத்தகையவர்கட்குத் தனது புத்தகங்களையும், பணம், உடை முதலியவைகளையும் அள்ளி அள்ளிக்கொடுப்பார். அவர்களை மிகவும் கண்ணியமான முறையில் அவர் அழைப்பார். அவர்களிடம் தான் நடந்துகொள்ளும் தன்மையின் ரகசியத்தைத் தெரிவிக்கும் சுவாமிகள், "அயோக்கியனைச் சன்யாசி என்று கூறிப் பலர் மத்தியில் மரியாதை செய்யுங்கள்; தனது தீய தொழிலைக்கொள்ள அவனுக்கே வெட்கமாக இருக்கும். பன் முறை ஒரு முன்கோபியைப் பார்த்து "சாந்தமூர்த்தி" என்று

அழையுங்கள்! அவனுக்குக் கோபப்படவே வெட்கமாக யிருக்கும்!! ஒரு சோம்பேறியைச் சுறுசுறுப்புடையவன் எனப் பாராட்டுங்கள். அவன் தனது சோம்பலைப் போக்கிச் சீரிய சேவையில் குதித்து நிற்பான். இதுவே நான் கையாளும் முறையாகும். நாம் தெரிவிக்கும் புகழுரைகள் நமது உள்ளத்திலிருந்து தோன்றும் உண்மையின் உருவாக இருக்க வேண்டும். ஒவ்வொரு வார்த்தையிலும் நம் ஆத்மீக சக்தியை உட்செலுத்தி உபயோகிக்க வேண்டும். மோசமான குணத்திற்குப் பின்னால் நல்ல குணம் மனதிலே மறைந்து கிடக்கிறது என்பதை நீங்கள் ஆத்மார்த்தமாக எண்ணி நிற்க வேண்டும். அப்பொழுது இருவரும் பலனடைவீர்கள்," என்று தெரிவித்துள்ளார்.

## தியாகாபிமானத்தின் தியாகம்

*மத நூல்களை நன்கு கற்றவன், தன்னலமற்ற சேவையின் பரந்த தன்மையைப்புரிந்து போற்றுகிறவன், இவற்றை ஓர் அளவு பரிசுத்தமாகச் செய்து விடுவான். சத்வ, ரஜஸ், தமஸ்ஸாகிய முக்குணங்கட்கும் 'கொக்கிகள்' உள்ளன. அவை சாதகனைப் பிடித்திழுத்து உயரிய நிலைக்குச் செல்லாதவாறு தடுக்கின்றன. சாத்விகக் கொக்கிதான் மிகவும் லேசானது; ஆனால் அதைக் கண்டு பிடிப்பது மிகவும் கஷ்டமானது. சன்யாசத்துடன் சன்யாசாபிமானம் சிறந்து தோன்றுகிறது. அது சாதகனை மற்றவர்களைவிட மேலான நிலையில் நடப்பதற்கான அதிகமான சுதந்திரத்தை அளிக்கிறது; ஆனால் அவன் கட்டுப்பட்டவன்! தியாகத்தில் தியாகாபிமானம் தலை தூக்குகிறது. அது மிகவும் மெல்லியதாக இருப்பினும் மிகவும் அபாயகரமானதும் தாண்டிச் செல்ல முடியாததுமாக இருக்கிறது. அது*

போலவேதான் சேவாபிமானமும். அங்கு ஆணவம் அதன் முழுத்தோற்றத்தை எடுக்கிறது. சன்யாசம், தியாகம், சேவையென்ற மூன்றும் அதன் உருவாக மாற்றப்படுகின்றன. இத்தகைய மெல்லிய அபிமானங்கட்கு இடம் கொடாது தன்னைக் காத்து வரவேண்டுவது தன்னையறிய முயற்சிக்கும் சாதகனின் கடமையாகும். தியாகாபிமானத்தைத் தன்னிடம் வரவொட்டாது சுவாமிகள் எப்படித் தடுத்து நிறுத்துகிறார் என்பதைப் பார்ப்போம்.

சுவாமிகள் தனது தியாகத்தை ஒருபோதும்பெரிதாகக் காட்டிக் கொள்ளமாட்டார்; நேர்மாறாக, ஒரு சாதாரண சாதகனின் மிகச்சிறிய தியாகத்தையும் பிரமாதமாகப் போற்றுவதோடு, தனது தியாகத்தைவிடச் சிறந்ததெனப் பாராட்டுவார்! பெரும் செல்வம், வளம் பொருந்திய வாழ்க்கை, அரசபோகம், உயரிய பதவி அனைத்தையும் ஒரே இரவில் துறந்து, கையிலே காசின்றி, வீடின்றி, துறவியாகி விட்ட சுவாமிகள், முப்பது ரூபாய் வருமானமுடைய சாதாரண உத்தியோகத்தை, அடிமை வாழ்க்கையை, ராஜினுமா செய்தவனின் தியாக உணர்ச்சியைப் பெரிதும் பாராட்டுவார்!

கடுமையான பனிக்காலத்திலும் சட்டை அணியாம லிருக்கும் சாதகனைத் தன்னைவிடத் தவசில் சிறந்தவன் எனப் பாராட்டுவார்! அதே சமயம் சுவர்க்காச்சிரம வாழ்க்கையில் தான் கொண்ட கடும் சாதனைகளைத்தெரிவிக்க மாட்டார்! பக்தர்கள் வழங்கிய நல்ல நல்ல கம்பளங்களை யெல்லாம் பிறர்க்குக் கொடுத்து விட்டுத் தான் சாதாரணச் சாக்கின் மேல் படுத்துறங்குவார்! சாதாரண நூலாலான வேட்டியையே உடுத்திக்கொள்வார்! தன்னைச் சிறுமைப்

படுத்துவதற்கென்றே தன்னை ஒரு "ஓவர்கோட் சுவாமி" என்று அழைத்துக்கொள்வார். அதே சமயம் ஒரு இளம் சீடனுக்கு ஓவர்கோட் பரிசளித்துக் கூறுவார்: "இந்த ஓவர்கோட் ஒரு கம்பளத்தை விட வேறானது எனக்கருதாதீர். அவர்கள் கம்பளப் போர்வையில் தங்களை மறைத்துக் கொள்கின்றனர். அது பார்ப்பதற்கும் வேலை செய்வதற்கும் சரியாக இருப்பதில்லை. அதே போர்வையை நன்றாக வெட்டித் தைத்து உபயோகிக்கிறோம்; அதனால் நாம் சௌகரியமாக நடமாடி வேலை செய்ய முடிகிறது".

## கத்தி முனை

இப்பொழுது தோன்றுகிறது கத்திமுனை! இந்த மெல்லிய மத்தியப் பாதை பார்ப்பதற்கும் பின்பற்றுவதற்கும் கஷ்டமானது. ஆணவ மிகுதியால் சமூகக் கட்டுப்பாடுகளை நாம் புறக்கணிப்பது கூடாது. அதே சமயம் சரியெனத் தோன்றுவதைப் பொதுஜனக் குறை கூறலுக்கும் கண்டனத்துக்கும் பயப்படாது தைரியத்துடன் செய்ய முன் வரவேண்டும். "சாதனைகளைத் தொந்தரவின்றிச் செய்து வர ஒரு ஓவர்கோட் அவசியம் என்பதோடு அதனால் மக்கட்கு மிகுந்த சேவையும் செய்ய முடியும் என்று உணர்ந்த பின், மக்கள் குறைகூறுவார்களோ என்ற எண்ணம் மனத்தில் தோன்றுமானால், உடனேயே 'ஓவர்கோட்டை' அணிந்து கொள்ளுங்கள். மக்கள் முதலில் குறை கூறினாலும், வெகு விரைவிலேயே உங்களைப் புரிந்துகொண்டு விடுவார்கள்," என்று சுவாமிகள் கூறுகிறார்கள். சுவாமிகளிடம் பொதுஜனக் குறைகூறலுக்கான பயம் சிறிதுமில்லாததால் குறை கூறலும் இல்லையென்று ஆகிவிட்டது! "எனது சுபாவம் என்ன?", என்பதை இடைவிடாது சுவாமிகள் தன்னைக்

கேட்கும் கேள்வி. "மற்றவர்கள் என்ன நினைப்பார்கள்?", என்பதைப்பற்றி அவர்கள் கவலைப்படுகிறதேயில்லை!

1930-ல், வயதான சிங்கை மகாராணி அடிக்கடி ரிஷீகேசம் வந்துகொண்டிருந்தாள். தெரு வழியாக வெயிலிலே அவள் நடந்துசென்றால் அவளுக்கு உதவியாகச் சன்யாசி உடை அணிந்த சுவாமிகள் குடைபிடித்துச் செல்வார். இதைப் பார்த்த அவரது சன்யாசித்தோழர்கள் சன்யாசாணவத்தால் சுவாமிகளைக் கேலி செய்ய முற்பட்டனர்! இல்லறத்திலுள்ளவர்கள் தனக்குத்தொண்டு செய்ய வேண்டும் என எண்ணாது மகாராணியை அன்னையென எண்ணி அவளுக்குச் சேவை செய்ய முனைந்த மாமுனியை ஏளனம் செய்தனர்!! ஆனால் சிவானந்தருக்குச் சேவை செய்வதற்கான அரியதோர் சந்தர்ப்பமாக அது தோன்றியது. உயிருள்ள கடவுளை வணங்குவதற்கான ஒரு வாய்ப்பென விளங்கியது. அத்தகைய சேவையால் காவி உடைக்கு அதிகமான மதிப்பு அளிக்கப்படவில்லை எனத்தோன்றினும் மிகவும் மரியாதை செலுத்தப்பட்டது என்றால் மிகையாகாது. அவர் செய்தது சரி என்பதைக் காலம் நிரூபித்து விட்டது. தன்னை அறியும் தனிப்பெரும் துறவியாகச் சிவானந்தர் இன்று காட்சியளிக்கிறார்! சன்யாசாணவத்தில் தோய்ந்தவர்கள் புறத்தோற்றத்தையே போற்றி, பொய்யுருவையே பாராட்டி, மாயையே பிரம்மம் என்பதாகக் கொண்டு நிற்பர்!

தனது சொற்பொழிவு யாத்திரையின் போது சிவானந்தர் லக்னௌவிற்குச் சென்று சிங்கை மகாராணியின் அரண்மனையில் தங்கி வருவார். அவ்வயதான மாதிற்கு

சேர்காட் மகாராணி சுவாமிகள் ஸ்திரமாகத் தன் அரண்மனையில் வாசம்செய்ய வேண்டும் என்ற எண்ணத்துடன் அதற்கான ஏற்பாடுகளைச் செய்து வந்தாள். இதையறிந்த ராஜகுரு சிவானந்தர் யாருமறியாமல் அரண்மனையை விட்டு வெளியேறிவிட்டார்! பலவிதக் கஷ்டங்களையும் பொருட்படுத்தாது, யாரிடத்திலும் சொல்லிக்கொள்ளாது, கால் நடையாகவே நடந்து, பல இன்னல்களையும் தாங்கி ரிஷிகேசத்திலுள்ள தனது ஆச்சிரமத்தை அடைந்தார்! நல்ல பனிக்காலமாக இருந்தும் தன்னுடன் ஒரு போர்வையைக்கூட எடுத்துக்கொள்ளாமல், பனியாலும், பசியாலும் வாடி வந்து சேர்ந்தார். எத்தகைய கஷ்டம் நேர்ந்தாலும் சரி, உலகப்பற்றின் இலேசான பிடிப்பிலிருந்தும் தன்னை விடுவித்துக் கொள்ளவேண்டும் என்ற உறுதியான எண்ணத்தைச் சுவாமிகள் கொண்டு விளங்குகிறார்!

வெல்லமுடியாத சன்யாசாபிமானத்தை வெல்வதற்கான வழி இதுதான். சாதனைகளுள் கஷ்டமான சாதனையும் இதுவே. 'அபிமானமின்மை' என்ற போர்வையில் அடங்காமை தோன்றுவதியற்கை. அப்பொழுது குருநாதரின் கிருபையும் ஆண்டவன் அருளும் நம்முன் தோன்றி சாதனையகன்று அபிமானம் எப்பொழுது தலைதூக்குகிறது என்பதை நமக்குத் தெரியப்படுத்துகின்றன.

## சேவையின் பல்வேறு படிகள்

இத்தகைய மறைந்த ஊற்றுத்தான் ஞானம் அல்லது பக்தி. ஒரே ஒரு இடத்திலிருந்தே தோன்றும் கர்மயோகத்தின் ஜலதாரைகள் பரந்த அளவிலே விரிந்து மனித சமுதாய சேவையின் பல்வேறுபடிகளில் பற்பல பலன்களைத் தரும் பணிகளைச் செய்கின்றன.

நாம் இந்தச் சக்திவாய்ந்த தனி நபரின் வாழ்க்கையிலே காண்பதென்ன? தன்னலமற்ற சேவை பல்வேறு கால்வாய்கள் வழியாகப் பாய்ந்து ஆறுதல், சௌகரியம், துன்ப நீக்கம், ஆரோக்யம், சாந்தி, செழிப்பு முதலியவற்றைக் கடவுளின் குழந்தைகளாகிய நம்மனைவருக்கும் அளிக்கிறது என்பதே.

சேவையின் எப்பிரிவிற்குச் சிவானந்தர் அதிகமான அழுத்தம் காட்டுகிறார் என்பதைக் கூறுவது அரிது. ஆனால் சுவாமிகள் வற்புறுத்துவது தகுந்த பாவத்துடன் கூடிய சேவையே என்பது மட்டும் உறுதி. சரியான பாவத்துடன் செய்யப்படும் எந்தச் சேவையும் பிறவற்றைப் போல நலம் பயக்கும்.

இளமைப் பருவத்திலிருந்தே மிக அருகில் பிணிகளையும் அதனால் அவதியுறும் மக்களையும் அதிகமாகக் கண்டு கண்டு வந்ததனால், இன்னும் பிணியாளரின் சேவைக்காகச் சுவாமிகள் தன் உள்ளத்தில் பிரத்யேக இடத்தை ஒதுக்கியுள்ளார். திரு. நரசிம்மய்யர் சுவாமிகளின் மலாயா வாழ்க்கையில் நடைபெற்ற எண்ணற்ற சம்பவங்களைத் தெரிவித்துள்ளார். மற்றொருவனுக்கு வரும் துன்பத்தை சுவாமிஜி எவ்வளவு தூரம் தானும் அனுபவித்து வந்தார் என்பதைக் குறித்து திரு. நரசிம்மய்யர் தெரிவித்த கூற்றுக்கள் பல. அவற்றிலிருந்து அவதியுறும் நாராயணனுக்குச் செய்யும் சேவையை விட மற்றெந்தத் தியாகமும் சிறந்ததல்ல என்பதே சுவாமிகளின் சீரிய கருத்தென நமக்குப் புலனாகிறது. பணிக்காரர்கள் தங்களது தேவைகளைக் கவனித்துக்கொள்ள முடியும்; பெரிய டாக்டர்களை வரவழைத்துப் பிணிகளைத் தீர்த்துக்கொள்வதற்கான முயற்சிகளைச் செய்ய முடியும்.

சிவானந்தர் ஏழைகளின் சேவையிலேயே அதிகமான அக்கறை கொண்டு விளங்குகின்றார். ஏழைகளால் பணம் செலவு செய்ய இயலாது. அதனால் என்ன? தனக்களிக்கப் பட்ட செல்வத்தைக் கொண்டு ஏழைகட்கு இலவச வைத்திய வசதியளிக்கவும் உணவு வகைகளுக்கான வழி செய்யவும் முடிந்ததே என்று சுவாமிகள் மகிழ்ச்சியுற்றார். மலாயாவில் சுவாமிகளுடன் நெருங்கிப்பழகி வந்த நண்பரொருவர் பல வருடங்கழித்து 'ஆனந்தகுடீரத்' திற்கு விஜயம் செய்தபோது சொன்னார்: "சுவாமிஜியின் சிறப்பை அன்று எங்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. அவர்களிடம் அசாதாரணத் தன்மைகள் பல நிறைந்திருந்தன என்பதாக மட்டும் ஓரளவு முடிவு செய்தோம்". தனது சொர்க்காச்சிரம வாழ்க்கையிலும் பிணியாளர்கட்குப் பெரும் சேவை செய்து வந்தார். "சுவாமிகள் எங்குச் சென்றாலும் மூன்று பைகளைத் தன்னுடன் எடுத்துச் செல்வாராம். ஒன்றில் துண்டுப் பிரசுரங்கள், சிறு வெளியீடுகள், குறிப்புப் புத்தகங்கள் முதலியன இருக்கும். மற்றொன்றில் பழவகைகள் பலவும், மூன்றாவது பையில் சாதாரண மருந்துகளும் இருக்கும். பாதை ஓரத்தில், நூற்றுக்கும் மேற்பட்ட இடங்களில் தங்கி அங்குள்ள சாதுக்களையும் கிராமத்தார்களையும் விசாரித்து அவர்கட்கு வேண்டிய மருந்துகளைக் கொடுத்து சிகிச்சை செய்வதோடு நில்லாது சமயப்பிரசுரங்களையும், வெளியீடு களையும், பழங்களையும் சுவாமிகள் வழங்கிச் செல்வார்! சுவர்க்காச்சிரமத்தில் வாழ்ந்து வரும் காலத்தில் ஒரு சில உலர்ந்த ரொட்டிகளும் பருப்பும் சேர்ந்த உணவிலேயே அவர் வாழ்ந்து வந்தார். ஆனால் பால், தயிர், பழங்கள் முதலியவற்றைக் கடையிலிருந்து விலைக்கு வாங்கிப் பிணியால் அவதியுறும் அன்பர்களுக்கு அளித்து உதவி

வருவார்! அவர் ஸ்தாபித்த சத்ய சேவாச்சிரம ஆஸ்பத்திரியில் பிணியாளர்களை நோக்கி சாஷ்டாங்கமாக வணக்கம் செலுத்திய பின்னரே சுவாமிகள் அவர்களுக்கு வேண்டிய சிகிச்சைகளைச்செய்ய முற்படுவார். பிணியாளர்களை நடமாடும் நாராயணனாகவே சுவாமிகள் கருதி வருகிறார்!! இப்பொழுது வாசம் செய்யும் இடத்திற்கு சுவாமிகள் வந்ததும் அங்கே ஒரு நல்ல ஆஸ்பத்திரியையே ஏற்படுத்திவிட்டார். அத்துடன் ஆச்சிரமத்தில் சேரும் ஒவ்வொரு சாதகனுக்கும் பிணியாளனுக்கும் சேவை செய்வதற்கான பயிற்சியும் அளிக்கப்பட்டு வந்தன," என்று சுவாமி தபோவன்ஜி சுவாமிகளைப்பற்றித் தெரிவிக்கையில் கூறினார்.

ஒரு தடவை ராமாசிரமத்தின் முன் ஒரு அகதி படுத்துக் கிடந்தான். அவனை யாரும் ஏறிட்டுக்கூடப்பார்க்கவில்லை. ஆனால் சிவானந்தர் அவனைப் பார்த்து விட்டார். ஆச்சிரமத்திற்கு அழைத்து வந்து தன் சீடர்கள் ஒவ்வொருவரைக் கொண்டும் அவனைக் கவனித்து வரச்சொன்னார்.

பத்ரீ—கேதார் யாத்ரீகர்களை வலுக்கட்டாயமாக நிறுத்தி அவர்களின் காயமுற்ற பாதங்களை 'லினிமென்ட்—டர்பன்டைன்' போட்டு நன்றாகத் தடவி வேண்டிய சிகிச்சை செய்வதுடன் தனது சீடர்களையும் அத்தகைய சேவையில் ஈடுபடச் செய்து அவர்களுக்கு வேண்டிய பயிற்சியையும் சுவாமிகள் அளித்து வருவார்.

இந்தச் சத்சங்கல்பம் தான் மிகவும் நவீன உபகரணங்களுடன் கூடின சிவானந்த இலவச ஆஸ்பத்திரியாக ஆனந்த குடீரில் இன்று உருவாகி வருகிறது.

## அகதிகளின் சேவை

அகதிகளின் சேவையும் இத்துடன் இணைந்ததே. "அவன் எங்குச் செல்வான்? நாமே அவனைக் காப்பாற்ற வேண்டும்," என்ற கூற்று ஆச்சிரம அதிகாரிகளை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. இதையறிந்த பார்வையாளர்களும் ஆச்சரியப்பட்டனர். தன்னையணுகும் அகதிகளின் தேவைக்கான பொறுப்பைச் சுவாமிகள் தாமே ஏற்றுக்கொண்டுள்ளார். இவ்வகதிகளை இறைவனே தன்னிடம் அனுப்பி வைத்திருக்கிறான் என்ற சிவானந்தரின்எண்ணமே இதற்குக் காரணம். இவர்களின் வாழ்க்கைக்கான செலவை ஆச்சிரமம் மேற்கொள்வதெப்படி? இதற்குச் சுவாமிகளிடம் சரியான விடையுள்ளது. "அவர்களை அனுப்பிவைக்கும் ஆண்டவனே அவர்களுக்கான செலவுக்கும் வகை செய்வார்," என்பதே சுவாமிகளின் கூற்று.

அத்தகைய அகதிகளில் அகால மரணமடைந்த பதிகளை விட்டுப் பிரிந்து பரிதவிக்கும் விதவைகள், கணவன் மாமிகளின் கொடுமை தாங்கமாட்டாது ஓடிவந்த பெண்கள், அனாதைகள், கிழவர்கள் முதலானோர் உள்ளனர். எல்லோருக்கும் சிவானந்தர் தான் தாயும் தந்தையும் ஆனார்! சிவானந்தாச்சிரமம் அவர்களுக்கு எப்பொழுதும் வரவேற்பளிக்கிறது. அவர்களுடைய வாழ்க்கை வரலாறுகளைப் பற்றியோ, வாழ்க்கைத் திட்டத்தைப்பற்றியோ சுவாமிகள் யாதொரு கேள்வியையும் கேட்பதில்லை. அவர்களது தேவையைப் பூர்த்திசெய்தே யாகவேண்டும். அவர்கள் ஆச்சிரமத்தில் வந்து சேர்ந்த ஒருசில மாதங்களில் அதிசயம் ஏதாவது நிகழ்வது வழக்கம். அவர்களுடைய உற்றார் உறவினர்கள் அவர்களைப்பற்றி மேன்மையாக எண்ணத்

தொடங்குகின்றனர். 'புண்' ஆறிவிடுகிறது. உடைந்த உள்ளம் சீரடைந்து, சிதறிய குடும்பங்கள் ஒன்று பட்டு இன்பமடையும் காட்சிகள் பலவும் தோன்றுகின்றன. இதன் காரணம் மிகவும் முக்கியமான நேரத்தில் சிவானந்தர் அகதிகளின் முன் தோன்றி அவர்களின் உயிர்களைக் காப்பாற்றுவதுதான்!

## வீரனின் நம்பிக்கை

தங்களது மனம் உடைந்த நிலையில் வாழ்க்கையின் இறுதிக்கட்டத்தில் நின்றுகொண்டு மரணத்தை வரவேற்கும் முறையிலுள்ளவர்களிடம் இது நம்மை அழைத்துச் செல்கிறது. ஆண்டவனின் உயரிய அருள் அவர்களைச் சிவானந்தரிடம் அனுப்பி வைக்கிறது. சுவாமிகளின் திவ்ய காருண்யம் அவர்களுக்குப் புத்துயிர் அளிக்கிறது; அவர்களது வாழ்க்கையில் வியப்பிற்குரிய மாறுதலை ஏற்படுத்துகிறது. அவர்கள் இல்லறத்தில் இருந்தாலும் சரி; அல்லது எல்லாவற்றையும் துறந்து துறவியாக வாழ்ந்தாலும் சரி! அவர்களது சங்கடங்களும் மனச்சோர்வும் என்றென்றும் தீர்ந்து, சாந்தியும் நம்பிக்கையும் அவர்களது வாழ்க்கையில் ஒளி வீசுகின்றன.

இந்தச் சேவையைச் சுவாமிகள் தன் மலாயா வாழ்க்கையிலேயே செய்து வந்தார். உள்ளம் உடைந்து நம்பிக்கையின்றி நின்ற பல இளைஞர்கள் டாக்டர் குப்புசாமியின் (சுவாமிகளின் பூர்வாச்சிரமப் பெயர்) வீட்டிற்குள் அடைக்கலம் புகுந்த நிகழ்ச்சிகள் பலவற்றை திரு. நரசிம்மய்யர் தெரிவித்திருக்கிறார்கள். சுவாமிகளைத் தஞ்சம் புகுந்தவர்கள் தங்களது துன்பத்தைத் தீர்த்துக்கொள்ளத்

தற்கொலை புரியத் துணிந்தவர்கள்! ஆனால் தூய்மையே உருவான டாக்டர் அவர்களனைவருக்கும் துன்பம் நீங்கி நல்வாழ்வுக்கான செவ்விய நெறியைக் காட்டினார். தனது சகோதரர்களைப் போல எண்ணி அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்தார். அவர்கள் மதிப்புடைய வாழ்க்கையை நடத்த வழி வகுத்தார்; சமூகத்தில் சிறந்து விளங்கும் வரையிலும் உதவி செய்ய முற்பட்டார். இன்றும் இத்தகைய தொண்டு தொடர்ந்து நடைபெறுகிறது. சேவை செய்வதற்கென்றே கடவுள் அவர்களைத் தன்னிடம் அனுப்பிவைக்கிறார் என்ற எண்ணமே ஆச்சிரமத்தினுள் அத்தகையவர்களை அனுமதிப்பதற்குக் காரணமாக அமைந்திருக்கிறது.

o

தங்களது நெருங்கிய உறவினர்களை இழந்தவர்கள், அலுவலகத்திலோ சமூக வாழ்க்கையிலோ பெரும் அதிர்ச்சியையடைந்தவர்கள், அனைவரும் சிவானந்தரிடம் சரணடைகின்றனர். சிவானந்தர் அபயம் அளிக்கவில்லை என்றால் அவர்கள் தற்கொலை புரிந்து கொள்வது உறுதி. தங்களைச் சிவானந்தாச்சிரமம் வரவேற்கத் தயாராக இருக்கிறதென்பதை அவர்கள் உணருகின்றனர். சிவானந்தரின் அபயஹஸ்தம் அவர்களைத் தங்கள் கவலையிலிருந்து விடுவிக்கிறது. நம்பிக்கையும் சந்தோஷமும் சேர்ந்த மாபெரும் ஜோதி வானத்திலே தோன்றுகிறது. இத்தகைய பாதுகாப்பை முன்னாளில் ஸ்ரீராமர் தான் அளித்து வந்தார். அவர் தெரிவிக்கிறார்:

"சக்ருதேவப் பிரபன்னய தவாஸ்மீதிச யாசதே
அபயம் சர்வபூதேப்யோ ததாம் யேதத் விரதம் மம."

## சாதகர்களின் சேவை

ஆத்மார்த்தமாக ஆண்டவனை அடையப் புழுவாய்த் துடிக்கும் உண்மைச் சாதகனே சிவானந்தரின் தெய்வம். அத்தகைய சாதகர்களுக்காகவே சிவானந்தர் வாழ்ந்து வருகிறார். அவர்களுக்குச் சிவானந்தர் செய்யாதது ஒன்றுமில்லை. வெகுநாட்கள் குழந்தையின்றித் தவித்த பின் வயது காலத்தில் பிறந்த குழந்தையிடம் அதன் தகப்பனார் தனது அன்பையெல்லாம் அள்ளி அள்ளி வீசி, அக்குழந்தையின் நலனுக்காக மாபெரும் தியாகங்களையும் கைம்மாறு கருதாமல் செய்ய முற்படும் தன்மையைப் போன்ற மகன்—தந்தை உறவே சாதகர்களிடம் சுவாமிகள் கொண்டுள்ள உறவு. இந்த எழுபதாவது வயதிலும் சுவாமிகள் இடைவிடாது, உழைத்து வருகிறார்கள். எதற்காக? ஆச்சிரமத்திலுள்ள சாதகர்கள் சௌகரியமாக வாழ்ந்து, தொடர்ந்து சாதனையியற்றவேண்டும் என்பதற்காகவே சுவாமிகள் பாடுபடுகிறார்கள். உணவு, உடை, உறைவிடம், வைத்திய வசதி முதலிய தேவைகளைப் பற்றிய கவலையின்றி சாதகர்கள் வாழ்ந்துவரவேண்டும் என்பதற்காக முடியுமானால் சுவாமிகள் நாள்முழுவதும் தன்னைத்துன்புறுத்தி நிற்பார்! ஆச்சிரமத்திலுள்ளவர்களில் சிவானந்தரைப் போன்ற உடல் நலம் குன்றியவர் வேறு எவரும் இருக்க முடியாது; இருப்பினும் அவரைப் போன்ற கடும் உழைப்பாளர் வேறு யாரும் இலர்! சாதகன் ஒருவனுக்குச் சாதாரணத் தலைவலி கண்டு விட்டாலும் உடனே அவனை ஓய்வெடுத்துக்கொள்ளச் சொல்வதோடு ஒரு டாக்டரை அனுப்பிச் சிகிச்சைக்கு ஏற்பாடு செய்தபின், இன்னும் சில ஆச்சிரமவாசிகளை அவரது சேவைக்கு அனுப்பி வைப்பார்! சிவானந்தரின் சொந்த நடைமுறைக்கும் வழிகாட்டுதலுக்கும் இடையே

யுள்ள பெரும் வித்தியாசத்தை எடுத்துக் காட்டும் பல அம்சங்களில் இதுவும் ஒன்று. தன்னையே தியாகம்செய்யும் தொண்டில் தன் சொந்த நலத்தைச் சற்றேனும் சிந்தியாமல் சுவாமிகள் செயலாற்றி வருகிறார்கள். ஆனால் மற்றவர் களுக்கு அவர்கள் போதனையோ, "உங்களது ஆரோக்கியத்தைப் பாதுகாத்துக்கொள்ளுங்கள்," என்பதே. உண்மைச் சாதகனிடம் காட்டும் அன்பு அத்தகையது.

அன்பு ததும்பும் தாய் தந்தையர் செய்யாததைச் சிவானந்தர் சாதகனுக்குச் செய்து வருகிறார். சாதகன் ஒருவனிடம் சிறியதோர் திறமை புறத்தே தோன்றினாலும் அத்திறமை சிறப்புற்றுத் திகழவேண்டும் என்பதற்காகச் சிவானந்தர் தன் என்பையும் தியாகம் செய்யச் சித்தமாகி விடுகிறார். மனித சமுதாயத்தின் நன்மைக்காகச் சாதகன் தனது திறமையைப் பூராவாக எப்படிப் பயன் படுத்த முடியும் என்பதற்கான வழிவகைகளைக் கண்டுபிடிக்க இரவும் பகலும் சிவானந்தர் முயற்சி செய்ய முற்படுவார். ஆனந்த குடீரிலுள்ள சில அலுவலகங்கள் இம்முறையிலேயே தோன்றி வளர்ந்துள்ளன. பேப்பர் தயாரிக்கத் தெரியும் என்று கூறிக்கொண்டு ஒரு இளைஞன் ஆச்சிரமத்தில் சேர்ந்தான். அடுத்த நாள் காலை, அவனிடம் அத்தாட்சிப் பத்திரங்களைக் கோராது, அவனது கருத்தைச் செயல் படுத்த பேப்பர் செய்வதற்கான முன்னேற்பாடுகளைச் செய்ய சுவாமிகள் உத்தரவிட்டார்! ஒரு நல்லபாடகன் ஆச்சிரமத்தில் சேர்ந்தான். அடுத்த நாள் ஒரு ஆர்மோனியமும் தபலாவும் சுவாமிகள் புதிதாக வாங்க உத்திரவிட்டார். சிவானந்தர் தாமாகவே இத்தகைய முயற்சியில் ஈடுபடுவதைப் பார்ப் போர்க்கு அவர் மற்றவரின் உதவியை எதிர்நோக்கி நிற்ப தாகவே தோன்றும்! அவ்வளவு தூரம் ஆர்வமுடையவர்

சுவாமிகள்!! நீங்கள் எந்த வேலையில் வல்லுநராக விளங்கு கின்றீர்களோ அதே வேலையை இன்னும் நன்றாகச் செய்வ தற்கான வழிவகைகளை விளக்கிக் கூறும் அளவுக்கு அவரது ஆர்வம் பொங்கி நிற்கிறது. இதேபோல் ஆச்சிரமத்திலுள்ள நிழற்படக்கடலை (போட்டோ) நிலையத்தின் விஷயத்திலும் நேர்ந்தது. ஒன்பது வருடங்கட்கு முன்னால் சுவாமி சாரதானந்தர் ஆச்சிரமத்தில் சேர்ந்தார். அவர் சேரும் பொழுது அவருடன் ஒரே ஒரு படப்பிடிப்புக் கருவி மட்டும் இருந்தது. படக்கலையில் சாரதானந்தருக்குள்ள ஆர்வத்தை அறிந்த சுவாமிகள் உடனேயே அவருக்கு வேண்டிய உதவிகளைச் செய்யத் தாம் காத்துநிற்கும் கருத்தைத் தெரிவித்தார். இந்த சங்கல்பம் சக்தி வாய்ந்ததாக இருந்தது. உடனேயே அந்த சங்கல்பத்தின் எதிரொலியாக திருமதி சாமாச் ஒரு உயர்ரக காமராவைப் பரிசாகக் கொடுத்தாள்! அடுத்தாற்போல் திருமதி கரீனு தனது சிறிய காமிரா வையும் ஸ்டூடியோவுக்கு இனமாக அளிக்க முன் வந்தாள்! சிறிது காலத்தில், கலாநிலையத்தை எம்முறையிலெல்லாம் முன்னுக்குக் கொண்டுவந்து ஆச்சிரமத்துக்குச் சேவை செய்வதற்காகப் பயன்படுத்த முடியுமோ அதற்கான குறிப்புக்களை சிவானந்தர் அவ்வப்பொழுது சுவாமி சாரதானந்தரிடம் தெரிவித்து வந்தார்!

இதைவிட விநோதமானது தான் சிவானந்தர் ஒரு சமையல்காரனை வரவேற்ற விதம்! முதற்பார்வையிலேயே சுவாமிகள் அவனிடம் கூறிய வார்த்தைகள் அவனுக்கு அதிசயமான ஆச்சரியத்தை உண்டுபண்ணின. "இங்கேயே தங்கி, இந்த வட்டாரத்திலேயே ஒரு ஹோட்டலைத் தொடங்கி நடத்துங்கள். அதற்கான உதவிகளை என்னால் ஆனவரையிலும் நான் செய்யத் தயாராக இருக்கிறேன்,"

என்று கூறினார் சுவாமிஜி. இங்ஙனம் தெரிவித்த சுவாமிகள் ஆச்சிரமக் காரியதரிசியிடம் அந்த நபருக்கு ஒரு அறை தயார் செய்து கொடுக்கும்படிக்கும், அவரது புது முயற்சிக்குத் தேவைப்படும் பாத்திரங்களைக் கொடுத்துதவும் படிக்கும் கட்டளையிட்டார். "நீங்கள் ஆச்சிரமத்தில் உணவருந்திக்கொண்டே வியாபாரத்தைச் சொந்த லாபத்துக்குச்செய்து வரலாம்," என்று சுவாமிகள் அந்தச்சமையல் காரனிடம் கூறினார்! சற்று நேரம் கழிந்த பின்னர் சிவானந்தர் தமது கருத்தை விளக்கிக்கூறுகையில் மேலும்தெரிவித்தார்: "ரிஷீகேசத்தில், கங்கைக் கரையில், இங்கு வசிப்பது ஒரு வரப்பிரசாதமேயாகும். என்றைக்காவது ஒரு நாள் உலகத்தைத் துறந்துவிடுவதற்கான எண்ணம் தோன்றும். அதுவரை பொருளீட்டவேண்டும் என்ற அவரது ஆவலைக் கூடப் போற்றுவது நலமாகும்! முதலில் அவரை இங்கேயே வாசம் செய்யச் சொல்லுங்கள்; பிறகு மெல்ல மெல்ல சாதனை செய்யும் முயற்சிக்கு மாற்றிவிடுங்கள்".

அலுவல் துறையிலல்லாது, சாதனைத் துறையிலும் ஒவ்வொரு சாதகனும் முன்னேறிவர அவரவர் சுபாவ விசேஷகுணங்கட்கு ஏற்றவாறுள்ள சூழ்நிலையைச் சிவானந்தர் தோன்ற வழி செய்து வருகிறார். ஒரு சாதகன் தனது சாதனை முறையை மாற்றிக்கொள்ள ஒரு பொழுதும் கட்டாயப்படுத்தப்படுவதில்லை. வேதாந்தம் கற்க நீங்கள் விரும்பினால் உங்களுக்கு வேண்டிய வசதிகள் அனைத்தையும் ஆக்கித்தரச் சுவாமிகள் காத்திருப்பார். உங்களிடம் மற்றெந்த வேலையையும் செய்வதற்குச் சொல்ல மாட்டார். தனித்திருந்து நிம்மதியாகப் படிக்கவும் நீங்கள் அறிவில் சிறந்து விளங்கவும் வழி செய்வார். உங்களது ஞானத்தைப் பலர் அறியப் புகழ்வார்! உங்களை ஒரு பேராசிரியராகவும்

ஆக்கிவிடுவார்!! மற்ற சாதனைகளைச் செய்துவரும் சாதகர்களிடமும் சுவாமிகள் இதேபோல் நடந்துகொள்வார். ரிஷிகேசத்துக்குத் தான் வந்த சிலநாட்களில் தான் அனுபவித்து வந்த கஷ்டங்களை நினைவிலிருத்திக்கொண்டே சாதகர்கட்கு வேண்டிய வசதிகளைச் சுவாமிகள் செய்து வருவார். அங்கு வந்து தன்னிடம் சரண்புகுந்துள்ள அதிர்ஷ்டசாலிகளான சாதகர்கள் தங்களது மனோசக்தியை ஒரு சில சாதாரண வசதிகளைப் பெற்று நலமாக இருப்பதில் வீணாக்குவது கூடாது என்பதில் சுவாமிகள் கண்ணும் கருத்துமாக இருக்கின்றார்கள்.

சுவாமிகளிடம் அடைக்கலம் புகுந்துள்ள சாதகர்கள் அனைவரும் தூய்மையுடையவர் என்று கூறுவதற்கில்லை. மேலும் அவர்கள் நவீன உலகின் விளைவே. அவர்கள் உலகத்தைத் துறப்பதற்கு முன்பே உலகம் அவர்களைக் கொட்டிவிட்டதுடன் தீமை என்ற விஷத்தை உட்செலுத்தி விட்டது. ரிஷிகேசத்துக்குச் செல்லும் பாதையில் எல்லாரும் இந்த விஷத்தைப் போக்கிவிடமுடியாது. அவர்களுக்கு சிவானந்தரின் பிரதியுத்தரம் என்ன? உயரிய நன்மையின் சிறிய ஜோதியான அவரே தான்! அவரிடம் தீமையின் சாயலே கிடையாது. அவர் உங்களிடமுள்ள நன்மையையே காண்கிறார்; தீமையின்மேல் அவர் பார்வை செல்லாது. எல்லோரிடத்தும் அவரவர்க்குள்ள நல்ல தன்மைகள் உள்ளன! சுவாமிகள் தன்னிடமுள்ள உயரிய நற்பண்புகளால் தீமையைத் தொலைத்துக் கட்டுவதன் காரணமாக அதிகமான அத்யாத்மிகப் போர் வீரர்களை ஆத்மிக சேவைக்குத் தேடிக்கொள்கிறார்கள். கெட்ட சாப்பாட்டுப் பழக்கத்தைப் போல், அது வெறும் மேலெழுந்த வாரியாகவுள்ள குற்றமாகயிருந்தால் ஆத்மிகச்

சூழ்நிலையில் சாதகன் அதை வெகு விரைவில் தாண்டி விடுவான். குற்றமானது சாதகனிடம் வேரூன்றி அவனை முன்னுக்கு வரவொட்டாது, அவன் சாதனைக்கு முட்டுக் கட்டையாக இருந்தாலும், சிவானந்தரின் தெய்வீகக் கரங்களின் கருவி என்ற முறையில் அவன் நற்செயலிலே ஈடுபட்டு நிற்பான். அவனது சீரிய செயல் ஆயிரக் கணக்கான மற்றவர்களை உயர்நிலைக்குக் கொண்டுவரும். இதுவே சிவானந்தரிடமுள்ள மாயாஜாலம். அகில உலகமே பழிக்கும் ஒருவனைச் சிவானந்தர் ஏற்றுக்கொள்கிறார்; அவன் விரைவிலேயே மிகவும் பயனுள்ள பிரஜையாக மாறி விடுகிறான்! "உங்களது கருத்தனைத்தையும் அவரது நல்ல அம்சங்களில் ஒருமனப்படுத்தி வளருங்கள்", என்பதே அந்த மந்திரக்கயிறு! இத்துடன் தொடர்பு கொண்ட ஒவ்வொருவருக்கும் மிகுந்த இலாபம் உண்டு. ஒருவனிட முள்ள தீமைக்காக அவனை நிந்திப்பது பெரும் நஷ்டத்தை விளைவிக்கும். அப்படிச் செய்யும் வழக்கம் சிவானந்தருடைய வாழ்க்கையிலேயே கிடையாது. ஒரு அசுரத்தன்மை பொருந்தியவனிடமிருந்தும் கூடச் சிவானந்தர் மிகுந்த வேலையை வாங்கி விடுவார். அப்படி அவன் சற்றேனும் திருந்தவில்லை என்றால் அவனாகவே ஆச்சிரமத்தை விட்டு ஓடிவிடுவது திண்ணம்!

## சன்யாசிகளைத் தயார் செய்தல்.

மனித சமுதாயத்திற்கு ஒரு நல்ல மனிதன் செய்யக் கூடிய மாபெரும் சேவை அவன் தனக்குப்பின்னால் தன்னைப் போன்ற பல உருவங்களை விட்டுச் செல்வதே. இச் சேவையில் சிவானந்தர் எல்லோரையும் வென்றுவிட்டார்! அவர் மிகவும் உயரிய காந்த சக்தி பொருந்திய தத்துவ

ஞானியின் மந்திரக் கல்லாக விளங்குகிறார். எல்லா லோகங்களையும் தன்னிடத்தே அவர் ஆகர்ஷித்து அவைகளைத் தனித் தங்கமாக மாற்றி விடுகிறார்! சுவாமிகள் கல்லையும் வைரமாக மாற்றும் ஆற்றலைப் பெற்றிருக்கிறார்!!

## எப்படி அதை அவர் செய்கிறார்?

தன்னிடமுள்ள துறவின் பெருமையை அனைவரிடத்திலும் அவர் விளங்கச் செய்கிறார். ஒருவனிடம் தங்கக் கூடிய ஆயிரக்கணக்கான தீமைகளைப் புறக்கணித்துவிட்டு, ஏதோ ஒரு மூலையில் தற்செயலாக ஒட்டிக்கொண்டுள்ள ஒரே ஒரு நல்ல குணத்தையே வெகுவாகப் புகழும் தன்மையுடையவர் சுவாமிகள். அவர்கள் யாரையும் பழிப்பதில்லை; யாரையும் அவமதிப்பதில்லை. அவருடைய பார்வையில் உலகில் நற்குணமில்லாத தீயவனே கிடையாது. யாருமே திருத்த முடியாதவர்கள் அல்லர். சுவாமிகளுடைய பார்வையில் நிரந்தர பாவி என்பதே கிடையாது. எங்கும் கடவுளையும் கடவுள் தன்மையையுமே அவர் காண்கிறார். அவரிடமுள்ள திவ்ய சக்தி அவரது பார்வையின் மூலமாக மற்றவர்களிடம் பாய்ந்து அவர்களிடம் உள்ளுறைந்த நல்லதை எழுப்பிவிடுவதுடன், இருக்கும் நற்குணங்களை வலுப்படுத்தவும் வழி செய்கிறது. இதனால் நன்மையடையும் நபர்களுக்குக்கூட இந்த விஷயம் தெரிய முடியாதது.

இந்தப் பணியில் எத்தகைய தியாகமும் குருதேவருக்குப் பெரிதாகப் படுகிறதில்லை. சாதகர்களைப் பயிற்றுவிப்பதிலும் சன்யாசிகளாக்குவதிலும் சுவாமிகட்குள்ள பொறுமை அளவு கடந்ததாக இருக்கிறது. அவர்களிடம் சுவாமிகள் நடந்துகொள்ளும் விதத்திலிருந்து குழந்தைக்

கேற்றவாறு தன்னை அமைத்துக்கொள்ளும் உயரிய தன்மையின் சிறப்பு வெளிப்படுகிறது. தனது உருவமைப்பில் சுவாமிகள் கூற்றுக்குச் சாதகன் இணங்குவதானால் அவன் உண்மையாகவே ஆசீர்வதிக்கப்பெற்றவன்! அவனிடமுள்ள தீமையைத் தெரிவித்தால் அவன் தனது நலன் விரும்பிக் கெதிராகவும் தீமைசெய்ய முற்படுவான்! குருதேவரின் சகிப்புத் தன்மை பலதடவைகளிலும் சோதிக்கப்பட்டது. தான் இளமையிலேயே சன்யாசியாகிவிட்ட இறுமாப்பில் இவனைச் சிறந்த துறவியாக்க வேண்டும் என்பதற்கான சுவாமிகளின் பெரும் முயற்சியை இவன் வரவேற்க மறுத்து விடலாம். செல்லக் குழந்தை தந்தையிடம் கோபித்துக் கொள்ளக்கூடும். ஆனால் குருதேவர் அதைச் சிறிதளவும் பொருட்படுத்தாமல், தனது அன்பை அந்த அறிவு குன்றிய மனிதனிடம் அள்ளி அள்ளி அளித்து அவனது அறிவு பெருக வழி செய்து வருவார்! அப்படியிருந்தும் அந்த நபர் மகாபுருஷரின் பாதுகாப்பிலிருந்து அகன்று சென்று விடலாம். அப்படி அவன் சென்று விடுவதால் ஆணவம், கோபம், பேராசை இவற்றின் வலையில் பட்டு தவறான வழியில் செல்லக்கூடாது என்பதற்காகப் பலவருடப் பொறுமையும் சகிப்புத் தன்மையும் சேர்ந்து கட்டப்பெற்ற அழகிய அரணை ஒரு கணப்பொழுதில் தூள் தூளாக்கி விடுகிறான்! அதே சமயம் அவனது முன்னேற்றத்தில் அதிகமான அக்கறை செலுத்திய குருநாதரும் ஆச்சரியப்படுமளவில் அலட்சிய பாவத்துடன் அவனைவிட்டு அகன்று விடுவார்!

சாதகன் வழிதவறிச் செல்லாமல் இருப்பதற்கும் முன்னேறுவதிலிருந்து பின்னடையாமல் இருப்பதற்கும் குருநாதர் என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராக இருக்கிறார். அவர் மன்னிக்காத மாபெரும் குற்றமும்

இருக்க முடியாது. அதே சமயம் சாதகனைப் பிடித்திழுக்கும் குறை சிறியதாக இருந்தாலும், அல்லது பொருளாசையில் சிக்குண்டு சஞ்சலமடைந்தாலும், குருதேவரே அவனுக்குத் தேவையானதைக் கொடுத்துதவ முன்வந்து அவனை பெரும் வீழ்ச்சியிலிருந்து காப்பாற்றி விடுவார்! இப்படியான சுவாமிகளின் சீரிய செயலால் சாதகன் இன்றில்லா விட்டாலும் இன்னும் சில நாட்களிலாவது தன் குறைகளைத் தாண்டிப் பொருளாசையையும் விட்டு விடுவான். ஆனால் எவ்வகையிலும் சாதகன் சன்யாசத்தை விட்டு அகன்று செல்வதிலிருந்து காப்பாற்றப்பட வேண்டும் என்பதே சுவாமிகளின் சிறந்த நோக்கம்.

௬

இது மிகவும் அபூர்வமாக இருந்தாலும், சாதகன் தனது தவறான முயற்சியில் முழு ஈடுபாடுடையவனாக யிருக்கும்பொழுதுதான் குருதேவர் அதி அற்புதமான வேலையைச் செய்ய முற்படுகிறார். இன்னும் பல பாடங்களைச் சாதகன் பயின்றாக வேண்டும். குருதேவரின் பத்மபாதம் படியும் சுவர்க்கமாகிய பஞ்சசோலையின் ஆசியைப்பெறுமுன் உலகின் சுடும் மணலில் வெறும் காலால் இன்னும் கொஞ்ச தூரம் நடந்து சென்றாக வேண்டும். ஆனால், சாதகனை அப்படிச் செய்வதற்குச் சாந்தமுடன் அனுமதிப்பதற்கு முன்னமேயே, தமது பேரன்பின் அதிருசிய வலையை அவன் மீது விரித்துத் தமது அதிசக்தி வாய்ந்த ஆசிகட்குள் சுவாமிகள் அவனை ஆழ்ந்தி விடுகிறார்! சுவாமிகளின் திருப்பாதங்களில் அவன் அனுபவிக்க அதிக அன்பை, கவலைகளிலிருந்து விடுபட்ட தன்மையை, வேறு எங்கு தான் சாதகன் பெறமுடியும்? அவன் விரைவிலேயே சுவாமிகளிடம் திரும்பி வருவது திண்ணம்.

இப்படிப்பட்ட நபர்களைப்பற்றிச் சுவாமிகள் கேலியாகப் பேசுவதைக்கூட நான் ஒருபொழுதும் கேட்டதேயில்லை. வழிதவறிய சாதகன் திரும்பி ஆச்சிரமத்தை அடைந்தால் அங்கேயே நிரந்தரமாகத் தங்கிவரும் ஏனையச் சீடர்களைப்போலவே சுவாமிகள் அவனையும் பாராட்டி வருவார்! அவர் அவனிடம் நடந்துகொள்ளும் முறையிலிருந்து, அவன் ஆச்சிரமத்திலிருந்து ஓடிச் சென்றவன் என்பதாகவே தோன்றாது! உண்மையிலேயே அவன் ஆச்சிரமத்தை விட்டு அகன்று செல்லவில்லையோ!! ஆம்! எங்குதான் அவன் சென்றிருந்தாலும் குருதேவரின் இதயத்திலிருந்து அகன்று சென்றிருக்க முடியாது!! அவனிடம் குருதேவர் விசேஷப் பிரியத்துடன் நடந்து கொள்வார். அவன் குருதேவரின் சிறந்த அன்பின் வெற்றியின் உயிருள்ள சின்னமன்றோ! சாதகனும் குருதேவரின் வர்ணிக்க முடியாத புகழைப் புரிந்துகொள்வதோடு அவரது அருளுக்கு அதிகப்பாத்திரமாகி அதிவிரைவிலேயே துறவியாகி விடுவான்!

உத்தம அதிகாரி, குருதேவரின் கடைக்கண் பார்வையாலும், ஓரே ஒரு சொல்லினாலும், சீரிய சன்யாசியாகிவிட முடியும். இடை மாணாக்கன் ஆத்மீக அனுபவங்களின் சிறப்பைக் குருதேவரின் சிறிது நாள் பயிற்சிக்குப்பின் உணர முடியும். கடை மாணாக்கனும் விரைவிலேயே சுவாமிகளிடமுள்ள மன்னித்தல், அளவிலாப் பொறுமை, இணையிடற்ற ஈகை, தலையாய அன்பு இவற்றால் மாற்றப் பட்டு விடுகிறான்! தகுதிக்கேற்ற முறையில் சாதகனைப் பகுத்துப் பார்த்துப் பயிற்றுவிப்பது சன்யாசத்திற்கான முன்னேற்றத்தைத் துரிதப்படுத்தும் என்றாலும், சுவாமிகளிடம் அத்தகைய தன்மை அறவே கிடையாது.

சிவானந்தர் எல்லோரையும் சன்யாசிகளாக மாற்றி விடுவார்! பெறுதற்கரிய பேற்றைப் பெற்ற இவ்வரிய சிவானந்த சீடர்கள் மனித சமுதாயத்தின் இணையீடற்ற பொக்கிஷமே ஆவர்!

## கோபாலர் சிவானந்தர்!

ஏசுநாதர் தான் உலகத்துக்கு ஆட்டிடையனின் உவமையை விளக்கிக் காட்டியிருக்கிறார். அதிசயிக்கத் தக்கதும், உண்மையானதும், அன்றாடம் நடைபெறக்கூடிய அளவில் உள்ளதுமான அறிவுடைய ஆட்டிடையனின் உயரிய எண்ணத்தை நடைமுறையில் செய்து காட்டியவர் தான் சிவானந்தர்!

அவருடன் இரண்டு வருடங்கள் வாசம் செய்யுங்கள். சாதகர்களை அவர் பயிற்றுவிக்கும் விதத்தைப் பார்த்து நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். சன்யாச ஜோதியான சிவானந்தருடன் வைராக்யம், விவேகம் என்ற இரண்டு அணிகளையும் பூண்டு சில சாதகர்கள், குருகுல நாட்களில் நடைபெற்றதுபோல், சுவாமிகளின் திருப்பாதங்கட்குத் தொண்டு செய்து வருகின்றார்கள். சாதகர்களுடன் சிவானந்தர் வெகு அபூர்வமாகவே பழகி வருகிறார் என்ற உண்மையை நீங்கள் ஆச்சிரமத்தில் சில நாட்கள் இருந்தால் எளிதிலே தெரிந்துகொள்வீர்கள். அதே போல்தான் சாதர்களும் சிவானந்தரோடு பழகுவது! குருதேவருடன் அவர்களின் தொடர்பனைத்தும் ஆத்மீகத் தன்மை வாய்ந்ததே! அந்நகையவர்கள் வெகு சிலர் தான். சிவானந்தருடன் பழகி அவர்கட்குப் பணிசெய்து வரும் நபர்களில் பெரும்பான்மையோர் அரைகுறைச் சாதகர்களே!

சிலரிடம் ஆத்மீக எண்ணம் சிறிதுகூட இருக்காது. ஆனால் அவர்கள் தங்களது பெரும் நஷ்டங்களால் வீட்டைவிட்டு விரட்டியடிக்கப்பட்டுச் சிவானந்தரிடம் அடைக்கலம் புகுந்தவர்கள். அவர்கட்கு அருள் புரியவில்லை என்றால் தற்கொலை புரிந்துகொண்டு அவர்கள் இறந்துவிடக்கூடும். அவர்களுடைய உள்ளத்திலே சுவாமிகள் வைராக்கியத்தின் விதையை ஊன்றி விடுவார்! ஆச்சிரமத்தில் சேரும் ஒரு இளைஞனிடம் வைராக்யத்தைத் தோற்றுவிப்பதை விட எளிதானது உங்கள் மகனிடம் வைராக்யத்தை நீங்கள் உண்டு பண்ணுவது! சிவானந்தரின் உள்ளம் அன்பினா லாகியது. மோட்ச பதவியை அடைவித்தற்கு மற்றவர்க்குச் சிறிதளவுகூட சிரமத்தைக் கொடுக்காது, நஷ்டத்தை ஏற்படுத்தாது, கட்டுப்பாடுடைய வாழ்க்கையை வற்புறுத்தாது நின்றுவிடுவார்! சாதகர்களின் கஷ்டங்களை அதன் தரத்துக்கு அதிகமாகச் சுவாமிகள் கருதிவருவதைச் சமீபகாலத்தில் பல சந்தர்ப்பங்களிலும் தெரிந்து கொண்டேன். “இந்த மனம் அதிசயத் தன்மைவாய்ந்தது. இதை அடக்குவது எங்ஙனம்? மேலும் இதைத் தாண்டி எப்படிக் கடும் சாதனையிலும் ஆழ்ந்த தியானத்திலும் ஈடுபடுவது? ஒருவன் ஆண்டவனின் பெயரை நாளைக்கு ஒரு தடவைதான் உச்சரித்தாலும், வாழ்நாளிலேயே ஒரு சில நற்செய்கைகளையே செய்துவந்தாலும், எல்லோருக்கும் ஆண்டவன் மோட்ச பதவியை அளிக்க வேண்டும் என்பதே என் அபிப்பிராயம்”, என்று சுவாமிகள் கூறுகிறார். தேவருலகில் மனிதனின் தலைவிதியை நிர்ணயிக்கும் பதவியில் சுவாமிகள் நியமிக்கப்பட்டால், மாயையின் சாம் ராஜ்யத்தை மாய்த்துக் கட்டுவதோடு, எல்லோருக்கும் மோட்ச பதவியை அளிக்கவும் முற்படுவார் என்பது திண்ணம்!!

சாதகர்கள் சமயச் சடங்குகளைச் செய்து வரவேண்டும் என்று கட்டாயப்படுத்துவது அத்தகைய அன்புமிகும் தரும தேவரால் முடியாத காரியம். நான் முன் சொன்னதுபோல் சாதகனும் அதை மேற்கொள்ளத் தயாராக இல்லை! படாடோப வாழ்க்கை பலரையும் வழி தவறச் செய்கிறது. அளவுக்கு மீறிய சுதந்திரம் சாதகர்கள் தங்களுக்குள்ளேயே போராட வழிகோலுகிறது. போராடி நிற்கும் சாதகர்களைச் சிவானந்தர் சாந்தப்படுத்தி வைத்து விடுவார்! ஆனால் இருவருள் ஒருவர் தாமாகவே ஆச்சிரமத்தை விட்டு வெளியேறுவதும் சில சமயம் நடைபெறுகிறது. அவர்களைப் போகாமல் தடுக்க சுவாமிகள் தன்னாலானமட்டும் முயற்சி செய்கிறார். "சாதனைச் செல்வத்தைச் சிறிதளவு பெறுவதும் மிகக் கடினம். ஆனால் அதை இழப்பது வெகு எளிது. ஒரு பந்தை ஏணிப்படிகளைக் கடந்து உயரே கொண்டு செல்வது கஷ்டமான காரியம். ஆனால் ஒரு நொடிப்பொழுதில் அது உருண்டுருண்டு கீழே வந்துவிடுகிறது!", என்று சுவாமிகள் அடிக்கடிச் சாதகனிடம் தெரிவிப்பதுண்டு. முடிவில் சாதகன் ஆச்சிரமத்தை விட்டுச்சென்று விடுவானேயாகில், சுவாமிகள் அவனைப் பற்றியதனைத்தையும் மறந்தவர் போல் தோன்றுகிறார்.

சுவாமிகளது கண்ணுக்கெட்டாத காந்தம் சாதகனைப் பிடித்திழுத்துத் திரும்பவும் அழைத்து வருகிறது. அத்தகைய தலைவரை உலகின் வேறெந்தப் பகுதியில் பெற முடியும்? உலகில் வேறெங்கு ஒரு தலைவன் இப்படித் தொண்டு செய்வான்? நல்ல உடலமைப்புள்ள ஒருவன் வருமானமின்றி வாழ்ந்தால் அவனது பெற்றோர்களே அவனைக் கவனிக்கமாட்டார்களே! கணவனின் விபரீதச்

செயல்களைச் சிறிது காலத்திற்குப்பின் அன்புமிகும் மனைவி கூடச் சகிக்கமாட்டாள். முட்டாள் சாதகன் சிறிது காலத்தில் இந்த உண்மையை உணருகிறான். சிவானந்தரின் காருண்யத் தோற்றத்தின் குளுமை பொருந்திய நிழல் அதிகப்பழக்கத்தினால் அதன் சோபையை இழந்துவிடுகிறது போலும்! உலகியலின் சுடும் வெயிலும், சுடும் மணலும் திரும்பவும் அவனைப் பகவானின் பாத தாமரையை நினைவூட்டுகிறது; அவனும் திரும்பி விடுகிறான்!

ஆட்டிடையன் தன்னைச் சுற்றி நிற்கும் நம்பிக்கை பொருந்திய ஆட்டை மறந்தவன்போல் தோன்றுகிறான். ஆனால் அது தவறிப்போய் திரும்பவும் கிடைத்ததும் ஆனந்தக் கூத்தாடுகிறான். அதைக் குளிப்பாட்டி, உணவளித்துத் தனிப்பிரியத்தோடு பாராட்டுகிறான். அதே போல் திரும்பிய சாதகனைச் சிவானந்தர் எல்லோர் முன்னிலையிலும் பாராட்டுவதை நீங்கள் ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டே நிற்க நேரிடும்! அங்ஙனம் ஆதரிக்கும் சுவாமிகள் தெய்வீக வாழ்க்கைக் குடும்பத்தில் அவன் எப்பொழுதும் வரவேற்கப்படுகிறான் என்பதை உணரச் செய்கிறார்.

"பெண்கள், வைசியர்கள், சூத்திரர்கள் எல்லோரும் உயர்நிலையை அடைகின்றனர்", என்று பகவான் கிருஷ்ணர் மட்டுமே சொல்லியுள்ளார். இதோ இங்கே சிவானந்தர் கெட்டவர்க்கும் பாபிகட்கும் நன்னம்பிக்கையை ஊட்டும் முறையில் அமைந்துள்ளார். "ஒரு கெட்ட மனிதன் என்னை வழிபட்டாலும் அவனையும் நல்லவனாகவே கருதவேண்டும்," என்று கடவுள் கூறும் பகுதியும் உள்ளது. அறிவும் அன்பும் உருவான சிவானந்தர் நம்மிடம் இதைக்கூட

எதிர்பார்க்கவில்லை. அவர் மற்றவரினும் நம்மை நன்குபுரிந்து கொள்கிறார். இதுபோல் அவர் தனது ஆயிரக்கணக்கான சாதகர்களிடம் நடந்துகொள்கிறார். கெட்டவன் தீய சமஸ்காரங்களின் மூட்டையாக இருப்பதனால் அவனைத் தெய்வீகத்திற்குச் செல்லும் முதற்படியில் கூட இட்டுச் செல்வது முடியாத செயலாகிறது. பகவான் கிருஷ்ணரை விடச் சிவானந்தர் இன்னும் சிறிது தூரம் அதிகம் செல்கிறார்! பிரபோ! உங்களிடம் நாங்கள் வந்து சரணடைய வேண்டும் என்பதற்காக நீங்கள் காத்திருக்கக்கூட இல்லை; எங்களை உங்களிடம் பிடித்து இழுக்கிறீர்கள். உங்களது இனிமையான பாடல்கள், சுவைபொருந்திய சங்கீர்த்தனம், உணர்ச்சியூட்டும் சொற்பொழிவுகள், உயரிய நகைச்சுவை, அன்பு ததும்பும் பேச்சு, களிப்பூட்டும் சித்திரங்கள், சலனப் படங்கள், ருசியான பிரசாதம், நல்ல உணவு வகைகள், கவலையற்ற வாழ்க்கை, மற்றும் வசதிகளால் நீங்கள் எங்களைத் தங்களிடத்தே ஆகர்ஷிக்கிறீர்கள். எங்களிடமிருந்து ஒன்றையும் வேண்டாது, சதா எங்களுக்கே கொடுத்துக் கொண்டிருக்கிறீர்கள். எங்களது கஷ்டங்களைப் புரிந்து கொள்கிறீர்கள். எங்களது சோர்வில் அனுதாபப்படுகிறீர்கள். எங்களது கையைப்பிடித்து வழிகாட்டுகிறீர்கள். எங்களிடம் பக்தியை ஏற்படுத்தி, வைராக்கியத்தை வளர்த்து, ஆத்மீக அறிவை ஊட்டி வருகிறீர்கள். ஒரு நாள் தங்களின் சீடர்களை மிகச்சிறந்த அறிவாளிகள் என்றும் திறமையுடையவர்கள் என்றும் உலகம் போற்றுகிறது. இத்தகைய அதிசயத்தைச் செய்வதற்குத் தாங்கள் பட்ட கஷ்டத்தை யாருமே உணருகின்றார்களில்லை. கோபாலராகிய தங்கட்கு அது துன்பமாகத் தோன்ற முடியாது. தப்பிச் சென்ற ஆட்டைத் தேடிப்பிடிப்பதற்குத் தாங்கள் பெருவகை

கொள்கிறீர்கள். பகவானே! எங்களுக்கு வழிகாட்டுங்கள்! தங்களுடைய திருவடித்தாமரையைக்காண வழிகாட்டுங்கள்!!

## கர்மயோக சாதனையின் அதிமுக்ய அம்சம் - பாவனை.

கர்மயோகத்தினால் சிவானந்தர் அடைந்துள்ள பலன்களைத் தெரிந்துகொள்ள முற்படும் முன்பாகச் சிறிது காலத்துக்காயினும் அவரது இதயக்குகையில் நம்மை அனுமதிக்குமாறு வேண்டுவோம். ஏன்? அங்குத்தான் எல்லா லோகங்களையும் தங்கமாக்கும் தத்துவஞானியின் மந்திரக்கல்லை நாம் கண்டுகொள்ள முடியும். அங்குத்தான் யோகியின் ரகசியமும் எல்லாச் செய்கைகளையும் யோகமயமாக்கும் கருவியுமாகிய அந்த மந்திரக்கல்லை நாம் கண்டு களிக்க முடியும்.

மேற்கூறிய சேவைகளில் சிலவற்றை, அல்லது எல்லாவற்றையும் சேர்ந்தோ செய்யும் நபர்களோ அல்லது ஸ்தாபனங்களோ கிடையாதா? இருக்கலாம்! ஆனால் சிவானந்தர் இந்த விஷயத்தில் சிறப்பித்துக் காட்டுவதுஎது? எந்த ஒரு காரியத்தைச் செய்யத் தவறுவதனால் கடவுள் தன்மைக்குரிய வாய்ப்புக்கிட்டாமல் எட்டிப்போகுமோ, அத்தகைய காரியம் ஒரு சாதாரண சமூக ஊழியன் செய்யத் தவறுவது என்ன? அதுதான் ஒருவன் கொண்ட உள்ளுணர்ச்சி. அதுதான் பாவம். அந்த பாவமே கடைசியில் அனுபவமாக மலர்கிறது. இதைப்புறக்கணிப்பது நன்று. சுயநலமில்லாத தனிப்பட்ட ஒரு சேவையைப் பரிசுத்தமான தன்மையில் சரியான பாவத்துடன் செய்தால் உயரிய ஆத்மீக அறிவை அது ஊட்டுகிறது. வாழ்நாள் முழுவதும்

பிணியுற்றவர்கட்குச் சேவை செய்வது, ஏழைகட்கு உதவி செய்வது, சமூக சேவையின் பற்பல துறைகளிலும் ஈடுபடுவது, முதலியவற்றால் இவ்வுணர்ச்சி இல்லாவிட்டால் ஒரு சில புகழுரைகளை மட்டும் பெறலாமேயன்றி மற்றில்லை!

யோகம் என்பது உள்ளமைந்த செயல்முறை என்பதை நாம் ஒரு பொழுதும் மறந்துவிடக் கூடாது. யோகம் என்பது ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்று சேர்வதே. இந்த உயரிய லட்சியத்தோடிணைந்ததே யோகம். இந்த யோகம் அல்லது சேர்க்கை நம் கைகால்களாலோ அல்லது உடலின் வேறெந்தப் பாகங்களாலோ பெறக்கூடியதல்ல. ஆனால் நம் அந்தரங்க ஆத்மீகத் தன்மையினாலேயே ஏற்படுத்த முடியும். ஆதலால் அந்தரங்க ஆத்மீக அறிவின் பண்பாடே யோகத்தில் பல துறைகளிலும் அதிமுக்கியமாக அமைந்துள்ளது.

இந்தப் பண்பாட்டுக்குறைவே டாக்டர்களையும் நர்ஸ்களையும் அவர்கள் நோயாளிகளுக்குச் செய்யும் அளவிட முடியாத சேவையின் நித்தியமான பலனை அடையமுடியாமல் தடுக்கிறது. அதே சமயம் சிவானந்தரின் சீரிய பாவனையை பற்றித் தெரிந்துகொள்வோமாக.

கடவுள்தான் எல்லாவற்றிலும் வியாபகமாக விளங்குகிறார் என்னும் உண்மையை உணர்வதே கர்மயோகத்தின் முக்கிய அம்சம். மனம் லட்சியவாதத்தை நோக்கிச்சென்று விழாமல் இருப்பதற்கு ஒரு அபாய அறிவிப்பு தேவை. உலகெலாம் மனதின் விளையாட்டென்றோ, முக்காலத்திலும் உலகம் நிலைத்திருக்கவில்லை என்றோ எண்ணுவது நல்லதுதான். இதை உணர்ந்ததாக நடிக்கும் மனிதனின் மனதை

விட்டு வெகுதொலைவில் இருக்கிறது ஆத்மானுபூதி. காரணம் என்ன? தனது கருணையற்ற நிலையையும், பாபம் நிறைந்த இதயத்தையும், சோம்பலையும் இந்த அஜட வாதத்தின் மின்னும் போர்வையினால் அவன் மறைக்கிறான் என்பதே! காப்பியில் கொஞ்சம் சீனி குறைந்துவிட்டாலும் உடனேயே அவனுக்கு இந்த உலகம் நிலைத்திருக்கிறதா இல்லையா என்பதைத் தெரிந்துகொள்ளலாம். உலகத்தை ஏமாற்றுவது அர்த்தமற்றது. முடிவில் அது தன்னையே ஏமாற்றுவதாகும். அப்பொழுது நஷ்டம் யாருக்கு?

"தூல சரீரங்களெல்லாம் சேர்ந்ததுதான் 'விராட்' என்பதாக உணருங்கள். மனமனைத்தும் சேர்ந்ததே 'இரண்ணியகர்ப்பன்' என்பதாகக் கொள்ளுங்கள். உயிரனைத்தும் சேர்ந்ததே 'ஈசுவரன்' என்று நம்புங்கள்", என்று பக்தியைப்பற்றித் தெரிவிக்கையில் சிவானந்தர் தெரிவிக்கிறார். இது உடனேயே காயம், மனம், ஜீவாத்மா இவற்றிடை நிலவும் தொடர்பின் உண்மை நிலையை வெளிப் படுத்துகிறது. உலகம் இருக்கிறது என்ற எண்ணம் உங்களிடம் உள்ள வரையிலும் துன்பமுறும் மக்களும் உங்களது சேவையை எதிர்நோக்கி நிற்கின்றனர். இதை ஒருபொழுதும் மறந்துவிடாதீர்கள்! உலகம் உங்களுக்குத் தோற்றும் வரையிலும், உங்கள் முன் ஏழைகள் நிற்கும் வரையிலும், உங்களது தெய்வீக அன்பை ஈகையில் காட்டுவதை மறந்துவிடாதீர்கள். உலகமும் அதிலுள்ள மக்களும் எதற்காக இருக்கிறார்கள்? உங்களது அந்தராத்மாவை வெளிப்படுத்துவதற்கான பலதுறைகளையும் ஏற்படுத்தவும், ஆண்டவனுடன் ஒன்றுபடவேண்டும் என்பதற்காகக் கடவுள்தன்மையில் வளரவும் வேண்டியே உலகமும் அதிலுள்ள மக்களும் வாழ்ந்து வருகிறார்கள்.

எனவே, தன்னலமற்ற சேவைக்கான எல்லா சந்தர்ப்பங்களையும் பணிவுடனும் பக்தியுடனும் உள்ளன்புடனும் வரவேற்க வேண்டும். அவைகள் ஆசீர்வதிக்கப்பெற்ற ஆத்மாக்கள் மீது ஓங்கும் தெய்வீக அருட்கிரணங்களாகும். நீங்கள் செய்த தீவினையால் தான் நீங்கள் அவதிப்படுகிறீர்கள் என்பதாகச் சிவானந்தர் ஒருபோதும் சொல்லவேமாட்டார். அப்படி யாராவது கூறினால் அவர்கள் தங்கள் இதயத்தை தூய்மையாக்குவதற்காகவென்றே ஆண்டவனால் அளிக்கப்பட்ட நல்ல சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தாமலிருப்பதற்காகக் கூறும் ஒரு நொண்டிச் சாக்கேயாகும் என்கிறார் சுவாமிகள். சிவானந்தரின் கருத்துப்படி அது மன்னிக்க முடியாத பெரும் குற்றமாகும். அவ்வரிய சந்தர்ப்பத்தை இருகைகளாலும் இறுகப்பற்றிச் சேவை செய்தேயாக வேண்டும்.

இவ்வுயரிய தன்மை, சுவாமிகளின் சேவைக்குரியரல்லரென்றோ, அவரது நன்கொடைக்குத் தகுதியற்றவரென்றோ யாரையும் ஒதுக்கித் தள்ளமுடியாது என்ற எண்ணத்தை ஏற்படுத்துகிறது. இந்தப் பாவனையே அவரது சீரிய சேவைக்கும் தருமத்துக்கும் பின்னால் நிற்கிறது. இது போகத்தின் திறவுகோலேயாகும்.

"இவை அனைத்தும் கடவுள்;
இவை அனைத்திலும் அவர் வசிக்கிறார்,
ஒரே ஆத்மாதான் எல்லா உயிர்களிலும் வசிக்கிறது",

என்ற உணர்ச்சியுடன் பொதுநலத் தொண்டாற்றுவதற்கு உயரிய பாவனை அவசியம்.

கேட்கப்படுவதனைத்திலும், பார்க்கப்படுவதனைத்திலும் பகவான் நாராயணனே நிலவி நிற்கிறார். மேலும் சேவை செய்பவன் ஒருவன் எல்லாக் கைகளும் கால்களும் கடவுளுடையதே என ஞாபகப்படுத்திக்கொள்வானேயாகில் பின்னால் அச்சேவையே புனிதம் வாய்ந்த கடமையாகி விடுகிறது. சேவை செய்வதற்கான சந்தர்ப்பத்தை கடவுள் நமக்கு அளிப்பதால் சேவை செய்தேயாக வேண்டும். அங்ஙனம் செய்வதால் கடவுளின் அருளைப்பெற வாய்ப்புக் கிட்டும்! சேவை செய்வதில் தான் மிகச்சிறந்த வெகுமதி அமைந்துள்ளது.

ஆதலால் அந்தச் சேவை சுயநலப் பற்றில்லாத தாகிறது; கைம்மாறை எதிர்நோக்கவில்லை. வெகுமதியை எதிர்பார்க்கவில்லை. பாமரனின் எண்ணமாக இருந்தாலும், பலன் விபரீதமானதாகத் தோன்றுகிறது. அது யோகியை ஒன்றும் செய்ய முடியாது. அவன் செய்த சேவையோடு தொடர்பு வைக்காது தனது முந்திய கர்மத்தோடு இணைந்து நிற்கிறது! இதன் காரணமாகச் சுவாமிகள் சாதகர்களைப் பயிற்றுவிப்பதிலும் அவர்களுக்குச் சேவை செய்வதிலும் சிறிதும் தளர்ச்சியடைவதில்லை. அச்சாதகர்களுள் பலர் பொய்யர்களும் எத்தர்களும் தகுதியற்றவர்களுமாகவும் ஆகியிருக்கலாம்! சுவாமிகளிடம் முன்னொரு காலத்தில் அவர்கள் மோசமாக நடந்து கொண்டிருக்கலாம்! சேவை செய்வதற்கான சந்தர்ப்பத்தை நீங்கள் அவருக்குக் கொடுத்தீர்கள்! அவரும் வேறு சிந்தனையின்றிச் சேவையில் ஈடுபடுகிறார். நீங்கள் செய்யும் கைம்மாறை அவர் விரும்பவும் இல்லை. சேவையே அதைப் பூர்த்திசெய்து விட்டது. இத்தன்மையே சிவானந்தரின் அதிசயத் துறவுணர்ச்சியின் இரகசியமாகும்.

## கர்மயோகத்தின் நிறைவு!

சிவானந்தரின் பாதகமலத்திலே மக்கள் மேலும்மேலும் வந்து பணிந்து நிற்பதன் காரணத்தை இப்பொழுது நாம் எளிதிலே புரிந்துகொள்ள முடியும். சுவாமிகளின் பாதத்தை நோக்கி எல்லோரும் ஓடுகின்றார்கள் என்பது இதன் பொருளல்ல! உண்மையில் சுவாமிகளின் சேவைக் குரியவர்களாகத் தங்களை ஆக்கிக்கொண்ட அதே நிமிடம் பேரன்பு நிறைந்த அவர் உள்ளம் சாதகர்களின் உள்ளத்தோடு ஒன்றிவிடுகிறது. இத்தகைய தொடர்பு ஏற்பட்டவுடன், மனிதத் தன்மையைக் கொண்டு மனிதத் தொடர்பிலேயே ஈடுபட்டு நாசமடையும் மக்கள் சுவாமிகளை நோக்கித் தடுக்க முடியாது ஓடுகின்றனர்.

வெகு தொலையில் இருப்பவர்களும் தூலவுடம்பினால் சுவாமிகளிடம் இழுக்கப்பெற்றதாகவும், சுவாமிகளை நேரிலேயே காண்பதுபோன்ற பல தோற்றங்களைக் கண்டதாகவும் பல உண்மைகள் வெளிவருவதை நாம் எளிதிலே புரிந்துகொள்ள முடிகிறது. அவர்கள் சுவாமிகளது சேவையை வேண்டுகிறார்கள். சிவானந்தரும் அவர்கட்குத் தொண்டுபுரிய ஆவலாக இருக்கிறார்; அவர்களைப்பற்றியே இடைவிடாது எண்ணி வருகிறார். எல்லா சரீரங்களும் அந்த ஒரே விராட்டைச் சேர்ந்ததே என்றும், எல்லா மனமும் சேர்ந்ததே இரண்யகர்ப்பன் என்றும் உள்ள எண்ணத்தொடமைந்த சேவையில் உறைந்த அடிப்படைப்பாவனை அவரிடமுள்ள அனுபவமாகும். ஆதலால் தனது சூட்சும சரீரத்தில் யூரோப்பு, அமெரிக்கா முதலிய அயல் நாடுகளிலும் சென்று அங்குள்ள சாதகர்கட்கு அவரவர்கள்

தேவைப்படும் சேவைகளைச் செய்ய வேண்டிய ஒரு யாத்திரையில் சுவாமிகள் ஈடுபடுவதானால் அதிலே வியப் பொன்றும் இருக்க முடியாது!

நேரில் அவரது உபதேச மொழிகளைக் கேட்காவிடினும், அவரது சொற்பொழிவுகளையும் பாடல்களையும் முன்நின்று அனுபவிக்காவிட்டாலும், அவருடைய தரிசனம் மட்டுமே கிடைக்கப்பெற்றவர்கள் பெருந்திருப்தியை அடைகின்றனர்; மற்ற சாது மகாத்மாக்களின் உணர்ச்சியூட்டும் சொற் பொழிவுகளைக் கேட்பதால் ஏற்படும் திருப்தியைவிடப் பன்மடங்கு அதிகமான நிறைவை அடைகின்றனர்! இப்படி அவர்கள் பெறும் நிறைவின் இரகசியத்தை இப்பொழுது நீங்கள் எளிதிலே புரிந்துகொள்ள முடியும். எல்லோருக்கும் தொண்டு புரிவதோடு, அவர்களின் துன்பத்தைத் தீர்த்து வைக்கவும் வேண்டும் என்ற தீராத ஆவல்தான் மனித சமுதாயத்தின் நல்வாழ்வுக்கான இடையறாத பிரார்த்தனை. இத்தகைய பிரார்த்தனையால் சிவானந்தர் மனித சமுதாயத்தின் உள்ளத்தையே கொள்ளை கொண்டுவிட்டார் மனித சமுதாயத்தோடு ஆத்மீகமாக அவர் ஒன்றுகிவிட்டார்! இடையறாது, இன்பம், சாந்தி, நல்வாழ்வு, அருள்ஒளி முதலியவற்றைச் சுவாமிகள் பரப்பி வருகிறார். ஆதலால் அவர்களிடம் பிணியகற்றும் பரிவையும், அமைதியளிக்கும் அருட்பிரகாசத்தையும் மக்கள் மனமாறக் கண்டு அனுபவிக் கின்றனர். கடும் உழைப்பின் பலனாக மற்ற மகாத்மாக்களின் கூற்றுக்களிலிருந்து கிட்டும் சந்தோஷத்தைச் சிறிதும் சுயசிரமமின்றி சிவானந்தரின் அருகில் இருப்பதாலேயே சாதகன் அடைகிறான். ஆகையினால் சிவானந்தரை எல்லோரும் பக்தியுடன் வழிபடுகின்றனர்.

சிவானந்தர் பழகிவரும் கர்மயோகம் ஒவ்வொரு சாதகனின் உள்ளத்திலும் ஆச்சரியகரமான மாறுதலை ஏற்படுத்தும் என்பதில் சந்தேகமில்லை. அது ஆணவத்தையும் அகங்காரத்தையும் அறவே இல்லாதாக்கிவிடும். எல்லாவித அபிமானத்தையும் அகற்றி ஆத்ம சாட்சாத்காரத்தை நீங்கள் அடைவதற்கான வழியை அது வகுத்துக் கொடுப்பது திண்ணம்.

தெய்வீக அருள் சதா சுரக்கும் ஒரு மடுவாக சாதகன் ஆகிவிடுகிறான். சிறிது காலத்தில் அவனிடமுள்ள அருள் மனித சமுதாயமனைத்திலும் பாய்கிறது! அவன் அகில உலக ரட்சகனாக, அருள் ஜோதியாக, புதுயுகத்தின் அருள் தூதனாக, சுவாமி சிவானந்தர் இன்று ஜோதிமயமாகத் திகழ்வதுபோல், பிரகாசிக்கும் தன்மையை அடைந்து விடுவான். அத்தகையவன் பெருமையை விரும்புவதில்லை. ஆனால் பெருமை அவனை இறுகப்பற்றிக் கொள்கிறது. அவன் பெயர் புகழுக்கு வெகுதூரம். ஆனால் இங்கேதான் சிவானந்தரின் சேவையின் மிக முக்ய அம்சம் அடங்கியுள்ளது. பெயரையும் புகழையும் தியாகம் செய்வதிலும் சேவைக்கான சந்தர்ப்பங்களைச் சுவாமிகள் இழந்துவிடுவது கிடையாது. புகழ் அவரது சேவையின் வட்டாரத்தை விரிவு படுத்துமானால், தெய்வீக வாழ்க்கைப் பாதையில் இன்னும் பலரை ஆகர்ஷிக்குமானால், அந்தப் புகழையும் சுவாமிகள் வரவேற்கத் தயங்கமாட்டார்! அப்புகழினால் மனித சமுதாயத்தின் பெரும் பகுதிக்குச் சேவை செய்ய வழிபிறக்கும் என்றிருந்தால்தான் அப்புகழை சுவாமிகள் ஏற்றுக்கொள்வார். அந்தரங்கத்தில் அவருக்குப் பெயரிலும் புகழிலும் பற்றுதல் கிடையாது. மனித சமுதாயத்திற்கு அதிக அளவில் சேவைசெய்ய முடிவதில் உள்ளுக்குள்ளே பே

ஆனந்தமடைவர்! சேவையின் வட்டாரம் விரிவடையும் பொழுது சேவையும் அதிகரிக்கிறது; அவரிடமுள்ள பாவனையும் ஆழமாகப்பதிந்து நிற்கிறது. ஆதலால் மமதையும் அபிமானமும் இல்லாதாகும் முறையில் அமையும் தெய்வீக அருளின் உட்பிரவாகம் தெய்வீகத்தைச் சுவாமிகளிடம் தேக்கி வைக்கிறது; மேலும் அவரே சகல ஜீவர்களின் நன்மைக்காகப் பூவுலகில் தோன்றியுள்ள கடவுளின் அவதாரம் என்பதாக மனித சமுதாயம் மேன் மேலும் உணர வழி செய்யவும் செய்கிறது!



# அத்தியாயம் 3

## பக்தி யோகம்

1. ஜபம், பூஜை, லிகித ஜபம், சங்கீர்த்தனம், முதலிய பக்தியோக சாதனைகளில் எல்லாம் சிவானந்தர் கண்ணும் கருத்துமாக இருக்கிறார்.
2. சம்பூர்ண யோகத்தின் பிரிக்கமுடியாத இரு கூறுகளாகப் பணியையும் வழிபாட்டையும் சிவானந்தர் ஒன்றுசேர்த்திருக்கிறார்.
3. தெய்வீகப் பற்றைச் சிவானந்தர் நிறைந்த, உயரிய, பூரண ஆத்மீகத் தியாகத்தோடு எப்பொழுதும் ஒப்புக்கொள்கிறார்.
4. எல்லா ஜீவராசிகளிலும் கடவுள் நிலையாய் விளங்குவதைச் சுவாமிகள் உணருகிறார்.
5. எல்லோரையும் சிவானந்தர் வணங்குகிறார்.
6. விராட்பூஜையை ஒவ்வொரு நிமிடமும் சுவாமிகள் செய்து வருகிறார்.
7. சத்சங்கத்திலும், பிரார்த்தனையிலும் அதிகமான அழுத்தத்தைச் சுவாமிகள் கையாளுகிறார். ஆதலால், அவர் வாழ்வதும், நகருவதும், தங்குவதும் எல்லாம் அவர் ஒன்றாகக் கலந்து நிற்கும் அதே கடவுளில் தான்.

# பக்தி யோகம்

குருதேவரின் புறச்செயல்கள் அனைத்தும் அவரது பராபக்தி, தெய்வீக ஒருமைப்பாட்டின் வேதாந்த அனுபவம் ஆகிய இவற்றின் பல்வகை வெளிப்படுதல்களே என்பதனால் தான் அவரது கர்மயோகத்தைப்பற்றி விரிவாக ஈண்டு கூறினோம். எதையாவது பெறுவதற்கோ அல்லது புறக்கணிப்பதற்கோ கருதி நாம் செய்வதுபோல் அவர் செய்வதில்லை. எந்த ஒரு பேற்றை மற்றெதையும் விடச் சிறந்ததாக மனிதன் கருதுகிறானோ, எதில் நிலைத்தலால் எத்தகைய துயரத்தினாலும் தாக்கப்படாமல் இருக்க முடியுமோ, அந்தப் பேற்றில் எவன் நிலைத்து நிற்கிறானோ, அவனுக்கு எந்த வேலையையும் செய்வதாலும் செய்யாமல் விட்டுவிடுவதாலும் லாபமோ நஷ்டமோ ஏற்படமுடியாது. இருப்பினும், வயதான உடலுக்கு வேண்டிய வசதிகளையும் ஓய்வையும் பொருட்படுத்தாது உடம்பில் ஏற்படும் மாறுதலை மிகவும் அலட்சிய பாவத்துடன் நோக்கி வரும் சுவாமிகள் மானிட சமுதாயத்திற்குச் செய்த சேவை போதாதென்று தனது சேவா க்ஷேத்திரத்தை மற்றவர்கள் வியக்கும் முறையில் விஸ்தரித்துக்கொண்டே செல்கிறார். அறியாமையில் சிக்குண்டு கிடக்கும் நாம் நமது சரீரத்தில் அதிகமான பற்றுவைத்துப் பிணிகளைப் பிரமாதமாகக் கருதிவருகிறோம். மனித சமுதாயத்தின் தளராத ஊழியர்களான திரு. சி. பி. இராமசுவாமி ஐயரும், திரு. சி. இராஜகோபாலாச்சாரியாரும் அப்படி எண்ணாத குருதேவரின் சோர்வில்லாத சேவையில் தங்களது ஆச்சரியத்தைத் தெரிவித்துள்ளனர்!

சேவையை வெறும் வேலையெனச் செய்யாமல் விராட்டின் வழிபாடாகவே சுவாமிகள் செய்து வருகிறார். ஞானி அல்லது ஜீவன்முக்தனின் தன்மைக்கொப்ப அது பராபக்தியைக்கொண்ட பக்தனின் வழிபாடேயாகும். ஜீவன் முக்தன் தனது பூரண ஆத்மத்தியாகத்தினால் ஆண்டவனுடன் ஒன்றாகிவிட்டான்; அவனது சுபாவத்தையே தானும் கொண்டு நிற்கிறான்! கடவுளின் சுபாவம் என்ன? உலகத்திலுள்ள கடைசி ஜீவன் அறியாமையிலிருந்து விழிப்படையும் வரையிலும், எல்லா ஜீவர்களும் ஆண்டவனுடன் திரும்பவும் ஒன்றாகும் வரையிலும், அவனுக்குத் திருப்தி ஏற்படுவதில்லை. எண்ணற்கரிய விடுதலைபெற்ற ஆத்மாக்கள் தன் திருவடித்தாமரையில் வழிபாடு செலுத்தி வந்தாலும் தனது பக்தன் தன்னை மனமுருகி வழிபடும் பொழுது அவனிடம் அதிவேகமாகப் பகவான் ஓடி வருகிறார். "அநேகம் பக்தர்களை ஊக்கி ஆசீர்வதித்திருக்கிறேன். மேற்கொண்டு பக்தர்கள் தேவையில்லை. நான் ஏன் அவர்களிடம் செல்லவேண்டும்?", என்று அவர் கூறுவது கிடையாது. "நான் போதுமான புத்தகங்களை எழுதியுள்ளேன். மிகுந்த பணியையும் போற்றியுள்ளேன். பலருக்குச் சன்யாச தீக்ஷை அளித்திருக்கிறேன். அவ்வளவும் போதும்", என்று எமது குருநாதர் கூறுவதை நான் கேட்டது கிடையாது. இனியும் பல வருடங்கள் வாழ்ந்து, இன்னும் பல பிறவிகள் எடுத்து, ஆண்டவனின் அரும்பெரும் புதல்வர்கட்குச் சேவை செய்து, அவர்களை ஊக்கப்படுத்தி அவனது திருவடிகளை அடைய வழிகாட்ட விரும்புவதாகவே சுவாமிகள் எங்களிடம் தெரிவித்துள்ளார். அவரது உறுதிமொழி நமக்கு ஒரு வரப்பிரசாதமேயாகும். அவர் நீடூழி வாழவேண்டும். அவருடைய பாதகமலங்கட்குப் பிறவிதோறும் நாம் வழிபாடு செய்ய வேண்டும்.

அதுவே நம்முடைய மோட்சமுமாகும்!

'ஆண்டவனை எல்லாவற்றிலும் வழிபடுவது', 'எல்லோருக்கும் நாராயணபாவத்துடன் தொண்டாற்றுவது' 'வேலை செய்வதே வழிபாடு', என்று சொல்வதெல்லாம் எளிது. ஆனால் அத்தகைய பாவத்தைக்கொண்டு விளங்குவது அருமை. ஆதலால், சுவாமிகளிடம் அவர் இந்த பாவத்தைப் பெற்றுப் பிரகாசிக்க என்ன செய்தார் என்பதை வினவினோம். துஷ்டர்களைச் சிக்ஷித்துச் சிஷ்டர்களைப் பரிபாலனம் செய்து தர்மத்தைக் காக்க வேண்டிய ஆண்டவனே மனித உருவில் தோன்றியுள்ள சிவானந்தர் எங்களுக்குச் சில விலையுயர்ந்த குறிப்புக்களைக் கொடுத்தார். ஆம்! எங்களுக்காக, நாங்கள் நன்றாகக் காத்துப் போற்றி முன்னேற வேண்டும் என்பதற்காக, மனித உருவம் கொண்ட அண்டவன், ஜபம், வழிபாடுகள் முதலியன செய்து தியானத்தில் ஈடுபடுகிறார். அவர்கட்கு நாராயண பாவம்தான் சுபாவம். ஆதலால் இந்த பாவத்தை ஏற்படுத்திக் காப்பாற்றுவது எப்படி என்பதைக் காட்ட அவரே சிறந்தவர். ஆதலால் நாம் சிவானந்தரின் பக்தியோக சாதனையைப் பற்றித் தெரிந்து கொள்வோமாக!!

## அந்தரங்க சாதனை

### ஜபம்

உள்ளத்திலுள்ள உயரிய பாவனையையே சிவானந்தர் வெகுவாக வற்புறுத்தி வருகிறார். ஆதலால் இதயத்தின் அந்தரங்கப் பண்பாட்டிலேயே அவர் அதிகம் சிரத்தை கொள்கிறார். சேவை செய்யும் ஊழியனையும் அவனது சேவையையும் சிவானந்தர் பாராட்டி வருகிறார். என்றாலும்

வேலையை மட்டும் செய்து விட்டுக் கடவுளை வழிபடாமல் இருப்பதை அவர் விரும்புவதில்லை. ஜபமாலையைக் கையில் வைத்துச் சதா உருட்டிக்கொண்டிருப்பவன், தவித்த வாய்க்குத் தண்ணீர்கூடக் கொடுக்க முன்வராவிட்டால் அவனைப் பெரும் ஏமாற்றுக்காரன் என்றே சுவாமிகள் அழைத்து வருவார். அதே சமயம் அயராது அல்லும் பகலும் உழைத்து வரும் தன்னலமற்ற ஊழியனிடம், "இன்றைக்கு எத்தனை முறை ஜபம் செய்தீர்கள்?" எனக் கேட்கவும் தவறமாட்டார். வேலையே வழிபாடு என்பது தான் நோக்கம் என்றாலும் நடைமுறையில் வேலையும் வழி பாடும் என்றே அது பொருள்பட வேண்டும்.

"அதிகாலையில் அதிகமாக ஜபம் செய்வதனால், பிரம்ம முஹூர்த்தத்தில் கடவுளது உயரிய தன்மையை உள்ளும் புறமும் அதிகமாக உணருவதனால், அந்நாளின் மற்றைய நேரங்களில் செய்யும் சேவையின் பாவம் மிகவும் தூய்மை யானதாக இருக்கும்", என்கிறார் சுவாமிகள். படுக்கையை விட்டு எழுந்திருந்தவுடன் சிறிது நேரத்திற்குச் சிவானந்தர் ஜபம் செய்கிறார். சுவாமிகளின் குடீரில் விளக்கு ஏற்றப் பட்டிருப்பதைக் கண்டவுடனேயே உங்களுடைய கடிகாரத்தைச் சரியாக மூன்றரை மணி என்று திருத்தி வைத்துக்கொள்ளலாம். இன்றும் அதே மூன்றரை மணிக்கு எழுந்திருப்பதில் சுவாமிகள் தவறுவதில்லை. நான்கு மணிக்குத் திரும்பவும் தனது இருப்பிடத்தில் பிராணாயாமம், ஜபம் முதலியனச் செய்வதற்குத் தயாராகி விடுவார்!

பிரம்ம முகூர்த்தத்தில் எழுந்திருந்து ஜபம், தியானம் முதலியன செய்ய வேண்டும் என்று சுவாமிகள் ஏன்

வற்புறுத்துகிறார் என்பது அவரது சீடர்களுக்குத் தெரியும். உறக்கத்தின் உறுதியான பிடிப்பிலிருந்து விடுதலை பெற்று நாம் திரும்பி வருகிற அந்நேரத்தில் நம் மனம் அதிகமான பதியும் தன்மையுடன் இருக்கிறது. இதைவிட அதிகமான பலன் உறக்கத்திலும் ஜபத்தைக்கொள்ள முயற்சி செய்வதால் ஏற்படுகிறது! உறங்கும் நிலையிலும் நம் மனம் இடைவிடாது ஜபம் செய்வதில் ஈடுபடுவதையே அவர் விரும்புகிறார்! அதை எப்படிச் செய்வது? ஜபம் செய்வதை ஒரு வழக்கமாகக் கொண்டுவிட்டால் அது எளிதிலே வந்து விடுமெனச் சுவாமிகள் தெரிவிக்கிறார். "நேற்று நன்கு உறங்கவில்லை. எனது உறக்கம் இரவு இரண்டு மணிக்குத் தடைபட்டது. உடனேயே அரைமணி நேரம் ஜபம் செய்தேன். பிறகு உறங்கி வழக்கம்போல் எழுந்தேன்", என்கிறார் சுவாமிகள். இதைப்போல் இரவில் கண்விழிக்கும் நேரமெலாம், அதேபோல் பிரம்ம முகூர்த்தத்தில், ஆண்டவன் திருநாமத்தை ஜபம் செய்தோமேயானால், கடவுள்சிந்தனை நம்மிடம் நிரம்பி நிற்கும். ஜபம் செய்வது சுபாவத்தோடு ஒன்றிவிட்டால் அதிகாலை பிரம்ம முகூர்த்தத்தில் தியானம் வலுவடையும்; கடவுளின் உயரிய தன்மையை அந்த நேரத்தில் மட்டுமல்லாது எந்த நேரத்திலும், நாள் முழுவதும், எந்தச் செயலிலும் நாம் அனுபவிக்கும் பேற்றைப் பெற்றவர்களாவோம்.

எத்தனை மாலைகள் ஜபம் செய்கிறோம் என்பதல்ல கேள்வி. மனதின் ஒன்றியநிலையும், ஆண்டவன்திருநாமத்தை உச்சரிப்பதிலுள்ள ஆழ்ந்த ஈடுபாடும் தான் இன்றியமையாதவை. அதிகாலையில் சிறிது நேரத்திற்குப் பல மந்திரங்களைத் தான் உச்சரித்து வருவதாகச் சுவாமிகள் ஒரு தடவை கூறினார்கள். அவர் மேலும் தெரிவிக்கலானார்:—

"நான் பெற்றது போன்ற பெரும் செல்வத்தை ஸ்ரீவித்யா உபாசனையின்றி ஒருவன் பெறமுடியாது என்று திரு. சாஸ்திரியார் கூறுகிறார். ஆம்! நானும் ஒரு ஸ்ரீவித்யா உபாசகனே! ஸ்ரீவித்யா மந்திரத்தைக் காலையில் ஓரிரண்டு தடவையும், எப்பொழுதாவது ஒரு பெண்ணைச் சந்திக்க நேரிடுமானால் அப்பொழுதும் உச்சரித்து வருவதோடு, அவளுக்கு மனதிலேயே வணக்கம் செய்து தேவமாதா திரிபுரசுந்தரியின் தோற்றமாக அவளைப் போற்றியும் வருகிறேன். இதுவே எனது ஸ்ரீவித்யா உபாசனை". கங்கை நீரில் நின்றுகொண்டே சில குறிப்பிட்ட மந்திரங்களைச் சுவாமிகள் சொல்வது வழக்கம். இங்ஙனம் செய்வதனால் சீக்கிரமே மந்திரசித்தி ஏற்பட்டுவிடும் என்பது அவர் நம்பிக்கை. "ஜபம் செய்ய உங்களுக்கு நேரம் கிடைக்க வில்லை என்றால் கங்கை நீரில் சிறிது நேரம் நின்று இஷ்ட மந்திரத்தை மூன்று தடவை ஜபித்தால் அது மூன்று லட்சம் முறை ஜபம் செய்ததை ஒக்கும்", என்று சுறுசுறுப்பான ஆச்சிரமவாசியிடம் சுவாமிகள் ஒரு தடவை கூறியுள்ளார்.

## லிகித ஜபம்

மன ஒருமைப்பாட்டை ஏற்படுத்துவதற்கு மந்திரத்தை பல தடவை எழுதும் முறை ஒரு சிறிய சாதனை எனச் சிவானந்தரால் போற்றப்படுகிறது. "எப்பொழுதும் மந்திரத்தை எழுதிக்கொண்டே இருப்பதற்காகப் பையில் ஒரு சிறு நோட்டுப் புஸ்தகத்தையும், ஒரு ஜபமாலையையும், பாக்கெட் கீதையையும், நீங்கள் எங்குச் சென்றாலும் எடுத்துச் செல்லுங்கள். சிறிது சமயம் கிடைக்கும்

போதெல்லாம் மனக்கோட்டைகள் கட்டுவதைத் தவிர்த்து, சோம்பேறித்தனத்தில் மனம் மிதப்பதை விடுத்து, அந்த நோட்டுப் புஸ்தகத்தில் சில மந்திரங்களை எழுதுவதும், ஒரு சில மாலைகள் ஜபம் செய்வதும், கீதையின் சில சுலோகங்களைப் பாராயணம் செய்வதும் மிகவும் பலன்தரக் கூடியவையாகும்'', என்று சுவாமிகள் எங்களிடம் கூறினார்கள். இதுவே மனக்கட்டுப்பாட்டைப் பெறுவதற் கான சிறந்த வழி.

மேலும், லிகித ஜபத்தை அன்றாட வாழ்க்கையில் கொண்டு வருவதற்காகச் சிவானந்தர் பற்பல வழிவகைகளை வகுத்துக் காட்டியுள்ளார்கள். இந்த வழிகளைச்சிவானந்தரே தனது வாழ்நாளில் கடைப்பிடித்திருக்கிறார். முதலாவதாக நீங்கள் எழுதும் ஒவ்வொரு கடிதத்தையும் ''ஓம் நமோ நாராயணா'', போன்ற மந்திரத்துடன் தொடங்குங்கள். நீங்களும் உங்கள் கடிதத்தைப் பெறுவோரும் பலன் பெறுவது திண்ணம். இரண்டாவதாக, ஒரு கட்டுரை எழுதும்பொழுதும், அன்றாட வரவு செலவுக் கணக்குகளை எழுதும்பொழுதும், கீழ்வரும் மந்திரத்தைத் தலைப்பிலே வைத்து எழுதவும்:—

''ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம்
ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம்''.

## சரணாகதி

தெய்வ இச்சைக்குத் தன்னைப் பூராவாக அர்ப்பணித்து விடுதல் தான் சிவானந்தரின் ஒவ்வொரு செய்கையையும், சொல்லையும், சிந்தனையையும் விளக்கும் சிறந்த அம்சம்,

அம்முறையே சிவானந்தர் கடவுளோடு ஒன்றிவிட்டார். அவருடைய செயல்கள் மனித சமுதாயத்தை உயர்நிலைச்குச் செலுத்துகின்றன. அவர்களுடைய உயர் சொற்கள் உண்மையானவையாகவும், ஆறுதலை அளித்து நன்மையைத் தருவனவாகவும், ஆதாரமுடையனவாகவும்,வாழ்க்கையையே மாற்றி அமைக்கும் தன்மையுடையனவாகவும்இருக்கின்றன. அவருடைய எண்ணங்கள் சதா தெய்வீகத் தன்மை யுடையனவாக இருக்கின்றன. சுவாமிகள் மலேயாவைவிட்டு இந்தியாவில் வந்திறங்கிய பொழுதே சரணாகதியின் ஒரு சீரிய செயல் வெளிப்படுத்தப்பட்டது. சுவாமிகளின் வரலாற்றை எழுதியவர்களுள் ஒருவராகிய திரு. இந்திரஜித் சர்மா கேட்ட கேள்வி ஒன்றுக்கு விடையளிக்கும் முறையில் சுவாமிஜி கூறினார்:—"நான் கடவுளை இப்பொழுதே அடைய வேண்டும் என்ற ஒரே எண்ணம் கொண்டுதான் பாரதம் வந்திருக்கிறேன்". இன்னும் பலதடவைகளில், "ஒரு ஆச்சிரமத்தை ஏற்படுத்தவோ அல்லது ஒரு சங்கத்தை நிறுவவோ நான் ஒருபொழுதும் எண்ணியதில்லை. நான் 'என்னையே' அறவே இல்லாதாக்கி ஒரு மரத்தடியில் இருந்து, ஜபமும் கீர்த்தனமும் செய்யவே எண்ணினேன்,'' என்று கூறியிருக்கிறார். அந்த நேரத்திலிருந்தே சுவாமிகள் தன்னைப் பூராவாக ஆண்டவனிடம் ஒப்படைத்து விட்டார்! அவர்களுடைய வாழ்க்கையை ஊக்கிவந்த நோக்கங்களையும், ஆவல்களையும் குறிக்கோளையுமே கடவுளிடம் ஒப்படைத்து விட்டார்; முமுட்சுத்துவம் அல்லது கடவுளைக் காண வேண்டும் என்ற தாபத்தில் மனித எண்ணம் எரிந்து சாம்பலாகிவிட்டது. ஏழைபிணியாளர்கட்குச் சேவை செய்யும் ஆவல்கூடத் தாற்காலிகமாகக் கடவுளின் இச்சைக் குத் தன்னையே ஒப்படைக்கும் அக்கினியில் செய்யும் ஆகுதி யெனக்கொண்டார். இந்த அக்கினியில் ஆகுதியெனத்

தீர்மானிக்கப்பட்ட மகா புருஷரே கடவுளாக மாறிவிட்டார்! இதுவே தெய்வானுபூதி என்ற பதத்தின் சரியானபொருள். அந்த நிமிடத்திலிருந்தே கடவுள் மிகச்சிறந்த உண்மையாகி விட்டார்; கடவுளுணர்ச்சியே சிவானந்தரின் உணர்ச்சி யாகியது; கடவுளின் இச்சையே சிவானந்தரின் இச்சையு மாகியது. சுவாமிகளின் வாழ்க்கையே தெய்வீகத் திட்டத்தின் அம்சமாகியது.

தான் முன்னமே எண்ணிய எண்ணங்கள் அனைத்தும் காற்றில் பறக்கவிடப்பட்டன என்பதே இந்தச்சரணாகதியின் அதிசயிக்கத்தக்க அம்சம்! ஆதலால் தெய்வ இச்சையால் தனது வைத்தியத் திறமையைச் சுவாமிகள் உபயோகித்த பொழுது அதற்கு விரோதமாக ஒன்றும் நிகழவில்லை. ஆண்டவனின் அருட்சக்தி சிவானந்தரின் கைகளைக் கருவி யெனக்கொண்டு துன்பமுற்றவர்க்கு வேண்டியஉதவிகளையும், சுகானுபவங்களையும், ஆறுதலையும் அளிக்கிறது. ஆச்சிரமத்தை ஏற்படுத்தக்கூடாது, சீடர்களை ஒப்புக் கொள்ளக்கூடாது என்ற ‘மனித இச்சை’யின் சங்கல்பம் தெய்வ இச்சைக்கு விரோதமாக இருந்தபொழுது ‘புரட்சி’ ஒன்றும் ஏற்படவில்லை. இந்த முக்கியப் பரீட்சையில் தான் பல சன்யாசிகள் தோல்வியடைந்துள்ளனர். அவர்கள் தங்களது சொந்தத் திட்டங்களையும் கொள்கைகளையுமே இறுகப்பற்றி நிற்கின்றனர். பொதுஜனக் குறைகூறலுக்கும் பழிக்கலுக்கும் பயந்து அவர்கள் தங்களது ஆத்மீக இளமைப்பருவ எண்ணங்கட்கு அடிமையாகித் தெய்வீகத்தில் வளர வழியின்றித் தவிக்கின்றனர். ஒரு சில மாதங்கள் முன்பு சுவாமிகள் கூறிய வார்த்தைகளில் அவரது நிலை நன்கு தெரிகிறது. “இதற்கு முன்னால் இந்த ஆச்சிரமத்தில் இப்பொழுது நிலவும் சங்கீதத்தொனி நிலவியதில்லை. நமது

சத்சங்கம் வேத பாராயணத்தாலும் சங்கீர்த்தனத்தாலுமே நிறைந்திருந்தது. இப்பொழுது இவ்விடத்தில் சங்கீதம் அலைமோதுகிறது. இதை யாராலும் இனிமேல் தடுக்க முடியாது'', என்று சுவாமிகள் கூறினார். இந்தக் கூற்று ஒரு தர்க்கவாதியின் கேள்விக்கு விடையென வெளிவந்தது. 1940-ல் சத்சங்கத்தின்போது ஆர்மோனியமோ வேறெந்தக் கருவியோ வாசிப்பதை சுவாமிகள் அனுமதித்ததில்லை. மிகச் சிறந்த சங்கீத வித்வான்களை ஆச்சிரமத்துக்கு அனுப்பி அங்கே ஸ்திரமாக வசிக்கக் கடவுள் வழி செய்த பொழுது—இதுவே தெய்வ இச்சையெனச் சுவாமிகள் தெரிந்துகொண்டபொழுது—தெய்வ இச்சையுடன் ஒன்றிய பொழுது, சிவானந்தரே சங்கீதத்தை வெகுவாக ஆதரிக்க ஆரம்பித்தார்!

திட்டவட்டமான பரண நீதியின்றி, கடுமையான கட்டுப்பாடின்றி ஒருஸ்தாபனம் நடைபெறுவதாக யாராவது கேட்டிருக்கிறீர்களா? சிவானந்த மிஷனின் வளர்ச்சியின் விதத்தைத் தெரிந்து கொண்டவர்கள் **தெய்வ நெறிக் கழகம்** எத்தகைய நியமமுமின்றி நடைபெறுகிறதை ஒப்புக்கொள்வர்! தெய்வீக இச்சை அல்லது அருளின் மீது தான் இந்தக் கழகத்தின் சக்கரங்கள் உருண்டோடுகின்றன. கட்டுப்பாடும் சட்டதிட்டங்களுமில்லாத எந்த ஒரு ஸ்தாபனமும் எளிதிலே ஆட்டம் கண்டுவிடும் என்பதைக் கழக அமைச்சர்கள் ஒத்துக்கொள்வர். ஆனால் அவர்களுடைய கருத்து தவறானதென்பதைத் தெரிந்துகொள்ளச் சிவானந்தரிடம் போதிய ஆதாரமுள்ளது. தெய்வ இச்சையில் எல்லாவற்றையும் விட்டுவிட்ட காரணம் தான் அவர் பணி மிகவும் முன்னேறியிருக்கிறது என்பதை மற்றவர்கள் நன்குபுரிந்துகொள்வர். மனித இச்சையைவிடத்

தெய்வ இச்சை பன்மடங்கு வலுவுள்ளதாக இருக்கிறது என்பதை யாரே மறுக்கவல்லார்?

'சரணுகதி' எனக் கூறுவது எளிது! அதைக் கடைப் பிடித்து நிலைநிறுத்துவது தான் கடினம்!! அதை எப்பொழுதும் நிலை நிறுத்தவில்லை என்றால் அதனால் பயன் ஒன்றுமில்லை. நெருப்பு சீக்கிரம் அணைந்து அதன் மேல் ஆணவமாகிய சாம்பல் மூடிவிடும். இதைத் தடுக்க சிவானந்தரிடம் அதிசயிக்கத்தக்கதோர் சிறந்த வழி இருக்கிறது. அதுதான் கீழ்வரும் சரணுகதி மந்திரங்களின் தத்துவத்தை அடிக்கடி ஞாபகத்தில் வைத்துக்கொண்டு அம்மந்திரங்களைச் சதா உச்சரிப்பது.

ஹரி சரணம் மம
ஸ்ரீ கிருஷ்ண சரணம் மம
ஸ்ரீ ராம சரணம் மம
துர்காம் தேவீம் சரணமஹம் பிரபத்யே
ஸ்ரீமன் நாராயண சரணௌ சரணமஹம் பிரபத்யே

"சர்வ தர்மான் பரித்யஜ்ய
மாமேக சரணம் விரஜ :
அஹம் த்வா சர்வ பாபேப்யோ
மோக்ஷயிஷ்யாமி மாசுச :"

(கீதை)

## பகிரங்க சாதனை

### ஆண்டவனின் தோற்றத்தை உணருவதற்கான பயிற்சி.

பகவத் கீதையில் தெரிவித்துள்ள விபூதி யோகத்தில் வாழும் மிகச் சிறந்த முன் மாதிரி சிவானந்தர் ஒருவரே

என்றால் மிகையாகாது. அகில இந்திய யாத்திரையிலும் ஆச்சிரம விழாக்களிலும் நடைபெற்ற கூட்டங்களில் சுவாமிகளின் உணர்ச்சியூட்டும் சொற்பொழிவுகளைக் கேட்டவர்கள் விபூதி யோகத்தைப் பழகுவதில் சுவாமிகள் காட்டும் ஊக்கத்தை உணராமலிருக்க முடியாது.

இந்த யோகத்தைப்பற்றி நீங்கள் கேள்விப் பட்டதில்லையா? பகவத் கீதையின் பத்தாவது அதிகாரத்தில் கூறியுள்ள இந்த யோகம் என்னவென்று நீங்கள் அதிசயிக்கலாம். ராஜயோகம், பக்தியோகம், கர்மயோகம், ஞானயோகம் இவற்றிற்குச் சமமாக விபூதி யோகத்தைச் சிவானந்தர் ஏற்படுத்திவிட்டார். அது சக்திவாய்ந்த ஞானபக்தியோகமாகும்.

கீதையில் கண்ணன் கொடுத்துள்ள பட்டியலில் சிவானந்தர் இன்னும் சில விபூதிகளைச் சேர்த்துள்ளார். சுவாமிகளது 'விபூதியோகப் பாட்டில்' நீங்கள் அவற்றைக் காண்பீர்கள்:— "நானே சங்கீதத்தின் இனிமை; நானே காப்பியிலுள்ள சுவை; நானே பனிக்கட்டியிலுறையும் குளுமை; காட்டிலுள்ள நிசப்தமும் நானே; ஆரஞ்சுப் பழத்திலுள்ள சத்தும் நானே, முதலியன". இதையே கீதையில் கண்ணன் தெரிவிக்கிறார். விபூதி யோகப் பயிற்சிக்கான வழிகளை வகுத்த சுவாமிகள் தன்னிடமுள்ள விபூதிகளை விரயம் செய்துவிடவில்லை என்பதை ஒப்புக் கொள்கிறார்.

விபூதி யோகத்தைப் பழகி வரும் சிவானந்தருக்குக் காண்பதெல்லாம் ஆண்டவனின் பல்வகைத் தோற்றமாகவே தெரிகின்றன. சங்கீதம், பானங்கள், முதலிய

'புலனுணவுகள்' கூட அவருக்கு வேறுவிதமாகத் தெரிகிறது. சுவை பொருந்திய உணவுப் பொருள்கள் அவரது நாக்கிலே நீரையுண்டுபண்ணுது, தேனினும் இனிய கடவுளை ஞாபகப் படுத்துகின்றன. சங்கீதம் அவரது மனதைப் புறத்தே செலுத்தித் துன்புற வைக்காது, அதில் ஆண்டவனை உணரும் அவரது சகஜ அவஸ்தையைப் பாதுகாப்பதற்கு உதவுகிறது. கானகத்து ஓசையின்மை பயத்தை உண்டு பண்ணுவதற்குப் பதிலாக ஆண்டவனின் ஆத்ம ரூபத்தை வெளிப்படுத்துகிறது. இப்படி எல்லாவற்றிலும் அன்பும் அருளும் ஒருங்கே உருவான ஆண்டவனைச் சுவாமிகள் கண்டு களிக்கிறார். இங்ஙனம் ஆண்டவனை எங்கும் கண்டு களிக்கும் பயிற்சியைத்தான் சகஜ சமாதி அவஸ்தை என்கின்றனர்.

இது அவ்வளவு எளிதான காரியமன்று. மனம் ராகத் துவேஷத்தின் விளைவு. புலன்கள் புறப்பொருள்களையே தங்களது உணவாகக் கொள்ளும் பழக்கத்தைக் கொண்டுள்ளன. மனம் பொருள்களைப்பற்றியோ, விடுத்தோ நிற்கும். சிறிய சந்தர்ப்பத்திலும் மனம் புரட்சி செய்ய முற்படும். இவற்றிற்குச் சகஜ சமாதி அவஸ்தையை அடையும் முயற்சியில் இடம் கிடையாது. எல்லா ஜீவர்களிடமும் ஆண்டவன் நிலவி வருவதால் அவைகளிடம் இடையறாத அன்பு பூண்டு நிற்பதே சிறந்த தன்மையாகும்.

கடவுளை எங்கும், எல்லாவற்றிலும் காணும் சுபாவத்தில் சாதகன் நிலைக்க வேண்டிச் சிவானந்தர் அவரிடம் தெய்வீகத்தின் விசேஷத் தோற்றங்களில் கடவுளைக் காண வேண்டுகிறார். "நிமிர்ந்து பாருங்கள்! பரந்து விரிந்த நீல வானைப் பாருங்கள்! அது ஆண்டவனை உங்களுக்கு

நினைவூட்டுவதில்லையா? ஜோதிவடிவான சூரியனைப் பாருங்கள்! அவன் சுயஞ்ஜோதியான ஆத்மாவை உங்களுக்கு ஞாபகப்படுத்துவதில்லையா? கங்கையைப் பாருங்கள்! அவள் ஆண்டவனை உங்கள் நினைவுக்குக் கொண்டு வரவில்லையா? இத்தகைய ஆண்டவனின் பல்வகைத் தோற்றங்கட்கு மனமாரத் தெண்டனிடுங்கள். இந்தப் பார்வையைச் சிறிது சிறிதாக விரிவாக்கிக் கடவுளைக் கழுதையிலும் கண்டு களிக்க வேண்டும். மனதிலிருந்து தீமையின் எண்ணத்தை அகற்றிவிடுங்கள். உங்கள் மனம் தீயவன் எனத்தெரிவிக்கும் எவனையாவது பார்க்க நேரிட்டால் மனதினுள் "இந்த ஏமாற்றத்துக்கு நானே காரணம்" என்று எண்ணி, அவனிடமும் கடவுளைக் காண முயன்றால் பகைமை தானாகவே பறந்துபோகும். கொள்ளைக்காரனின் தலைவனையும் கடவுள் என எண்ணுவீர்களேயானால் அவனை நீங்கள் ஒருபொழுதும் வெறுக்கமாட்டீர்கள்" நாளடைவில் ஆண்டவனை எங்கும் எல்லாவற்றிலும் கண்டு களிக்கும் சுபாவத்தில் நீங்கள் ஸ்திரமாக அமைந்துவிடுவீர்கள்.

இந்தச் சாதனையைத் தீவிரமாக்கச் சிவானந்தர் சாதகர்களிடம் ஒரு சில மந்திரங்களையோ அல்லது சுலோகங்களையோ ஆகாயம் முதலிய ஆண்டவனின் தோற்றத்தைப் பார்த்தவுடனேயே உச்சரிக்கக் கற்றுக் கொள்ளக்கூறுகிறார்:—

"ஆகாசவத் சர்வகத நித்ய"

(பிரம்மன் ஆகாயத்தைப்போல் நித்தியமாகவும் சர்வ வியாபியாகவும் விளங்குகிறார்.)

"புஷன்னேகர்ஷே யம சூர்ய பிராஜாபத்ய
வ்யூஹரச்மின் சமூஹ
தேஜோ யத்தே ரூபம் கல்யாணதமம் தத்தே
பசியாமி யோசவாஸெள புருஷஸ்-ஸோஹமஸ்மி."

*(ஓ சூரியனே! எங்கள் போஷகரும், ஆகாயத்தின் ஒரே யாத்திரிகரும், எல்லாவற்றையும் அடக்குபவனும் நீயே! பிரஜாபதியின் மகனான நீ உனது காயும் கதிர்களைப் பரப்பி மறுபடியும் அவற்றை எடுத்துக் கொள்கின்றாய்! உனது ஜோதிமயமான ரூபத்தை நான் காண்கிறேன்; உன்னுள்ளிருக்கும் அந்தப் புருஷனே நான்!")*

"ஜ்யோதிஷாம்பி தத் ஜ்யோதிஹ தமஸாஹ பரமுச்யதே
ஜ்ஞனம் ஜ்னேயம் ஜ்ஞனகம்யம் ஹிருதி ஸர்வஸ்ய திஷ்டிதம்"

*(ஜோதிகட்கெல்லாம் ஜோதி அந்தகாரத்திற்கு அப்பால் இருப்பதாகக் கூறப்படுகிறது. அறிவின் லட்சியமாகிய அறிவான அந்த ஜோதி எல்லோருடைய உள்ளத்திலும் வீற்றிருக்கிறது")*

## நமஸ்கார யோகம்

*விபூதி யோகத்துடன் நெருங்கிய தொடர்புடையதே நமஸ்கார யோகம். இதை முதலில் பகவான் கிருஷ்ணர் உத்தவருக்குக் கூறிய உபதேச மொழிகளில் வெளிப் படுத்துகிறார். ஆனால் சன்யாசிகள் இதை ஒரேயடியாகப் புறக்கணித்து வந்தனர். சிவானந்தர் நமஸ்கார யோகத்தைத் தனது சாதனையின் முக்கிய அம்சமாக ஆக்கியபின் அச்சன்யாசிகளின் மனோபாவமும் மாறியது. சுவர்க் காச்சிரம வாழ்க்கையில் சுவாமிகளின் நண்பராக விளங்கிய*

ஒருவரிடமிருந்து அருமையான செய்தியொன்றைக் கேட்டேன். சாதுக்களும் மற்றவர்களும் பிணியுற்ற நிலையில் சுவாமிகளின் சத்ய சேவாச்சிரம ஆஸ்பத்திரியில் வந்து குவிந்த வண்ணம் இருப்பர். அவர்களுக்கான மருத்துவ உதவியையும், வேண்டிய அளவு பொருள் உதவியையும் சுவாமிகள் செய்து வந்தார். அத்துடன் நில்லாமல் அவர்கள் அனைவரும் ஆச்சரியப்படும் விதம் அளவற்ற அன்பைத் தெரிவித்து சாஷ்டாங்க நமஸ்காரமும் செய்துவரலானார்! ரிஷீகேசத்திலுள்ள பெருமை பொருந்திய பரமஹம்ச சன்யாசிகள் முதல் மற்றெல்லா சாதுக்களும் அதுவரை இந்த முக்கிய சாதனையைப் புறக்கணித்து வந்தனர். அவர்கள் பணிவதற்கு மனமில்லாதவர்களாய், "யார் யாரை வணங்குவது?", என்ற மிக உயரிய வேதாந்தக் கேள்வியைக் கேட்டுக்கொண்டு நின்றபோது சுவாமிகள் அவர்கள் முன் தோன்றி அவர்களின் பிழையை உணர்த்தினார். அவர்கள் தங்களிடம் தங்கி நின்ற சாதனைச் செறுக்கை உணரலாயினர். வேதாந்தச் செறுக்கு, வைராக்யச் செறுக்கு, தியாகச் செறுக்கு முதலிய செறுக்குகள் செல்வச் செறுக்கு, ஜாதிச் செறுக்கு, கல்விச் செறுக்கு, முதலியவற்றைவிடப் பன்மடங்கு ஆற்றல் வாய்ந்தவை. சரியான பாவத்துடன் செய்யப்பெறும் நமஸ்காரம் இந்தச் செறுக்கைப் போக்குவதற்கான சிறந்த வழியாகும்.

இத்தகைய இயற்கைப் பணிவைத் தனது சீடர்களிலும் ஊட்ட சுவாமிகள் மிகவும் முயற்சி செய்துள்ளார். சுவாமிகளின் சீடரான சுவாமி பரமானந்தர் முதன்முதலாக அவரைச் சுவர்க்காச்சிரமத்தில் சந்தித்தார். சிறிது காலத்திற்குப்பின் ஒரு நாள் சிவானந்தர் சீடனுக்கு

நல்லுரை கூறுகையில் கையை அசைத்தும் புன்னகை புரிந்தும் கும்பிடுபோடும் நாகரீக வழக்கம் போதாதென்றும் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்வதே சாலச்சிறந்ததென்வும் தெரிவித்துத் தன் சீடராகிய சுவாமி பரமானந்தரின் காலிலேயே விழுந்து நமஸ்காரமும் செய்து காண்பித்தார்!

ஆச்சிரமத்திற்கு விஜயம் செய்துள்ள அன்பர்களும் திக்விஜயத்தின்போது சுவாமிகளைச் சந்தித்த பக்தர்களும் கண்டதென்ன? அவர்கள் நமஸ்காரம் செய்யப் புகு முன்பேயே சுவாமிகள் அவர்களின் பாதங்களில் பொத்தென விழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்வதையே கண்டனர்! இத்தனைக்குப் பிறகும் சுவாமிகளது திருப் பாதங்களைத்தொட மற்றவர்கட்கு வெட்கமாக இருக்கும். ஆனால் அவர்களிடமுள்ள நாணம் சுவாமிகளிடம் எத்தகைய மாறுதலையும் ஏற்படுத்தாது. தன்னிடமுள்ள நமஸ்கார சாதனை மற்றவர்களையும் ஒட்டி நிற்கும் வரையிலும் சுவாமிகள் அச்சாதனையைச் செய்துகொண்டே வருவார். அவர்களும் தங்களிடம் பணிவை உண்டுபண்ணும் எந்த முயற்சியையும் புறக்கணிப்பது கூடாது என்பதைப் புரிந்து கொள்ளத் தவறுவதில்லை.

நமஸ்காரத்துடன் இடையறாது 'ஓம் நமோநாராயணாய' என்னும் மந்திரத்தையும் சுவாமி சிவானந்தர் உச்சரித்து வருகிறார். தான் கும்பிடுவது தூலசரீரமல்ல, ஒருவனுடைய ஆத்மாவை நாடிச்செய்யப்படும் அவன் சரீரத்திற்கான வணக்கமல்ல, உலகிலுள்ள ஜீவர்கள் அனைத்துமாக விளங்கும் ஆதிபரம்பொருளுக்குச் செய்யும் நமஸ்காரம் என்பதை இந்த மந்திரம் எடுத்துரைக்கும். இதன் காரண

மாகச் சுவாமிகளின் நமஸ்காரத்தை எல்லோரும் பெறுகின்றனர். அவர்களுள் ஒரு நபர் உலகம் போற்றும் உத்தமன் என்றோ, பணிவுடைய துறவியென்றோ, சாந்த முடைய கிருகஸ்தனென்றோ, சைத்தானின் சீடன் என்றோ, சுபாவத்தில் கொலைகாரன் என்றோ, ஜாதியில் இழிந்தவன் என்றோ, சுவாமிகள் சிறிதும் வேற்றுமை பாராட்டுவதில்லை. சிவானந்தரைவிட வயதில் மிகக் குறைந்தவர்களும் இந்த நியதிக்கு விலக்கானவர்கள் அல்லர்! ஒரு சிறுகுழந்தையும் 'ஓம் நமோநாராயணாய்' என்பதோடு நமஸ்காரத்துடன் வரவேற்கப்படுவது திண்ணம். ஒருவனின் வயது அவனது பொய்யான உடலை ஒட்டினதேயன்றி, அதில் உள்ளுறைந்து கிடக்கும் நித்திய நாராயணனுக்குரியதல்ல.

இந்த நமஸ்காரம் வெறும் வெளி வேஷமல்ல. அது உள்ளத்தின் உள்ளிருந்து தோன்றும் ஆண்டவனின் சர்வ வியாபகத்தன்மை உணர்ச்சியே! அத்துடன் எல்லோருக்கு மான நமஸ்காரமும் சேர்ந்திருக்கிறது. ஆதலால் நடமாடும் இந்தத் தெய்வம், பூமண்டலேசுவரர், உலக வழிகாட்டி, ஒரு குழந்தையைக்கூட "நீ" என்று அழைப்பதில்லை. அவர் சதா மிகப் பெருமை வாய்ந்த பதமான "நீங்கள்" என்பதையே உபயோகித்து வருகிறார். சுவாமிகளின் கனவிலும் கடுஞ்சொல்லைக் காணமுடியாது. மனித உரு அமைப்பைப் பற்றிய பேச்சிலே சுவாமிகள் ஒருபொழுதும் ஈடுபடுவதில்லை. அவர் எல்லோரையும் கடவுளாக எண்ணி, அவர்களிடத்தில் தெய்வீகத்தை உணர்ந்து வருகிறார்.

சிவானந்தரின் சீடர்கள் பொறுமைக்கிடமில்லாத இந்த அனுபவத்தைப் பெற அன்றாடம் பழகவேண்டும். சிவானந்தர் தனது சீடனை நோக்கி வணங்குவதோடு நிற்காது, அவரது பெயரைத் தெய்வத்தின் பெயரை

உச்சரிப்பதுபோல் ஜபித்தும் வருவார். தன் குடீரிலிருந்து அலுவலகம் செல்லும் வழியில் சீடர்களைச் சுவாமிகள் வரவேற்கும் முறையைக் கீழே தெரிந்துகொள்வோம்:—

"ஹரோஹர! தத்துவம் அஸி!! ஓம் சாந்தி
பனுமி குதா முபாரக், நமச்சிவாய,
நமோ நாராயணாய, நமோ பகவதே வாசுதேவாய,
நமோ பகவதே .... .... .... .... .... ....
(தான் சந்திக்கும் சீடனின் பெயரை உபயோகிப்பார்)
நமோ பகவதி கங்கா ராணி ஹரி ஓம் தத்சத்"

சீடர்கள் முன்னேற வேண்டும் என்பதற்காக அவர்களிடம் பல கஷ்டமான வேலைகளைக் குருமார் செய்து வரச் சொல்லியிருப்பதை நாம் கேட்டிருக்கிறோம். பிரம்பை பயன்படுத்தியும் அச்சுறுத்தியும் சீடர்களைக் குருமார் கற்பித்து வந்தனர். இதோ நம் சீரிய குருவிற்கு இவைதொன்றும் தேவையில்லை. மாறாக, சிவானந்தர் தன் சீடர்களின் சேவையில் ஈடுபட்டு நிற்கிறார். அங்ஙனம் சேவை செய்வதில் தனக்கு வரும் பெரும் இன்னல்களையும் அவர் வரவேற்கிறார்! இப்படித் தன் சீடர்களின் கஷ்டத்தையும் சுவாமிகள் மேற்கொள்வதனால் அவர்கள் முன்னேறுவதற்கான வசதிகளும் வாய்ப்புக்களும் அதிகரிக்குமென்பது சுவாமிகளுடைய நம்பிக்கை. பெருமளவில் துன்பத்தை அனுபவிக்கும் சூழ்நிலையில் சுவாமிகளிடமிருந்து சீடர்கட்கு எத்தகைய கட்டுப்பாடும் கனவிலும் இருக்க முடியுமா என்பதைச் சிந்தித்துப் பார்ப்போமாக. அவர் புகட்டுவது உதாரணம் மூலமே. சீடனின் கவனத்தை தன் உதாரணத்தில் செலுத்தச் சிரமப்படாது, நாள்தோறும்

சுவாமிகள் தெய்வீக வாழ்க்கையின் பற்பல அம்சங்களைச் செய்து காட்டிக்கொண்டே இருக்கிறார். இதனால் இன்றில்லாவிடினும் என்றாவது ஒரு நாள் சீடன் உண்மையைத்தெரிந்து கொள்வது திண்ணம்!

## பூஜை

சுவாமிகள் பழகும் சம்பூர்ண யோகத்தை உற்று நோக்குவோமாக! அந்தரங்க பராபூஜை, மானசீக பூஜை, தீபாராதனைகளுடன் புறத்தே செய்யும் மூர்த்தி பூஜை, எதையும் சிவானந்தர் புறக்கணிப்பதில்லை. அகில உலகமும் ஆண்டவனின் பல்வகைத் தோற்றமாகவே அவருக்குத் தெரிகிறது. ஒவ்வொரு நிமிடமும் சுவாமிகள் இதே அனுபவத்தில் வாழ்கிறார். காலையில் சூரியனை மனதினால் பூஜை செய்கிறார். மனதிலே உச்சரிக்கும் மந்திர முறைகூட அவருக்கு அவ்வளவு முக்கியமானதாகத் தோன்றுவதில்லை. "ஓம் சூரியாய நம" என்று கூறி, தூபதீப நைவேத்திய அர்ச்சனாதிகளைத் தன் மனதிலே தோன்றும் வரிசைக் கிரமத்தில் செய்ய முனைவார். கங்கைக் கரையில் உட்கார்ந்து கங்கைநீரைப் பார்த்த மாத்திரத்தில் மனதில் கங்கா தேவிக்கு வழிபாடு செய்வார்; ஸ்நானஞ் செய்யும்போது வழிபாட்டுடன் பால், பூ முதலியவற்றையும் சேர்த்தே செய்வார். விசேஷ நாட்களில், தனிப்பட்ட விக்கிரகங்களைக் கொண்டாடும் நேரம் அவர் அந்தந்த மூர்த்திக்கு ஏற்றவாறுள்ள மந்திரத்தை மனதிலே ஜபித்துக் கொண்டு வழிபாடு செய்து வருவார்!

தனது மாலை உணவைத் தன் அறையிலுள்ள சிறு கோயிலில் எழுந்தருளியிருக்கும் மூர்த்திக்கு நைவேதனம்

செய்யாமல் சிவானந்தர் சாப்பிடமாட்டார். இந்த ஒரே ஒரு அன்றாட நிகழ்ச்சியில்தான் சிவானந்தர் அந்தரங்கத்தை விரும்புகிறார். மணி அடித்துப் பிறரை ஏமாற்றுவதால் பலனில்லை, ஆண்டவனிடம் ஏகாந்தத்தில் இருந்து பிரார்த்தனை செய்ய வேண்டும் என்ற உபதேசத்தை சுவாமிகள் நமக்கு நடைமுறையில் செய்து காட்டவோ என்னவோ இத்தகைய தனிமையில் ஈடுபடுவதில்முனைகிறார். சுவாமிகள் தன் அறையிலுள்ள மூர்த்தியின் முன் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துக் கொண்டிருப்பதை ஒரே ஒரு தடவைதான் அவரது அந்தரங்கப் பணியாளன் பார்த்திருக்கிறான்! இந்த நமஸ்காரம் இயந்திர அசைவு போன்ற வழிபாடல்ல. சரீரத்தாலோ மானசீகமாகவோ சிவானந்தர் கும்பிடும் மூர்த்தி நமக்கு உண்மையென்று தோன்றும் பொருள்களையெல்லாம்விட உண்மையானதாக அவருக்கு விளங்குகிறது. ஆச்சிரமத்திலுள்ள விசுவநாதர் ஆலயத்தில் சுவாமிகள் மந்திர புஷ்பார்ச்சனையில் ஈடுபடும் பொழுது அவரைப் பார்த்தவர்கள் அவரது 'பழக்கமான' பார்வையை அவர் அம்மூர்த்தியை நோக்கும்போது பார்த்திருக்கக்கூடும்! சிவானந்தரின் முகத்தோற்றம் பல நாட்கள்பழகிய நண்பர்களை நாம் வரவேற்பதுபோலிருக்கும். அதேபோல், மூர்த்தி முன் சிவானந்தர் நமஸ்காரம் செய்யும் பொழுது தன்னை முற்றிலும் சரணாகதி செய்துவிடுகிறதைக் காணலாம். அவருடைய விஷயத்தில் தான் 'சரணாகதி' என்ற சொல் முழு அர்த்தத்தைப் பெறுகிறது!

## விராட் பூஜை

நம்மிடமுள்ள பக்தியை நமது பூஜையறைக்குள் பூட்டி வைப்பதைச் சிவானந்தர் ஒருபொழுதும் பார்த்துக்கொண்டு

வாளா இருக்கமாட்டார். பூஜையறை தொடக்கநிலை என்பதில் சந்தேகமில்லை. ஆனால் சிவானந்தர் கூறிக் கூறி நமது உள்ளத்தில் உரம் பெற்றுள்ள லட்சியம் மிகச்சிறந்தது. அகில உலகத்தையும் விசுவப் பிருந்தாவனமாகவும் அதிலுள்ள எண்ணற்ற எல்லாஉயிர்களும் வாசுதேவனாகவும் — வாசுதேவஸ் ஸர்வம் இதி—கொள்வதே அந்த லட்சியம்!

சிவானந்தர் விராட் பூஜையைச் செய்யும் முறையோ பல்வகை. பிணியாளர்களை நாராயண பாவத்துடன் சேவை செய்வதிலிருந்து, சிவானந்தர் சேவையையே ஆண்டவனின் வழிபாடெனக் கொண்டுள்ளார் என்பதைப் பார்க்கிறோம்.

புனிதமான குரு பூர்ணிமா தினத்தன்றும், ஆச்சிரமத்தில் கொண்டாடப்பெறும் ஏனைய புண்ணிய நாட்களிலும் சிவானந்தர் தம்முடன் ஒரு கூடைப்புஷ்பத்தை வைத்திருப்பார். பக்தர்கள் தன்னுடைய குடீருக்குள்ளோ அலுவலகத்தினுள்ளோ நுழையும்போது அவர்களைச் சாதாரண முறையில் ஆத்மார்த்தமாக மலர் தூவி வழி படுவார்.

உண்மையுள்ளம் படைத்த சீடரொருவர் பாதபூஜை நடத்தும் நாளில் குறிப்பிட்ட நிகழ்ச்சிக்குப்பின் புஷ்பத்துடன் சென்று பூஜைக்கு வந்த அத்தனை பக்தர்களையும் சிவானந்தர் தனித்தனியாக வழிபடுவார்.

சுவாமிகளது முகத்திலுள்ள பாவத்தை நன்கு உற்று நோக்குகின்றவர்கள் மட்டுமே அவரது கண்களில் நிலவும் விலாசத்தைக் காணும் வாய்ப்புடையவர்கள்; தன் முன்னால் நிற்கும் ஒவ்வொருவரையும் கடவுளின் தோற்றமாகவே சுவாமிகள் காண்கிறார் என்பதை அவர்கள் மட்டுமே

தெரிந்துகொள்வர்! வெளிப்பகட்டுக்குச் சுவாமிகள் ஒரு பொழுதும் மதிப்புக் கொடுப்பது கிடையாது. பக்தி என்பது உள்ளத்தின் தொழிலேயாகும். வெளிப்பகட்டு பக்தியின்மையை வெளிப்படுத்துகிறது. இதையொட்டிய ஒரு முக்கிய விஷயம் நினைவுக்கு வருகிறது. ஒரு சிவராத்திரி இரவு விசுவநாதர் கோவிலில் நான்கு பிராகார பூஜைகளும் முடிந்த நேரம். கோவில் வெளிப்பிராகாரத்தில் அகண்ட பஞ்சாட்சரக் கீர்த்தனையைச் சிவானந்தர் செய்து வந்தார். கடைசிப் பிரகார பூஜைக்குப் பிறகுப் பகவானுக்குப் புஷ்பாஞ்சலி சமர்ப்பிக்கப்பட்டது. பக்தர்கள் கர்ப்பக் கிருகத்தில் நுழைந்து பக்திச் சிரத்தையுடன் எனத் தோன்றுமாறு புனித வில்வ இலையைச் சிவலிங்கத்தின்மீது சார்த்தி வந்தனர். 'நான் இந்த நிகழ்ச்சியைக் கூர்ந்து கவனித்து வந்தேன். ஒருவருடைய முகத்திலாவது உண்மையான நம்பிக்கை தோன்றவில்லை என்பதை நான் கண்டுகொண்டேன். சிலர் இலிங்கத்தின் மீது பச்சிலையை வீசி எறிந்தனர்! இன்னும் சிலர் பாதி உறங்கின தன்மையுடன் கையிலுள்ள இலையை நழுவ விட்டனர்! மற்றும் சில சிறிய பக்தர்கள் இதை ஒரு மதச்சடங்கெனக் கொண்டு செய்தனர்! அவர்கள் அனைவருக்கும் சிவலிங்கம் ஒரு கல்லாகவே தோன்றியது!! அது எவ்விதத்தில் கடவுளின் பிரதிரூபமாக இருக்கிறதென்பது கூட அவர்கட்குத் தெரியாது. சகலரும் பூஜை செய்து முடிந்தபின் சுவாமிகள் தோன்றினார் கையில் வில்வ இலையுடன். அவரது ஒளி பொருந்திய முகம் ஜோதிமயமாகியது. நந்திகேசுவரருக்கு ஒரு சில வில்வதளங்களைச் சார்த்தி அவரிடம் ஆண்டவனுக்குப் பூஜைசெய்ய அனுமதி கோருவதுபோன்று வேண்டினார். பிறகு சிவலிங்க பூஜைக்கு முனைவதற்கு

முன்னால் மூர்த்தியை நிமிர்ந்து நோக்கி நின்றார். அவ்வமயம் அவர் சுலோகங்களையும் மந்திரங்களையும் ஜபிக்கவில்லை. அவருடைய இரு கண்களும் சிவலிங்கத்துடன் பேசிக் கொண்டிருந்தன!! உற்ற நண்பரைச் சந்திக்கும்பொழுது ஒருவர் முகபாவம் எப்படியிருக்குமோ அதே பாவம் சிவலிங்கத்திற்குப் பூஜை செய்யும்பொழுது சுவாமிகள் முகத்தை அணி செய்தது. வில்வ இலையை மிகவும் மென்மையாக, ஒரு வேளை அந்த இலையின் வீழ்ச்சி ஈசுவரனுக்குத் துன்பத்தை ஏற்படுத்துமோ என்ற அச்சம் கொண்டவர் போன்று, சுவாமிகள் சிவலிங்கத்தின் மீது சார்த்தினார்.

•

வியப்பிற்குரிய ஒரு நிகழ்ச்சி உடனே நடைபெற்றது. வேகமாகக் கண்மூடித் திறப்பதற்குள் யாரும் பார்ப்பதற்கு முன்பு எல்லோரையும் நோக்கி நின்ற சுவாமிகள் கைநிறைய வில்வ தளங்களை எடுத்து அங்கு நின்றிருந்தவர்கள் அனைவர் மீதும் தூவி வழிபாடு செய்து நின்றார்! அங்கு நின்ற அத்தனை பேர்களையும் சுவாமிகள் வணங்கினார்; விராட் சொரூபனை விசுவேசுரனை அவர் எல்லோரிடத்திலும் கண்டு மகிழ்ந்தார்! விராட் பூஜையிலுள்ள முக்கிய கருத்து யாரும் பார்க்காமல் அதைச் செய்வதேயாகும்; அங்ஙனம் செய்யாவிடின் அது வெறும் வெளிவேஷமாகவே முடியும்.

சுவாமிகளின் தூண்டுதலால் ஆச்சிரமத்தில் பலவிசேஷ பூஜைகட்கான ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்கள். அவற்றுள் நவராத்திரி காலத்தில் கன்யா பூஜையும், காந்திஜயந்தியன்று தீண்டாத - நாராயணர் (தோட்டி) பூஜையும் குறிப்பிடத் தகுந்தவை.

# சங்கீர்த்தனம்

சங்கீர்த்தனமும் சிவானந்தரும் ஒரே பொருளுடைய இரு சொற்களாகிவிட்டன. சங்கீர்த்தனம் சுவாமிகளிடம் புதுமையைப் பெற்றுள்ளது. தன்னுடைய வாழ்க்கையின் பல்வேறு நிலைகளிலும் பிரசாரத்துறையிலும் விளங்கி வருவதுபோல் சுவாமிகள் சமீப காலத்தில் தோன்றிய தலைசிறந்த துறவிகள் அத்தனை பேரும் சேர்ந்த முறையில் தோன்றும ஒரே உருவாகக் காட்சி அளிக்கிறார். கௌராங்க மகாப்பிரபு செய்ததுபோல் மகாமந்திரத்தைக் கணக்கற்ற மேடைகளில் இந்தியாமுழுவதும் கானம் செய்து சுவாமிகள் மக்களை மகிழவைத்திருக்கிறார்கள். அவரது கணக்கில் கீர்த்தனைகள் அநேகம் ஜீவர்களைமாற்றி அமைத்திருக்கிறது; நாஸ்திகர்களைத் தீவிர பக்தர்களாக மாற்றியுள்ளன. சைதன்ய மகாத்மாவைப்போல் சிவானந்தர் வேதாந்த நூல்களில் மிகச்சிறந்த ஞானத்தைக்கொண்டு விளங்குகிறார். ஆதலால் இந்த பக்திசங்கீர்த்தனம் ஞானத்திலிருந்து பிறக்கிறது; மூடநம்பிக்கையிலிருந்தல்ல!! மீராவைப்போல் மனமுருகிப் பக்திப் பாடல்களை சுவாமிகள் பாடுகிறார். வைராக்யமும் ஞானமும் ஒருங்கே சேர்ந்த பல பாடல்களைச் சுவாமிகள் இயற்றியுள்ளார்கள். உணர்ச்சியூட்டும் இத்தகைய வேதாந்தப் பாடல்கள் எல்லாம் ஆங்கில மொழியில் ஆக்கப் பெற்று அகில உலகமும் பரவிநிற்கின்றன.

"ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண
ஹரே ஹரே" என்ற மகாமந்திரக் கீர்த்தனைதான் சிவானந்தருக்கு மிகவும் பிரியமானது. இந்த யுக மக்களுக்கு

அது அரியதோர் வரப்பிரசாதம். சாதகர்கள் எல்லோர் களுடையவும் உள்ளத்தில் இதை நிலைநிறுத்தச் சிவானந்தர் மிகவும் சிரத்தை எடுத்துக்கொண்டுள்ளார்.

இந்தக் கீர்த்தனத்தின் மீதுள்ள அபார பற்றுதலின் காரணமாக ஆனந்த குடீரில் அகண்ட மகாமந்திரக் கீர்த்தனையையே சுவாமிகள் ஏற்படுத்தியுள்ளார். 3—12—1943-லிருந்து இந்தக் கீர்த்தனை இரவும் பகலும் இடைவிடாது நடைபெற்று வருகிறது. இதன் விளைவாக ஏற்படும் அதிசக்திவாய்ந்த ஆத்மீக அலைகள் கண்ணுக்குத் தெரியாமல் சாதகர்களை அவர்களுடைய ஆத்மீக சாதனையில் உதவி வருகின்றன.

மகாநாடுகளைக் கூட்டுகிறவர்களையும் மற்ற முக்கிய விழாக்களை நடத்துகிறவர்களையும் விழாவுடன் அகண்ட கீர்த்தனையையும் ஏற்பாடு செய்யச் சுவாமிகள் ஊக்கிவிடுவதுடன் வெற்றிக்கான நல்லாசிகளையும் தெரிவித்து வருகிறார்

அடிப்படையிலேயே அத்துவிதத் தன்மையைக் கொண்டதாக இருக்கிறது என்பதே சிவானந்தருடைய கீர்த்தனையின் சிறிய குணம். கடவுளுடன் சுவாமிகளின் ஒன்றுபட்டநிலையை அது விளக்கிக்காட்டுகிறது. விதவிதமான சுபாவ விசேஷணங்களும் ஆத்மீக உணர்ச்சியும் பொருந்தப் பெற்ற மக்கள் கடவுளைப் பல்வேறு விதத்தில் நினைந்து வழிபட்டு வருகின்றார்கள் என்ற சமய ஞானம் சுவாமிகளிடம் பூரணமாக விளங்குகிறது என்பதையும் அது விவரித்துக் காட்டுகிறது. ஆச்சிரம சத்சங்கத்தில் மகாமந்திர ஜபம் சாதாரண நிகழ்ச்சியாக இருந்தாலும் பல தெய்வங் களைக் குறிக்கும் தமது சொந்தக்கீர்த்தனைகள் பலவற்றையும்

சுவாமிகள் பாடிவருவார். ஞாயிறன்று சூரியனையும், திங்களன்று சிவனையும், செவ்வாயன்று தேவியையும் முருகனையும், வியாழனன்று குருவையும், வெள்ளியன்று ஈசுவரியையும், சனியன்று அநுமனையும் அவரவர்களுக்குரிய கீர்த்தனைகளைப் பாடி வழிபடுவார். விழா நாட்களில் அன்று அலங்கரிக்கப்பட்ட அதே மூர்த்தியைப் பற்றிய கீர்த்தனைகளைப் பாடுவார். நவராத்திரியின் போது துர்க்கை, லக்ஷ்மி, சரஸ்வதியையும், ஸ்கந்தஷஷ்டியன்று முருகனையும், ராமநவமியன்று இராமனையும், ஜன்மாஷ்டமி யன்று கிருஷ்ணனையும் குறித்த பாடல்கள் நிகழ்ச்சி நிரலில் விசேஷ இடம் பெறும்.

சிவானந்தருக்கு எல்லா மதங்கள் மீதும் மிகுந்த அன்புண்டு. இந்த உண்மை ஏசுநாதர், அல்லா, சௌராஸ்டிரர் மீதுள்ள கீர்த்தனைகளைச் சுவாமிகள் பாடுவதிலிருந்து தெரியவரும். எப்பொழுதெல்லாம் பல் வேறு மதப்பிரிவினர்கள் சத்சங்கத்தில் பங்கு கொள்ளுகின் றார்களோ அப்பொழுதெல்லாம் சுவாமிகள் இம்மாதிரியான கீர்த்தனைகளை மிக அழகாகப் பாடுவார்!

ஏனைய சாதனைகளைத் தான் கையாளுவது போல், வெறும் வெளிவேஷத்துக்காக அல்லாமல் ஆண்டவனுக்காக கசிந்துருகிக் கீர்த்தனைகளைத் தான் பாடுவதுபோல் சாதகர் களையும் பாடச்சொல்லுவார். அதிகமான ஓசையையும் இசைக்கருவிகளின் உதவியையும் சுவாமிகள் வேண்டுகின்று ரில்லை. அடிக்கடி பல இடங்களிலும் காணப்படுவது போன்று சோர்வடையும் வரையில் உச்சத்தில் கூச்சலிட்டுக் கீர்த்தனை செய்தபின் ஏதோ சமாதி நிலை அடைவதாகக் கூறப்படும் மயக்க நிலையை உண்டுபண்ணும் கீர்த்தனைகள்

சுவாமிகட்கு வராது! அவர்கள் சாதகனிடம் சதா இனிமையாகத் தம் தம் தரத்துக்கேற்றவாறு இசையுடன் பாடச் சொல்வார்! இந்தப் பாடலை உள்ளத்தில் பள்ளி கொண்ட பரந்தாமன் உற்றுக் கேட்டுக் கொண்டிருப்பதாகவே சுவாமிகள் எண்ணுகிறார்! "இத்தகைய கீர்த்தனைகள் பாவசமாதியை உண்டுபண்ணும்", என்று ஒரு தடவை சுவாமிகள் தெரிவித்ததுண்டு.

## சத் சங்கம்

சிவானந்தர் மிகவும் தைரியமான ஒரு நடைமுறை லட்சியவாதி. சாதகனுடைய உள்ளத்தில் தெய்வீக அன்பை நிலைநிறுத்த வல்லது சத்சங்கம் தான் என்பதைத் சுவர்க்காச்சிரம வாழ்க்கையின் தொடக்கத்திலேயே சுவாமிகள் கண்டுபிடித்துள்ளார். மனக்கோட்டை கட்டுவதனால் மிகுந்த நஷ்டம்தான் ஏற்படும் என்பதை வலியுறுத்திக் கூறியுள்ளார். சாதனைகளை உள்ளிருந்தே கெடுக்கும் பயங்கர எதிரிதான் சோம்பல்! உலகியலில் ஊறிக்கிடக்கும் ஒருவனைத் திருத்திவிடலாம். ஆனால் சோம்பேறி உங்களுடைய நல்லுரைகளைக் கேட்பதற்கும் சோம்பல் கொண்டு விடுகிறான்! மேலும் தான் 'அந்தரங்க–சாந்தி'யை அனுபவிப்பதான ஒரு பொய் எண்ணத்தையும் அவன் கொண்டிருக்கிறான். முடிவில் நன்மையே விளையும் என்ற நம்பிக்கையும் ஒருபுறம் நிலவுகிறது! தாமசகுணமுடைய பலரையும் சுவாமிகள் சந்தித்திருக்கிறார்கள். ஆதலால் சஞ்சல மனமில்லாத தீவிரமான முழுநேரத் தியானத்திற்கு உத்தரகாசி செல்ல விரும்பும் சாதகர்களுக்குச் சிவானந்தர் இரக்கத்தோடு வழிகாட்டுகிறார். "ஆனந்த குடீர்" தான் அவ்வழி!! ஆச்சிரமத்திற்குப் பின்னால் கானகமிருக்கிறது.

நீங்கள் விரும்பினால் அங்கே சென்று ஏகாந்தமாக இருக்கலாம். அல்லது பூல்—சட்டி, வசிஷ்ட குகை, முதலிய அடுத்துள்ள இடங்களுக்குப் பிரயாணச் செலவுடன் சுவாமிகள் உங்களை அனுப்பிவைக்கவும் இசைகிறார். அங்கே நீங்கள் ஏகாந்தமாகவும் அமைதியாகவும் இருக்க இயலும். ஆனால் வேலைக் கள்வனாவதற்கே அம்முயற்சி என்றால் அப்படிச் செய்வது காப்பாற்றும் அருளைவிட்டு அகன்று செல்வதேயாகும்! நேர்மாறாக ஆத்மார்த்த சாதகன் சேவையும் அன்பும் கலந்த வாழ்க்கையில் ஈடுபட்டு, சாதனையையும் சேவையையும் நன்கு ஒன்றாக்கி, தனிமையையும், சேவையையும் சேர்த்து நிற்பான். சிவானந்தரே அத்தகைய சாதனைக்கான வழிவகைகளை வகுத்துள்ளார். அவர் ஏற்படுத்தியுள்ள ஆத்மீகப் பட்டாளத்தில் 'சத்சங்கம்' முக்கிய இடம் பெறுகிறது.

ஆச்சிரமத்தில் நடைபெறும் சத்சங்கத்தில் ஒன்றைக் கூடச் சுவாமிகள் தவறுவதில்லை. அவரின்றிச் சத்சங்கமும் இல்லை! ஏன்? அவரே சத்சங்கத்திலுள்ள 'சத்'!! ஆச்சிரம சத்சங்கத்தில் கூடும் அனைவரும் விரும்புவது அவரது தெய்வீகத் தொடர்புதான். ஆச்சிரமத்தில் ஸ்திரமாக வாழ்ந்து வரும் சாதகர்களிடமும் தெய்வநெறிக் கழகக் கிளைகள் செயலாற்றும் நூற்றுக் கணக்கான நகரங்களில் வசிக்கும் சீடர்களிடமும் சுவாமிகள் கூறிவருவது நினைவிலிருத்த வேண்டிய விஷயமாகும்: "அனைவரும் ஒன்றுபட்டுப் பிரார்த்தனை செய்யவேண்டும்; ஒன்று சேர்ந்து பாட வேண்டும்; இணைந்து கீர்த்தனை செய்யவேண்டும்" என்றுள்ள சுவாமிகளின் உபதேச மொழிகள் உணரற்பாலவை. சொந்தச் சாதனையில் ஈடுபட்டதனால் சத்சங்கத்திற்கு வர

இயலாது போயிற்று என்று ஒரு சாதகன் ஒரு தடவை சொன்னான். குறும்புப் புன்னகையுடன் அவனைப் பார்த்துச் சுவாமிகள், "அத்துடன் அதிசயிக்கும்படியான சமாதி நிலையையும் அடைந்திருந்தீர்கள் போலும்", என்றார்! "தனித்த சாதனை என்பதெல்லாம் உறக்கம் தான்" என்று சுவாமிகள் அடிக்கடிக் கூறியிருப்பதுடன் "கூட்டுப் பிரார்த்தனை, கூட்டுத்தியானத்தில் ஒரு சக்தி வாய்ந்த ஆத்மீக அலை ஏற்படுகிறது. இது ஏற்கெனவே ஆத்மீக எழுச்சியுடைய சிறந்த சாதகர்களின் மனோ நிலையை மேலும் உயரிய நிலைக்கு உயர்த்திவிட உதவுகிறது", என்றும் தெரிவித்துள்ளார்.

சிவானந்தரின் சத்சங்கம் பலவிதத்திலும் தனிச் சிறப்புடையது. அதில் சங்கீர்த்தனம், பஜனை, சங்கீதம், வேதபாராயணம், சொற்பெருக்கு, முதலியன அடங்கியிருக்கும். எல்லோருடையவும் தேவைக்கும் சுபாவத்திற்கும் ஏற்றவாறு அது பலனை அளிக்கிறது. எல்லோருடைய பசியையும் அது போக்குகிறது. அது எல்லோராலும் விரும்பப்படுகிறது. எல்லாத் தெய்வங்கட்கும் பொதுவான சங்கீர்த்தனத்தைச் சில தொனிகளால் தொடங்குகிறார்; மகாமந்திர கீர்த்தனையுடன் அதை முடிக்கிறார். அங்கே உயரிய சாந்தி நிலவுகிறது. இது அவருடைய மனோ நிலையை நன்கு வெளிப்படுத்திக் காட்டுகிறது. ஆம்! எல்லோரும் சேர்ந்து சொல்வோம்:—

சர்வேஷாம் சுவஸ்திர் பவது
சர்வேஷாம் சாந்திர் பவது
சர்வேஷாம் பூர்ணம் பவது
சர்வேஷாம் மங்களம் பவது

சர்வே பவந்து சுகினஹ் சர்வே சந்து நிராமயாஹ
சர்வே பத்ராணி பச்யந்து மா கஸ்சித் துக்கபாக் பவேத்

அஸதோ மா சத் – கமய
தமஸோ மா ஜோதிர் – கமய
மிருத்யோர் மா அமிருதம் – கமய

ஓம் பூர்ணமதஹ் பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே
பூர்ணஸ்யப் பூர்ணமாதாய பூர்ணமேவாவசிஷ்யதே.

ஓம் சாந்தி ! சாந்தி !! சாந்தி !!!

# பிரார்த்தனை

•

*அனுபவரீதியாகப் பிரார்த்தனை செய்வதில் சிவானந்தர் சிறந்து விளங்குகிறார். உள்ளத்திலிருந்து எழும்பிரார்த்தனை, சரீரத்தின் ஒவ்வொரு கண்ணறையிலும் உறைந்து போஷிக்கும் பிரார்த்தனை இதயத்திலிருந்து வெளிவரும் ரத்தம் போன்று எங்கும் பரந்து அவரது சரீரத்தைப் போஷிக்கிறது. சத் சங்கத்தின்போதும் மற்ற நேரங் களிலும் சுவாமிகள், "திரு...... இன்று காலமாகிவிட்டார். அவரது ஆத்மா சாந்தியடைய நாம் அனைவரும் பிரார்த்திப் போமாக", என்று கூறுவதை அடிக்கடிக் கேட்கலாம். "இன்று திரு...... அவர்களின் பிறந்தநாள். ஆதலால் அவரது ஆரோக்யத்திற்கும் நீண்ட ஆயுளுக்கும் வேண்டிப் பிரார்த்தனை செய்வோம்", என்பார் சிலநேரம். "திரு...... சுகவீனமாக இருக்கிறார். ஆதலால் அவர் பிணியின் பிடிப்பிலிருந்து விடுபட்டு ஆரோக்யத்துடனும் நீண்ட ஆயுளுடனும் இருக்கப் பிரார்த்திப்போமாக", என்று மற்றும் பல நேரங்களில் கூறுவார். பிறகு எல்லோரும்*

சேர்ந்த முறையில் சுவாமிகள் தலைமையில் கீர்த்தனை செய்த பின் முடிவில் இரண்டு நிமிட மௌனத் தியானப் பிரார்த்தனையில் சுவாமிகள் ஈடுபடுவார். எவருக்காகப் பிரார்த்தனை செய்யப்படுகிறதோ, அன்னாருக்காக ஆண்டவனை வேண்டி நிற்கும் அவதார புருடனின் திருவடிகளில் கூடியுள்ள ஒரு பெரும் கூட்டத்தினரால் ஆக்கப்பட்ட சக்திவாய்ந்த ஆத்மீகத் தன்மையைக் காண்பதற்கு நீங்கள் ஞானக்கண்களைப் பெற்றிருத்தல் வேண்டும். இந்தப் பிரார்த்தனை பெரும் அதிசயங்களை உண்டு பண்ணியிருக்கிறது.

மேலும் நம்மனைவரையும் தன்னலமின்றி எல்லோருக்காகவும் பிரார்த்தனை செய்யச் சுவாமிகள் வற்புறுத்துகிறார். உதாரணமாக, ஒருவனுடைய பிறந்த நாளன்று அல்லது ஆச்சிரமத்திற்கு விஜயம் செய்துள்ளவரின் நீண்ட ஆரோக்கிய நல்வாழ்வுக்குப் பிரார்த்தனை செய்யும்பொழுது சுவாமிகள், "ஆண்டவன் திரு.........யும் குடும்பத்தையும் அகில உலகத்தையும் ஆரோக்யம், நீண்ட ஆயுள், சாந்தி, சமாதானம், மோட்சம் இவைகளால் ஆசிர்வதிப்பாராக," என்று வேண்டி நிற்பார். மேலும், "திரு...யும் குடும்பமும் வெகுநாள் வாழ்க", என்று மும்முறை கோஷமிட்ட பின் நான்காவது கோஷமாக "மனித சமுதாயம் நீடூழி வாழ்க" என்று கூறி இறைஞ்சி நிற்பார்!

இந்தப் பிரார்த்தனை மனித சமுதாயத்தின் நலனை மட்டும் குறிப்பிடுவதல்ல. காயமுற்ற குரங்கோ நாயோ வழியிலே கிடந்தால் ஒரு காயமடைந்த மனிதனுக்குச் செய்யப்படும் சிகிச்சைகள் அவற்றுக்கும் நடைபெறும். அதன்பின் அவர்கள் நீண்ட ஆயுளுடன் இருக்க வேண்டி

மகா மிருத்யுஞ்சய மந்திரத்தையும் சுவாமிகள் ஜபம் செய்வார்! போகும் வழியில் இறந்த ஒரு பல்லியைப் பார்க்க நேரிட்டால் அதன் பிரிந்த ஆவியின் சாந்திக்காகச் சுவாமிகள் மகாமிருத்யுஞ்சய மந்திரத்தை உச்சரிப்பார்! சிவானந்தருக்கு எல்லா ஜீவர்களும் ஒரே மாதிரிதான்; அது போன்றே பிரார்த்தனையும்!!

நமது ஜீவிதத்தையே நெடும் பிரார்த்தனையாக்கச் சொல்கிறார் சிவானந்தர். அது எப்படி? ஆண்டவனை அடையவும் மனித சமுதாயத்திற்குத் தொண்டு செய்யவும் வேண்டியே வாழ்வதனால் அந்த நோக்கத்தில் வெற்றிபெற முடியும் என்கிறார் சுவாமிகள். தன்னலமில்லாத சேவையே நடைமுறைப் பிரார்த்தனை. பிரார்த்தனையே சாதனையுமாகும். பிரார்த்தனை தான் வாழ்க்கையின் வெற்றிக்கான திறவு கோலாகும். பிரார்த்தனை என்பது தான் என்ன? எங்கும் நிறைந்து, எல்லாவற்றிலுமாய் எல்லாமாய் நிற்கும் கடவுளைத் தெரிந்துகொள்வதோடு ஜீவாத்மாவின் கட்டுப் பட்ட நிலையையும் பலஹீன நிலையையும் தெரிந்துகொள்வதே பிரார்த்தனையாகும். இந்தச் சக்தியற்ற நிலையை வெல்லப் பிரார்த்தனை மனிதனுக்கு மிகவும் உதவியாக இருக்கிறது. அத்துடன் தெய்வீக ஜோதியை அனுபவிக்க உதவியாகவும் இருக்கிறது. ஆதலால் பிரார்த்தனை சரணாகதியையும் பக்தியையும் கொண்டு பிரகாசிக்கிறது. இந்தப் பிரார்த்தனை ஒரு சுபாவமாகும் வரையிலும் இதை ஆக்கித்தரும் எந்த முறையையும் சுவாமிகள் கைக்கொள்ள வற்புறுத்துகிறார். கோவில்கள், பிம்பங்கள், பொம்மைகள், கடவுள் படங்கள் மகான்களின் படங்கள், புனித நூல்கள் — இவையனைத்தும் செவ்வியமுறையில் உபயோகப்படுத்தப்பட்டால் பிரார்த்தனை

நிலைத்து நிற்கும். இது விஷயம் சிவானந்தரே ஒரு உதாரண புருடராக விளங்குகிறார். சுவாமிகள் கேவலாத்துவித வேதாந்தக் கொள்கையை உடையவர். ஆனால் அன்றாட வாழ்க்கையில் சுவாமிகள் ஒரு பரமபக்தர்! எல்லாவற்றிலும் அவர் கடவுளைக் கண்டுகளிக்கிறார்! விக்கிரகங்களில் கடவுள் தன்மையை அவர் மறுக்கின்றாரில்லை. அவரது பூஜை யறையில் கடவுளின் ஒரு சித்திரம் இருக்கிறது. அலுவலகத்தில் நிறையப் படங்கள் இருக்கின்றன. சத்சங்கக் கூடத்தில் பலதெய்வங்களின் திருவுருவப்படங்கள் மாட்டப் பெற்றிருக்கின்றன. அவருக்கு அது ஒரு துண்டுக் காகிதமல்ல! அப்படங்களனைத்தும் ஆண்டவனின் உயிருள்ள உருவங்களாகவே தெரிகின்றன! எல்லோரையும் போல் முதலிலே நல்ல எண்ணத்துடன் ஒரு படத்தை மாட்டிவிட்டுப் பின்னால் மறந்துவிடும் சுபாவமுடையவரல்ல சுவாமிகள்! தனது அன்றாடக் காரியக் கிரமத்தினுள் அவைகளின் தோற்றத்தை இணைத்து விடுகிறார்! அலுவலகத்தில் நுழைந்தவுடனேயே அப்படங்களை ஒருதரம் பார்வையிடுவார். அவைகளெல்லாம் அவரது ஆபீஸ் "அலுவலர்களின்" ஒரு பகுதியே. அவைகளைச் சுவாமிகள் பார்க்கும்பொழுது "இதோ உனது கட்டளையைச் செய்ய உனது கருவியாக நான் உன் முன் நிற்கிறேன்", என்று அவர் உள்ளம் கூறுவதை நீங்கள் தெரிந்து கொள்ளலாம். தனது வேலையைத் தொடங்கும் முன்னர் ஒரு நிமிடம் மௌனமாகப் பிரார்த்தனை செய்வார். ஒரு பிரிவு அலுவல் தீர்ந்து மற்றொரு பிரிவு வேலை தொடங்கும் பொழுதும், ஒரு பார்வையாளர் சென்ற பின் மற்றொருவர் வரும் சமயத்திலும் சிவானந்தர் தனது சாய்வு நாற்காலியிலே சாய்ந்துகொண்டு ஒரு கண்ணை மூடிக்கொண்டு மற்றக்

கண்ணை லேசாகத் திறந்து ஒரு தெய்வப்படத்தை நோக்கிய வண்ணம் இருப்பார். அந்த நிமிடத்தில் அவரிடம் உயரிய சாந்தியும் பேரானந்தமும் பொலிவு பெறுவதைக் காணலாம். ஆண்டவனுடன் உள்ள தொடர்பை இம்முறையில் தொடர்ந்து வைத்துக் கொண்டிருக்கிறார் சுவாமிகள். இந்தச் சாதனையில் சிவானந்தர் சிறந்து விளங்குகிறார் என்பது நன்கு தெரிய வரும். ஏதாவது ஒரு படம் இடம் மாற்றி வைக்கப்பட்டிருந்தால் உடனேயே அதைத் தெரிந்து அது முன்னால் இருந்த இடத்தில் மறுபடியும் வைத்த பின்னரே மற்ற வேலைகளில் ஈடுபடுவார். தெய்வீக உணர்ச்சியில் உறைந்துநிற்கும் சுவாமி சிவானந்தருக்கு இத்தகைய சாதாரண விஷயங்களில் ஈடுபட என்ன அவசியம் நேர்ந்துவிட்டது என்று நீங்கள் கேட்கலாம். இது மற்றவர்கட்கு அவர்கள் பின்பற்றக்கூடிய அளவில் பாடம் புகட்டவேயன்றி அவருக்காக அல்ல.

சிவானந்தர் இயற்றியுள்ள மனோநிலையையுயர்த்தும் அழகிய உலகப் பொதுப் பிரார்த்தனையைக் காலையும் மாலையும் சொல்லும் ஒருவன் கடவுளின் சீரிய நல்லாசியைப் பெற்று விரைவிலேயே தெய்வத்தை நோக்கிச் சென்று விடுதலை பெற்று ஜோதிமயமாக விளங்குவது திண்ணம்.

## சித்தி

பக்தி யோகத்தின் சிறந்த வெகுமதியான ஆத்மானுபூதியைப் பெறுவதைவிடச் சிறந்த பேறு, இந்த உலகில் வேறு இருக்க முடியுமா? முடியாது! கடவுளைக் காண்பது, கடவுளை நேருக்கு நேராகக் கண்டு களிப்பதுதான் உலகிலுள்ள எந்த உண்மைக்கும் மேலானது. இதுவே

பக்தியோகத்தின் பலன். சிவானந்தர் தனது ஆத்மானுபூதியை விளம்பரப் படுத்துவதில்லை; தான் கடவுளைக் கண்டதாகப் பறைசாற்றுவதும் இல்லை! சுவாமிகள் தம்மைத்தாம் உணர்ந்து கொள்ளுவதும் மற்றவர்க்கு எடுத்துரைப்பதும் இன்னும் உலகிலுள்ள மற்றனைவருக்கும் எடுத்துக் கூறுவதுமான வேதாந்தக் கொள்கை: "ஒருவன் செய்யும் வேலையைக்கொண்டு அவனைத் தெரிந்து கொள்ளுங்கள்", என்பதே. உயரிய ஆத்மீக நிலையில் ஸ்திரமாக நிலைத்து நிற்பதற்கு முன்னதாகவே சுவாமிகட்கு கடவுளின் நேர் தரிசனம் குறைந்தது மும்முறையாவது கிட்டியிருக்க வேண்டும் என்பதாகக் கைதேர்ந்த கைரேகைக் காரர்களும் மனோசக்தி நிபுணர்களும் உறுதியுடன் தெரிவித்திருக்கிறார்கள். இதிலிருந்து சுவாமிகள் மலாயாவை விட்டுத் துறவறத்தில் புகுமுன்பே முதன் முறையாகக் கடவுளைக் கண்டிருக்கவேண்டும் என்பது தெளிவாகிறது.

சுவாமிகள் நமக்கும் மனித சமுதாயத்திற்கும் செய்யக் கூடிய சிறந்த உதவியின் உயர்ந்த வகை தான் நமக்கு வேண்டியது. ஏதோ தோற்றத்தைக் கண்டவர்கள் தாங்கள் கடவுளைக் கண்டதாகத் தெருவிலே சென்று விளம்பரப் படுத்துகின்றனர். அவர்களிடம் ஏதாவது சிறிது மனோ சக்தி இருக்குமாகில் அவர்கள் கடவுளிடம் ஒரு துண்டு ரொட்டிக்காக இறைஞ்சி நிற்பர் என்பது உறுதி! அத்தகையவர்களால் மனித சமுதாயம் காப்பாற்றப்படாமல் ஏமாற்றப்படுகிறது. மனித சமுதாயத்தின் ரட்சகர்தான் சிவானந்தர். அவரது முன்னிலையில் மக்கள் உயரிய ஆனந்தத்தையும் சாந்தியையும் அடைவதுடன் சிறந்த திருப்தியையும் அனுபவிக்கின்றனர். சுவாமிகளது திருப் பார்வையே எல்லாவற்றையும் மேலோங்கச் செய்து,

மாற்றி அமைத்துச் சிறப்புறச் செய்கிறது. அவரைச்சுற்றி தெய்வீக ஒளி வீசுகிறது. நாத்திக இருள், உலகியல், தெய்வீகத்திற்குப் புறம்பான அம்சங்கள், இவை சிவானந்தரின் அருள்சென்று சேர்ந்த உள்ளத்திலிருந்து மறைந்து செல்கின்றன!

ஆச்சிரமத்தில் சிவானந்தர் செய்யும் பிரார்த்தனையால் மக்கள் அதிசயிக்கத்தக்க முறையில் குணப்படுத்தப் படுகின்றனர். நம்பிக்கை மிகுந்தவர்கள் சிவானந்தரிடம் தங்களது உள்ளத்தைத் திறந்து காட்டி, அவரிடம் பிரார்த்தனை செய்து, அவரது திருப்பாதங்கட்குத் தொண்டாற்றியதன் பலனாகத் தங்களது ஆசைக்குகந்த பொருள்களைப்பெற்று இன்பமெய்துகின்றனர். பக்தர்களின் இத்தகைய அதியற்புதமான அநுபவங்களைச் "சிவானந்தரின் அதிசயச் செயல்கள்" என்ற தலைப்பில் சமீப காலத்திய ஆச்சிரம வெளியீடுகள் பலவற்றின் பிற்பகுதியில் சேர்க்கப் பட்டிருக்கின்றன. நீங்களும் அத்தகைய அனுபவத்தைப் பெறமுடியும். அதைப் பெறுவதற்கு நீங்கள் சுவாமிகளின் தெய்வீகத் தன்மையில் முழு நம்பிக்கை வைக்க வேண்டும்; அவருக்குத் தொண்டு செய்து அவருடைய அருளைப்பெற முயலவேண்டும்.

சித்தியடைந்த ஒருவரிடம் மந்திர தீட்சை பெற்றுக் கொண்டாலே பலன்மிக உண்டு என்பதை மந்திர சாஸ்திரத்தில் தேர்ச்சியுற்றவர் தெரிந்திருப்பர். தம்மிடம் வருபவர் யாராலும் சரி, அவர்கட்குப் பிடித்தமான மந்திரத்தை சுவாமிகள் உபதேசம் செய்கிறார். அங்ஙனம் தீட்சை பெற்றவர்கள் தங்களது வாழ்க்கையில் அந்நாளைய தினத்தை வாழ்க்கையையே மாற்றியமைக்கும் நன் நாளாக உணரும் நிலை பலரிடமும் ஏற்பட்டுள்ளது. உள்ளுறையும் சாந்தியையும் சொல்ல முடியாத

ஆனந்தத்தையும், அனுபவிக்கத் தொடங்குவதை அன்று அவர்கள் உணரமுடியும். எல்லா மந்திரங்களுக்கும் லட்சிய மாகிய கடவுளுடன் ஒன்றிநிற்கும் உயரிய தன்மையைச் சிவானந்தர் பெற்றுள்ளார். அம்முறையே எல்லா மந்திரங் களிலும்சித்தியையும் அடைந்திருக்கிறார். தெய்வீக சக்தியும் அருளும் பெருக்கெடுத்தோடும் உயரிய ஓடைதான் சிவானந்தர். மந்திர தீட்சை அளிக்கும்பொழுது சிவானந்தர் முதன் முதலாக மந்திரத்தைச் சீடனுக்கு உபதேசம் செய்கிறார். அம்மந்திரம் உடனேயே ஆத்மீக சக்தியோடு ஒன்றாகி உயிர்பெற்றுச் சீடனின் உள்ளத்தில் உயரிய உணர்ச்சியை உண்டுபண்ணி விடுகிறது. அங்ஙனம் தீட்சை பெற்றவர்களும் எளிதிலே மந்திரசக்தியை அடைகின்றனர்.

உள்ளத்தை உருக்கும் சுவாமிகளின் சங்கீர்த்தனத் தினால் ஏற்பட்ட சித்திகளைக் குறித்துச் சுவாமிகள் தலைமை தாங்கிய ஒரு சங்கீர்த்தன மகாநாட்டில் பங்கு கொண்ட அன்பர் ஒருவர் கூறியதை நீங்கள் நன்கு கேட்கவேண்டும். நாகரிகம் சிறந்து விளங்கியது அந்தக்காலம். மக்கள் அன்று கடவுளின் பெயரைச் சொல்லக்கூட வெட்கம் கொண்டனர். இராமர், கிருஷ்ணர் முதலிய அவதாரங்களின் திருப் பெயர்களைச் சொல்வதைக்கூட எதிர்ப்பவர்கள் பலர் இருந்தனர்! இத்தகைய மக்கள் சிவானந்தரின் சீரிய சொற்களைச் சிறிது நேரம் கேட்க முனைந்ததில் தங்களிடம் நிலவி வந்த பிணிஅகன்று சென்றதைக் கண்கூடாகக் கண்டனர்! அனைவரும் திவ்ய நாமத்தைக் கானம் செய்து சுவாமிகளுடன் ஒன்றாக மேடையில் ஆனந்தக்கூத்தாடத் தொடங்கினர்! அவர்களிடம் நிலவி வந்த மயக்கமும், மூடத்தனமான படாடோபங்களும், கொள்கைகளும் காற்றிலே பறந்து சென்றன. இதைவிட உயரிய சித்தி

இருக்க முடியுமா? கடவுளின் திருவடிகளையே பற்றி நிற்கும் உயரிய உருவாகச் சிவானந்தர் ஆகிவிட்டார்! அவருடன் தொடர்பு கொள்ளும் யாவரும் பக்தியைத் தன்னகத்தே கொண்டு பிரகாசிக்கின்றனர்.

சுவாமிகள் தன் சொந்த உதாரணத்தின் மூலமாகவே கடவுளின் உண்மையான பக்தனிடம் அழுக்காறு, பகைமை, கோபம், ஆணவம் முதலிய தீயகுணங்கள் நிலைக்க முடியா தென்ற உண்மையை நிரூபித்துக் காட்டியுள்ளார். எந்த ஒரு கழகத்தின் முன்னேற்றத்திலும் சுவாமிகள் மகிழ்ச்சி யடைகிறார். அக்கழகத்தின் நல்வாழ்வுக்கான நல்லாசிகூறி, எதிரான கொள்கைகளையுடைய ஸ்தாபனங்களையும் வெற்றிப் பாதையில் விரைந்து செல்ல உதவுகிறார்! இதைக்காணும் யாவரும் அதிசயித்து நிற்கின்றனர்!! மாபெரும் மேன்மை பொருந்திய பெரியார்களிடமும் பொருந்த முடியாத இப்பேராற்றல் சிவானந்தரிடம் சிறந்து விளங்குகிறது. இதனால் சுவாமிகள் எங்கும் நிறைந்த கடவுளிடம் அளவிலா பக்தி பூண்டு பிரகாசிக்கிறார்.

சிவானந்தர் ஸ்தாபித்துள்ள தெய்வ நெறிக் கழகங்கள், யோக வெதாந்த ஆரண்யப் பல்கலைக் கழகம், சிவானந்தாச் சிரமம், கங்கைக் கரையில் வெகு விரைவிலே தோன்றியுள்ள சிவானந்த நகரம் முதலிய அனைத்தும் சுவாமிகளிடம் நிலவும் அதியற்புதமான தெய்வீக சக்தியின் அத்தாட்சிகள். அவரது அன்றாட வாழ்க்கையும் இக்கழகங்களைச் செயல் புரிய வைக்கும் சீரிய தன்மையும் கீதையின் வியாக்கி யானத்தின் நடைமுறை உதாரணமாக அமைந்து காட்சி யளிக்கின்றன.

"அனன்யாஸ் சிந்தயந்தோ மாம்
யே ஜனாஹ் பர்யுபாஸதே
தேஷாம் நித்யாபி யுக்தானாம்
யோகக்ஷேமம் வஹாம்யஹம்" என்ற

கீதையின் பகுதியில் தன்னையே இடையறாது எண்ணிநிற்கும் பக்தனின் நலனைத்தாமே நோக்கி வருவதாகப் பகவான் உறுதிமொழி கூறுகிறார். கருணையே வடிவான சுவாமி சிவானந்தர் தனது வாழ்க்கையில் ஆண்டவனை இடையறாது எண்ணும் சிறந்த வழியை நிலைநிறுத்துவதெப்படி என்றும் இங்ஙனம் கடவுளிடம் நிலைத்து நிற்பதனால் கவலையினின்று விடுதலைபெற்று விளங்குவது எப்படி என்றும் நடத்திக் காட்டியிருக்கிறார். அழகிய சிவானந்த நகரை உற்று நோக்குகின்றவர்களும், அதிலே வாசம் செய்யும் அநேகம் பக்தர்களும், அதிலுள்ள வசதிகளைப் பெறும் ஆயிரக் கணக்கான அன்பர்களும் நினைவிலிருத்த வேண்டிய விஷயம் ஒன்றுண்டு. சிவானந்த நகரிலுள்ள எண்ணற்ற கட்டிடங் களின் ஒவ்வொரு செங்கல்லும், அங்கு நடைபெறும் ஒவ்வொரு நிகழ்ச்சியும், நிலைபெற்றுநிற்பதற்கு சிவானந்தரே காரணம் என்பதனால் அவருக்கு அவை நன்றி தெரிவித்து நிற்கின்றன! இந்த உண்மையை நீங்கள் மறந்துவிடக்கூடாது. கடவுளிடமுள்ள பக்தியை வெளிப்படுத்துவதற்காகச் சுவாமிகள் உடுத்த உடையுடன், கையிலே காசின்றிக் கரதல பிச்சையிலேயே பலநாட்கள், ஏன் பல வருடங்கள் வாழ்ந்து கடவுளைப் பலவழிகளிலும் வழிபட்டு வந்தார்! அத்தகைய பல நிழிகள் தான் அவரைச் சுற்றியுள்ளதும் அகில உலகத்தின் கவர்ச்சியைப் பெற்றதும் ஆச்சரியப்படக்கூடிய அளவில் அமைந்துள்ளதுமாகிய பல ஸ்தாபனங்களாக வளர்ந்து காட்சியளிக்கின்றன!

"தெய்வீக அருளும் சக்தியும் சிவானந்தருக்கு உதவியாக நிற்கின்றன; இல்லையெனில் இவ்வளவு குறுகிய காலத்தில் எந்த ஒரு தனி மனிதனும் இத்தகைய அரும் பெரும் வேலைகளைச் செய்ய இயலாது", என்று கல்கத்தா சம்ஸ்கிருதக் கல்லூரி முன்னாள் தலைமைப் பேராசிரியர் மகா மகோபாத்தியாய பண்டிட் சின்னசுவாமி சாஸ்திரிகள் கூறுகிறார்.

"ஈசுவர சக்தி சிவானந்தருக்கு உதவியாக இருக்கிறது. தெய்வீக வழிபாட்டை அவர் மிகுதியாகச் செய்திருக்கிறார். ஆதலால் இத்தகைய மாபெரும் ஆத்மீகசாதனையை அவரால் செய்ய முடிந்தது. எந்த மனித முயற்சியும் இத்தகைய பெரும் பணியைச் செய்துவிட முடியாது", என்று தஞ்சை வாழ் மகாகவி சுந்தரேச சர்மா அவர்கள் தெரிவிக்கிறார்கள்.

"இந்த இடமெல்லாம் (ரிஷீகேசத்தில்) சில வருடங்கள் முன் காடாகவே இருந்தது. இங்கே புலிகள் சஞ்சரித்துக் கொண்டிருந்தன. இத்தகைய பெரும் காட்டைச் சிவானந்தர் சுவர்க்க லோகமாக மாற்றி அமைத்துவிட்டார்! அவரது பெரும் ஆத்மீகப் பணியனைத்தும் ஈசுவர ஆராதனையின் விளைவே", என்று சிவானந்தரின் சன்யாச தீட்சையின் போது ஆச்சாரியராக விளங்கிய கைலாச ஆச்சிரமவாசி மஹாமண்டலேசுவயர் ஸ்ரீ சுவாமி விசுத்தானந்த மஹராஜ் தெரிவித்திருக்கிறார்.



# அத்தியாயம் 4

## ராஜ யோகம்

1. "மற்றவர்கட்குத் தீங்கு செய்யாதே — எல்லோரிடமும் இரக்கம் காட்டு", என்று கூறும் சிவானந்தர் தனது போதனைகளில் பதிந்து நிற்கிறார்.

2. சுவாமிகளின் அருட் கருணை உலகிலுள்ள சகல ஜீவர்களிடமும நிலவி நிற்கிறது.

3. சாதாரண தவத்தின் பல அம்சங்களைமட்டும் அப்யசிப்பதோடு நின்றுவிடாது, இடைவிடாத அந்தரங்கத் தவத்திலும் சுவாமிகள் ஈடுபட்டு நிற்கிறார்கள்.

   "உற்ற நோய் நோன்றல்" என்பதே சுவாமிகள் பழகும் தவம்.

4. பல்வகைச் செயல்களின் நடுவிலும் மனதைப் புறம்செல்லவொட்டாது தடுத்து நிறுத்தும் பிரத்யாகாரப் போராட்டத்தில் சிவானந்தர் சிறந்து விளங்குகிறார்.

5. தியானத்தில் அதிகமான கருத்துக் கொண்டவர் சுவாமிகள்.

6. தம்மிடம் தாமாகவே ஒட்டிக்கொள்ளும் பல சித்திகளையும் வெறுக்கக் கூடியவர் சுவாமிகள்.

7. சுவாமிகள் செய்துள்ள தெய்வச் செயல்களனைத்தும் இந்த ராஜயோகப் பயிற்சியின் விளைவே.



# அஹிம்சை

அஷ்டாங்க யோகத்தின் முதலிரண்டு அங்கங்களை அலங்கரிக்கும் தெய்வீகக் குணங்கள் சிவானந்தருடனேயே தோன்றியுள்ளன. ஒவ்வொரு குணத்தையும் பெறச் சாதகன் பல ஜன்மங்கள் எடுக்கவேண்டும். ஆனால் குணங்களெல்லாம் சிவானந்தருடன் இயற்கையாகவே தோன்றியுள்ளன. ஆதலால் யம நியமங்களில் சாத்தியமான தூய்மையை அவரது செயல்கள் வெளிப்படுத்துகின்றன.

அஹிம்சை சிவானந்தருக்கு மிகவும் தேவைப்படக் கூடிய குணமாகும். எவருடைய எண்ணத்தையும் புண்படுத்த அவரால் இயலாது. ஒருவனுக்கெதிராக ஒரு கடுஞ் சொல்லையோ, பகைமை எண்ணத்தையோ, தீயசிந்தனையையோ தன் மனதில் வரவிடமாட்டார்! இந்த உலகில் நல்ல முறையே சொல்லப்பட்ட ஒரு சொல்லைச் சீடன் தவருகப் புரிந்து கொள்வதனுல் அவன் மனதிற்குச்சங்கடம் ஏற்பட்டிருக்கலாம் என்ற எண்ணத்தாலல்லது மற்ருென்ருலும் சுவாமிகளைக் கவலையுறச் செய்ய முடியாது! இந்த மாதிரி நிலைமை, நான் சுவாமிகளுடன் வாழ்ந்துவரும் பத்து வருடங்களில், ஒரே ஒரு தடவை ஏற்பட்டது. அப்பொழுது சுவாமிகளின் உயரியதோர் உபதேசம் குற்றமுள்ள நெஞ்சைக் கிறுகிறுவென ஆட்டியது! இது தெரிந்ததும் அந்தச் சீடனிடம் தனக்கு அபாரப் பிரியம் உண்டு என்பதையும் அத்தகைய சீடனுக்குச் சேவை செய்யும் பொருட்டே தாம் வாழ்ந்து வருவதையும் அவன் மனதில் பதிய வைக்கச் சுவாமிகள் முயற்சி செய்தார்!

குற்றம் நிறைந்த ஒரு சாதகனை நல்வழிப் படுத்தக் குருதேவர் கையாளும் முறைகள் அதிசயிக்கத் தகுந்ததாக உள்ளன. முதலாவதாக அந்தச் சீடன் விஷயத்தில் அதிகக் கவனம் செலுத்தித் தமது அன்பை அவன் உணரும்படிச் செய்வார். இந்தச் சீரிய செயல் அந்தச் சீடனை வெட்கமுறச் செய்யும். மேலும் சுவாமிகளிடம் தான் கொண்டுள்ள நம்பிக்கைக்கு ஏற்ற முறையில் தன்னைத் திருத்திக்கொள்ளவும் சீடன் முயற்சிசெய்வான். இரண்டாவதாகச் சுவாமிகள் சீடனதுதிறமையை வெகுவாகப் பாராட்டி அவனை ஒரு சில நன்மைதரும் பணிகளில் சிறந்து விளங்க ஊக்குவார். முதலில் கூறிய முறை போதாதென்றால் இரண்டாவது வழி கட்டாயம் பலனைத் தரவல்லது. அது தீமையைக் கொள்ளுவதிலிருந்து சீடனை விலக்கி நிறுத்துகிறது. மூன்றாவது வழிதான் பிரார்த்தனை. தீய நடத்தையுள்ள சீடன் திருந்தி நல்லறிவுபெறச் சிவானந்தர் ஆண்டவனிடம் பிரார்த்தனை செய்வது வழக்கம். தனது ஆத்மீக சக்தியாகிய அம்பைச் சாதகனின் உள்ளத்திலுள்ள தீமைகளின் பால் எய்து அவைகளைத் தொலைத்துக்கட்டி விடுவார்!!

இத்தனையும் பயன்படவில்லை என்றால் சாதகனிடம் அன்புடன் பேசுவதற்கான நேரிடையான வழியைச் சுவாமிகள் கையாள முற்படுவார். அத்தகைய அன்பு பொதிந்த உபதேசத்தினால் நல்லமுறையில் சீடனைப்பலநாள் தீமையிலிருந்து காப்பாற்றி வருவார். இந்த விசேஷ சிகிச்சையால் குருநாதர் சீடனின் மனதை அப்படியே கவர்ந்து விடுவார். இந்த அன்புச் சிகிச்சை சீடனின் மனதிலுள்ள மாசை அறவே அகற்றவிடினும், சுவாமிகள்

விருப்பம்போல் உருவாக்குமளவில் அவனை உருக்கிவிடும்! உபதேசம் கொடுக்கக்கூடிய அரியசந்தர்ப்பம் வரும்பொழுது சிவானந்தர் சீடனின் நற்குணங்களைப் பலர் அறியப் புகழ்வார். இந்தப் புகழுரைக்கு நடுவே, "நீங்கள் தள்ளிவிட வேண்டிய இந்த ஒரு தீயகுணம் உங்களிடம் இருக்கிறது. அதைக் களைந்த பிறகு நீங்கள் நவீன சங்கராச்சாரியராக விளங்குவீர்கள் என்பது திண்ணம்," என்ற சில சொற்கள் வரும். இந்தச் சொற்கள் அவன் தலையில் அறையப்பட்ட ஆணிகள் போல் இருக்கும்; ஆனால் புண்ணை உண்டு பண்ணாது! இரவு வெகு நேரத்திற்குப் பின், சுவாமிகள் அன்று காலை கூறிய தன் கருத்தைச் சாதகன் நினைத்துணரும் பொழுது, குருநாதர் கூறிய உண்மையை வெகுவாகப் போற்றுவதோடு அவர் எதிர்பார்க்கும் அளவுக்குச் சிறந்து விளங்கவும் உறுதிகொண்டு விடுவான். பாலும் தேனும் கலந்தோடும் அன்புஆறு திரும்பவும் சுவாமிகளிடமிருந்து சீடனிடம் ஓடத் தொடங்கும். எதற்காக? சீடனின் உள்ளத்தில் மறுமுறையும் புண்கள் தோன்றாதிருக்கவே சீடன் சில காலம் அதில் நீந்தித் தீமை என்ற கரையிலிருந்து வெகு தொலைவில் சென்றுவிடுவான்!

சுவாமிகளின் எழுத்துக்களில் வைராக்கியத்தையும் துறவு மனப்பான்மையையும் வற்புறுத்தும் சொற்கள் செறிந்து விளங்குகின்றன என்பது உண்மையே. சுவாமிகளின் சொற்பொழிவுகளும் அங்ஙனமே அமைந்துள்ளன. ஆனால் பேச்சு வார்த்தைகளில் அவர் எப்பொழுதும் அன்பே உருவாக அனைவரையும் ஊக்கிப் பாராட்டிப் புகழ்ந்து வருகிறார். ஒரு சீடனைத் திருத்த வேண்டிச் சுவாமிகள் தன் எழுத்தியலை அடிக்கடி

உபயோகித்து வருவார். உதாரணமாக, சாதகன் ஒருவன் சினம் கொண்டு நிற்பானேல், 'சினத்தை வெல்லும் வழி'யைப் பற்றி ஒரு கட்டுரை வரைந்து அதை அவனைக்கொண்டு படிக்கச் சொல்லித் திரும்பத் திரும்பப் பல தடவை எழுதச் சொல்வார். சில சமயம் சாதகனையே அத்தகைய கட்டுரையை வரையச் சொல்வார்! இப்படிச் சாதகனே கட்டுரை எழுதுவதால் எதிர்பார்த்த பலன் எளிதிலே கிட்டும். ஏன்? சினத்தை வெல்ல அவன் மற்றவர்களுக்குப் புகட்டும் போதனை அவனுக்கும் பொருந்தக்கூடியதல்லவா? சிவானந்தர் தாமே அந்தக் கட்டுரையைப் படித்த பின் சாதகனைப் புகழ்ந்து பேசுவார். "பிறருக்கு உபதேசம் செய்வது எளிது; ஆனால் அவ்வுபதேசத்தைத் தான் கடைப் பிடித்து நிற்பது கஷ்டம்", என்று பிறருடன் பேசும்போது இடித்துரைப்பார்! நோக்கம் நிறைவேறுவதற்கான அந்நேர் முறையே கடைசி வழியாகும்.

"ஒரு பொழுதும் மற்றவரின் எண்ணத்தைப் புண்படுத்தாதீர் — எல்லோரிடத்திலும் அன்புடன் இருங்கள்" —இதுவே சிவானந்தரின் தலையாய போதனை. இந்தக் கோட்பாட்டைப் பழகுவதில் அவரைவிடச் சிறந்தவர் யாருமே கிடையாது. நடைமுறையில் நல்லதை ஆக்கும் கோபத்தையும் சுவாமிகள் ஒப்புக்கொள்வதில்லை. ஏனைய ஆசான்மார் தடியின் உதவியைக்கொள்ளும் சூழ்நிலைகளி லெல்லாம் சிவானந்தர் நம் முன் வைத்துள்ள அவரது கொள்கைகளான சேவை, அன்பு, தியானம் என்ற மூன்று உபாயங்களையே உபயோகித்து வெற்றியடைகிறார். 'எவரையெல்லாம் திருத்தி ஆக்க முயல்கிறீர்களோ அவர் கட்குத் தொண்டு செய்யுங்கள்; அவர்களிடம் அன்பு

கொள்ளுங்கள்; அவர்களுக்காகத் தியானம் செய்து வழிபடுங்கள்", என்பதே அஹிம்சா வழி.

சிவானந்தருக்கு அஹிம்சையானது பேரன்பின் ஆக்கும் தன்மையே. மனசா—வாசா—கர்மணு அன்பு; ஒவ்வொரு மூச்சுடனும் அன்பு; ஒவ்வொரு நிமிடமும் அன்பு பூண்டு நிற்பதையே சுவாமிகள் விரும்புகிறார். அன்புடையவன் ஒருவன் மற்றவரின் துன்பத்தை ஒரு கணம் கூடப் பொறுக்கமாட்டான்; வெளி வேஷத்துக்காக ஓடிச்சென்று உதவுவதுபோல் பாசாங்கு செய்யமாட்டான்! சுவாமிகள் கங்கையில் நீராடும் நேரம் ஏதாவது பூச்சி நீரிலே உயிருக்கு மன்றாடி மிதந்து வருமேயானால், உடனேயே அதைத் தன் கையிலேந்திக் கரையில் கொண்டு சேர்த்து வருவார்! "ஏதாவது ஜந்து மலத்தில் கிடந்து உயிருக்கு மன்றாடினாலும் அதையும் எடுத்து வெளியே விடுத்து அதன் உயிரையும் காப்பாற்ற முயற்சிப்பேன்", என்று எத்தகைய வெறுப்புமின்றிச் சுவாமிகள் எங்களிடம் தெரிவித்தார்!

உலகிலுள்ள மிகவும் கீழ்த்தரமான உயிரையும் யாரும் துன்புறுத்துவதைச் சுவாமிகள் அனுமதிக்கமாட்டார். இந்த உண்மையைப் பலதடவை நான் பார்த்திருக்கிறேன். சுவாமிகளின் கட்டிலில் மூட்டைகள் மலிந்திருப்பதை ஒரு ஆச்சிரம வாசி கண்டுகொண்டான். அவன் உள்ளத்தில் 'குரு பக்தி' உதயமாகியது. குருதேவரின் உறக்கத்திற்கு இடையூறாக இருக்கும் குட்டிப் பிசாசுகளான மூட்டைகளை அப்புறப்படுத்த எண்ணினான். ஒரு பெரிய துடைதுணியை மண்ணெண்ணெயில் தோய்த்து மூட்டையிருக்கும் இடுக்குகளில் தேய்க்க முனைந்தான். மூட்டைகள் அதிருஷ்டசாலிகள்! ஏன் என்பீர்களோ? அவைகள் சுவாமிகளுடன்

எல்லா இரவுகளிலும் சத்சங்கத்தில் ஈடுபட்டிருந்தன அல்லவா? சிவானந்தர் அந்த இடத்தில் அகஸ்மாத்தாகத் தோன்றினர்! அவரது முகத்தில் தோன்றிய அதிகமான சங்கடம் சிடனின் மூட்டைக் கொலைத் தொழிலை நிறுத்தி விட்டது!! "இந்த வேலையைச் செய்யாதீர்கள்", என்றார் சுவாமிகள். "ஆனால் சுவாமிஜி, இந்தக் கட்டிலில் மூட்டைகள் மலிந்திருப்பதால் தான் தாங்கள் உறங்க முடிவதில்லை", என்றான் சிடன். "பரவாயில்லை! கட்டிலை எடுத்துக் காட்டிலே சிலநாள் போட்டுவிடுங்கள். அது இல்லாத நிலையில் மற்றொரு கட்டிலை எனக்குத் தயார் செய்து கொடுங்கள்!", என்று சுவாமிகள் விடை கூறினர்.

இத்தகைய பாதுகாப்பை, சுவாமிகளின் அறையி லிருந்த எலிகளும் பெற்று வந்தன. சில எலிகள் குடீரிலிருந்த காகிதங்களையும், படுக்கைகளையும், மற்று முள்ள துணிமணிகளையும் தின்னத் தொடங்கின. குடீரில் தொண்டாற்றும் தொண்டர்கள் அவ்வெலிகளைப் பிடித்து விட்டனர். உடனே அவ்வெலிகளை ஒரு கோணிப்பையில் போட்டு வெகு தொலைவில் கொண்டுவிட்டு வந்தனர். ஆச்சரியம் ஒன்று நிகழ்ந்தது! அந்த எலிகள் அன்று மாலையில் திரும்பவும் குடீருக்குள் வந்துவிட்டன!! அத்துடன் நில்லாது இரவில் சிவானந்தரின் நகத்தைக் கரவி அவர் கருணையை வேண்டி வழிபட்டன!! நீரிழிவு வியாதி யுடைய ஒருவருககு இது மிகவும் அபாயகரமாகும். ஒரு தடவை எலியைக் கொல்வதில் வல்லுநர் ஒருவர் ஆச்சிரமத் திற்கு வந்தார். எலித் தொல்லையை நீக்க அவர் ஒரு சிறந்த வழியைத் தெரிவித்தார். அவர் கூறிய வழி எலிகளை விஷம் வைத்துக் கொல்லவேண்டும் என்பதே. எல்லாவற்றையும்

ஆர்வத்தோடு உற்றுக் கேட்கும் சுவாமிகள் முதல் தடவையாக இவருடைய பேச்சைக்கேட்க மறுத்துவிட்டார். "உம்.........ம்! எலிகளைக் கொல்லவா சொல்லுகிறீர்கள்? அது கூடவே கூடாது. மாறாக எலிகள் கெடுத்துவிடக் கூடிய பொருள்களை நாம் ஜாக்கிரதையாகப் பெட்டிக்குள் பூட்டி வைக்கவேண்டும். கையெழுத்துப் பிரதிகளை எல்லாம் டிரங்கினுள் வைப்பதோடு, புத்தகங்களை இரும்பு அலமாரிக்குள் வைக்கவும் வேண்டும். படுக்கையையும் உடைகளையும் இதுபோலவே காப்பாற்ற வேண்டும். எலிகளைக் கொல்வது முறையற்ற செயல்!", என்றார் சுவாமிகள்.

இன்னும் சற்று அதிகமாக அந்த வல்லுநர் பேசியிருந்தால் எலிகளுக்கு வேண்டிய அன்றாட உணவுக்கான வசதியையும் சுவாமிகள் செய்து கொடுத்திருப்பார்கள். இதே போல் ஆச்சிரமத்திற்கு அருகிலுள்ள குரங்குகளை விரட்டியடிக்க வேண்டும் என்று ஒரு சிலர் கூறியபோதும் நிகழ்ந்தது. அப்பொழுது சுவாமிகள் அக்குரங்குகளின் அன்றாட ஆகாரத்துக்காக நவதானியங்களைக் கொடுத்துதவ முன் வந்தார்!!

சாந்தியும் அன்பும் ஒருங்கே உருவாக அமையும் தூதுவரான சிவானந்தர் உலகிலுள்ள எல்லா ஜீவராசிகளிடத்தும் அன்பைப் பரப்பவேண்டி அதிசயமான முறையைக் கையாண்டிருக்கிறார். தனது தூய்மையான வாழ்க்கையை, மற்றவர்களும் கடைப்பிடித்து முன்னேறுவதற்காக, அவர்கள் முன் உதாரணமாக வைப்பதே அவ்வதிசய முறை. சுவாமிகளின் சீரிய சேவை மேடைப் பிரசங்கத்துடனும் புத்தக வெளியீடுகளுடனும் நின்றுவிடக்

கூடியதல்ல. தன்னிடம் வந்து சேரும் சாதகர்களையும், தம்முடைய நல்லுரைகள் சென்று சேரும் அன்பர்களையும் எல்லா உயிர்களிடத்தும் அன்பு பூண்டு சேவை செய்வதென்ற உயரிய கொள்கையை நடைமுறையில் செய்வதற்கு வற்புறுத்துவதே அச்சேவை. அவரது ஆத்மீகக் குறிப்புத் தாள் வாழ்க்கையையே மாற்றிஅமைக்கும் தன்மையுடையது. அது சாதகனை ஒவ்வொரு நாளும் அவன் செய்யும் பொது நலப் பணியின் கால அளவையைக் குறிக்கச் சொல்கிறது. முதற் கூற்றினால் பேரன்பும், பின்னால் கூறியவற்றால் தீய எண்ணமும் தொலைந்து நல்லெண்ணமும் வளர வகைசெய்கிறது. அத்துடன் சாதகன் வளர்க்கப் பாடுபடும் நற்குணங்கட்காகவும், தள்ளமுற்படும் துர்க்குணங் கட்காகவும் கோடிடைவெளிகள் ஒதுக்கப்பட்டுள்ளன. சிவானந்தரின் சீடன் தான் வளர்க்க வேண்டிய குணமாக அன்பையும் அதற்கெதிரானதை அகற்ற வேண்டிய துர்குணமாகவும் கொள்வான்!

சந்தர்ப்பம் ஏற்படும்பொழுதெல்லாம், மேடைகளில் சொற்பொழிவாற்றும் நேரம், உயரிய வேதாந்தக் கொள்கைகளைப்பற்றிப் பேசாது, எல்லா ஜீவர்களிடையேயும் நிலவி நிற்கும் தன்னலமற்ற சேவை, பேரன்பு என்ற ஒரே பொது அனுபவத்தின் ஞானத்தை நடைமுறையில் கொண்டு வருவதெப்படி என்பதைக் குறித்தே சுவாமிகள் பேசிவருவார்.

• கடவுளின் இவ் அவதாரம், பகைமை, சமாதானமின்மை, தீய எண்ணம் முதலியவற்றால் ஏற்படும் சங்கடத்தை அன்பின் கதிர்கள் இல்லாதாக்கும் என்பதற்காக, அஹிம்சையைப் பரப்பலானார்.

அஹிம்சையை மிகத் தூய முறையில் வளர்த்தவன் தானாகவே சகல நற்குணங்களின் இருப்பிடமாக ஆகிவிடுகிறான் என்ற கருத்தைச் சிவானந்தரே எடுத்துரைத்துள்ளார். இந்த உண்மைக்கு அவர்களே ஓர் எடுத்துக் காட்டாகும்.

மனம், வாக்கு, செயல் மூன்றிலும் சத்தியமே அவரது சுவாசம். அவரே உயரிய உண்மையின் ஒளி. சிவானந்தர் வாழ்வதும், சஞ்சரிப்பதும்,இருப்பதுமெல்லாம் பிரம்மத்தில் என்பதால் அவர் உயரிய தன்மை பொருந்திய பிரம்ம சரியத்தை அனுஷ்டிப்பவராவர். அஸ்தேயம் (திருடாமை), அபரிக்ரஹம் (கவராமை)· இவ்விரண்டின் எதிரான தீய குணங்கள் சுவாமிகளின் மனதிலே எழ முடியாது. ஆனால் அவரோ ஒரு பெரும் அதிசயக் களவு செய்திருக்கிறார்! அவர் அங்ஙனம் செய்தது நம் நல்லதிருஷ்டமே தான்! அது என்ன? அவர் நமது உள்ளத்தைத் திருடி, நம்மிடமுள்ள பாபத்தைக் கவர்ந்து கொண்டார் என்பதே அக்களவு!!

## தபஸ்சர்யம் (தவம்)

நியமங்களிலிருந்து மிகவும் கடினமான தவத்தை நமது கவனத்திற்காகப் பிரித்துப் பார்ப்பது அவசியமாகும். அகம்புறத்தூய்மையை (சௌசம்) சிவானந்தர் இடைவிடாது பழகி வருகிறார். மகிழ்ச்சி சிவானந்தரிடம் ஒருங்கே அமைந்து நிற்கிறது. சுவாத்தியாயமோ என்றால், சுவாமிகள் வேத நூல்களைப் படிப்பதோடு நில்லாமல் அத்தகைய நூல்களை ஆக்கவும் செய்து வருகிறார்! ஈசுவரப்பிரணி தானத்தைப் பற்றி இதற்கு முந்தின அதிகாரத்தில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

சிவானந்தரின் தவம், அவரிடம் அமைந்துள்ள ஏனைய வற்றைப் போல், எல்லாம் சேர்ந்ததாக இருக்கிறது.

உலகைத் துறந்து துறவியான போது சுவாமிகள் தாம் உடுத்திருந்த உடைக்குப் புறம்பாக ஒரு சிறிய பையில் ஒரே ஒரு வேட்டியும் ஒரு சட்டையும்தான் எடுத்து வந்தார் என்பதை அறிந்தவர் தெரிவிக்கின்றனர். அவருடைய சொந்தச் சொத்துக்களைச் சுமந்து வந்த வண்டி, மலேயாவி லிருந்து அவர் கொண்டுவந்த செல்வம், அவரது பூர்வீக வீட்டுமுன்பாக நின்று விட்டது. வண்டியிலிருந்த சாமான்களை வீட்டினுள் இறக்கிவைத்துக் கொண்டிருந்த சொந்தக்காரர்களை மேற்பார்வை பார்ப்பது போல் சுவாமிகள் பாசாங்கு செய்தார்! யாரும் கண்டுகொள்ளாத முறையில் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்து அங்கே காத்து நின்ற புகைவண்டியில் ஏறித் தனது பிரயாணத்தில் 'முன்னேறிச்' செல்வதில் முனைந்தார்! காசியை வந்தடைந்ததும் கையிலிருந்த பணத்தையெல்லாம் ஏழை கட்குப் பகிர்ந்து கொடுத்தார்! லட்சியத்தை அடைந்த பின் பணத்திற்கு அவசியம் ஏது? 1950-ல், அகில இந்திய யாத்திரையின் போது, நாங்கள் அனைவரும் காசிக்குச் சென்றோம். தாம் மலேயாவில் வாழ்ந்த அரண்மனைக்குப் பதிலாகக் கடும் பனியில் தங்க நேரிட்ட காசி ரெயில்வே ஸ்டேஷன் பிளாட்பாரத்தைச் சுவாமிகள் எங்களுக்குச் சுட்டிக் காட்டினார்கள்! பனிக்காலம். குளிரின் கடுமை. அதை அவர் எதிர்பார்க்கவேயில்லை. எனினும் அவர் மனம் பூமிக்கப்பால் வெகு தொலைவில் சென்று விட்டதுடன் உடம்பு பனியையும் பசியையும் புறக்கணிக்க உதவியது. சுவாமிகளது தவத்தின் முதல் கட்டம் தொடங்கிவிட்டது.

ஆனால் லட்சியத்தை அடைவதே சுவாமிகளின் பிரதான நோக்கமாக இருந்தது; சரீரத்தைப் பராமரிப்பதல்ல! இந்த அதிசய மகான் பனியில் விறைத்து நிற்பதைப் பொருட்படுத்தாதவராய், யாரிடமாவது ஒரு கம்பளப் போர்வையைப் பெறுவதற்கான மனமும் இல்லாதவராய் நிற்பதைக் கண்ட கருணை வாய்ந்த பிரயாணி ஒருவன் அவருக்கு ஒரு போர்வையைத் தந்து உதவினான்! சிவானந்தர் பெற்றுக் கொண்ட முதல் தானம் அதுதான்!! எல்லோருக்கும் அள்ளி அள்ளிக் கொடுத்த கை முதன் முதலாகப் பிச்சை வாங்கியது. அவருடைய தவத்தின் தரத்தைத் தெரிந்து கொள்ள நாம் இதை நன்கு உணர வேண்டுவது அவசியமாகும்.

பண்டரிபுரம் செல்வதற்காகச் சுவாமிகளுக்கு யாரோ ஒருவர் டிக்கட்டு வாங்கிக் கொடுத்தார். பண்டரிபுரத்தை அடைந்த சுவாமிகள் முன்பின் தெரியாத ஊரில் இது வரையும் பழக்கமில்லாத மக்களிடையே அங்குமிங்கும் சென்று கொண்டிருந்தார். கல்வியறிவும் அழகிய உடலமைப்பும் ஒருங்கே அமைந்த இளைஞர் ஒருவர் அவ்விடத்திய மொழியோ, பாதையோ தெரியாமல் சுற்றி வருவதை அங்குள்ள மக்கள் கண்டு கொண்டனர். மிகுந்த பசி துன்புறுத்தும் நேரத்தில் ஏதாவதொரு வீட்டின் முன் சென்று, "நான் ஒரு மதராஸி அந்தணன். எனக்குப் பசிக்கிறது. தயவு செய்து அன்னம் கொடுங்கள்", என்று கேட்பார். கேள்வியொன்றும் கேட்காமல், முணுமுணுத்த பின் கொடுத்ததை மௌனமாகப் பணிவுடன் வாங்கி உண்டு வந்தார்; அன்னம் கொடுத்தவரை வாழ்த்தியும் செல்வார். இந்தத் தவத்தைத் தெரிந்துகொள்ள ஒரு உயரிய உள்ளத்தினால் தான் முடியும்.

பிச்சை கேட்பது வேதத்துக்குட்பட்டது தான் என்றாலும் சிவானந்தரின் இயற்கைக்கு முற்றிலும் வேறானது. ஆதலால் சிறிது காலத்திற்குப் பின் ஒரு போஸ்ட்மாஸ்டருக்குச் சேவை செய்யும் திருப்பணியில் சுவாமிகள் ஈடுபடலானார். அந்தத் தூய ஆத்மாவுக்காகத் தண்ணீர் இறைப்பதும், விறகு தயார் செய்வதும், இன்னும் இத்தகைய தொண்டுகளையும் சுவாமிகள் புரிந்து வந்தார். இத்தகைய தவத்தைச் செய்ய ஒரு சிறிய உள்ளமன்றோ தேவை!

இந்த வீட்டு வேலைக்காரனின் மகிமையை அந்தப் போஸ்ட் மாஸ்டர் வெகு விரைவிலேயே தெரிந்துகொண்டார் ரகுகண மகாராஜா ஜடபரதருக்கு வணக்கம் செலுத்தி வழிபட்டது போன்று சுவாமிகள் முன் போஸ்ட் மாஸ்டர் பணிந்து நின்று வழிபட்டதோடு நில்லாமல் துறவிகளின் நகரான ரிஷீகேசத்துக்குச் சுவாமிகளை அனுப்பியும் வைத்தார்! ரிஷீகேசம் வந்ததும் சுவாமிகள் தனிமையை மேற்கொண்டார். "இன்று உலகப்புகழ் பெற்ற மகான் அன்று உலகமறியாத நிலையில் இருந்தார்", என்று சொன்னால், யார்தான் நம்புவார்கள்? அதுவே உயரிய தவமாகும்.

அந்தக் காலத்திலேயே சிவானந்தர் சாதாரண முறையிலமையும் தவத்தையெல்லாம் செய்துவிட்டார். கங்கையின் பனி உறைந்த நீரில் நின்று தவம் செய்தார். வெறும் தரையில் படுத்துறங்கினார். நாள்கணக்காகப் பட்டினி கிடந்தார். இன்று சுவாமிகள் இவைகளை மேற்கொள்வதில்லை. இவற்றைவிட மேலான ஆத்மீக

முன்னேற்றத்தையே அவர் மிகவும் விரும்பிப் பாராட்டி வருகிறார்.

பகவத் கீதையில் பகவான் கிருஷ்ணன் தெரிவித்துள்ள மூன்று வகையான தபசின் உயிருள்ள உதாரணமாக சுவாமிகள் விளங்கி வருகின்றார்கள். தேவ—த்விஜ—குரு—பிராஜ்ஞ பூஜானும்—எத்தனையோ நல்ல மனிதர்கள் சுவாமிகள் தங்களைப் பணிந்து வழிபடுவதைக் கண்டு கலங்கி நிற்கின்றனர்! இதுவும் இன்னும் பிறவும் கீதையில் சாரீரிக தபசாக (சௌசம், ஆர்ஜவம், பிரம்மசாரியம், அகிம்சை) கருதப்படுகின்றவைகள் சிவானந்தருடன் இயற்கையாகவே அமைந்துள்ளன. ஆனால் அகிம்சையின் பொருளைச் சுவாமிகள் தீவிரமாக தன்னலமற்ற சேவையில் பரப்பி நிற்கிறார். அவர்கள் அனுஷ்டிக்கும் சாரீரிக தபசானது சுவாமிகளைத் தீவிரத்தன்மை வாய்ந்ததும் சலிப்பின்றியதுமான ஆத்மத்தியாக சேவையில் கொண்டு விட்டிருக்கிறது. இந்தச் சேவையைத் தனது வயது முதிர்ந்த நிலையிலும் சுவாமிகள் செய்து வருகிறார்கள். அனுத்வேககரம் வாக்யம், சத்யம் பிரய ஹிதம்ச யத் — சிவானந்தரைத் தரிசனம் செய்தவர்கள் அவர்களுடைய வார்த்தைகள் அமிருதத்தில் தோய்ந்திருப்பதை உணர்வார்கள். ஒரு கடுஞ்சொல்லோ, இரக்கமற்ற குறிப்பிடுகையோ அவரது உதடுகளில் நிலவாது. ஏன்? சுவாமிகளின் உள்ளத்திலேயே அவை தோன்ற முடியாது! சத்யம், பிரியம், ஹிதம் என்ற மூன்றுவித சோதனைக்கும் உட்படாத ஒரு வார்த்தையை சுவாமிகள் சொல்லவேமாட்டார். உண்மையானதாயிருந்தாலும் நமக்கு அருவருப்பை உண்டு பண்ணும் வார்த்தையை அவர் கூறமாட்டார். மாறாக

அதைக் கடவுளின் இச்சைக்கே விட்டுவிடுவார்! சுவாமிகள் தனது சொல்லின் மீது அதிகமான கட்டுப்பாடுடையவர். இதுவே பேச்சில் தபசு. மனப்பிரசாதம், சௌம்யத்வம், மௌனம், ஆத்மவினிக்கிரகம்,பாவசம்சுத்தி இவையனைத்தும் பரிசுத்த நிலையில் சுவாமிகளிடம் சிறந்து காண்கின்றன. சதா சாந்தியுடனும், தூய்மையுடனும், சந்தோஷத்துடனும் இருந்து வரும் சுவாமிகள் தம்மிடம் வருவோர்க்கு சாந்தியையும் ஆனந்தத்தையும் அள்ளிஅள்ளிக்கொடுக்கிறார். சிவானந்தர் ஒரு வார்த்தையைக்கூட வீணுக்குவதில்லை. அவர் வார்த்தைகளை அளந்தே பேசுவார். அவர் பேசும் வார்த்தைகள் கேட்போரை அறிவாளியாக்கும் வகையி லிருக்கும்; அவர்களது ஆத்ம விகாசத்திற்கும் வகை செய்யும். வெறும் வறட்டு வேதாந்த சர்ச்சையும், உலகியல் விஷயங்களும் அவர்களது மூச்சை வீணுக்குவதில் தலைப் படுவதில்லை. அவரும் தமது அறிவுத் திறமையை விளக்கிக் காட்ட ஆசைகொள்வதில்லை. அதே சமயம் ஆணவம் மிகுந்த பண்டிதர்களைத் தமது மௌனத்தினுல் நாணமுறச் செய்து விடுவார்! ஆத்மவினிக்ரகமும் தன்னடக்கமும் அவருடைய சரீரத்தின்ஒவ்வொருஅங்கத்திலும் செறிந்துவிளங்குகிறது. அவருடைய உடலின் ஒவ்வொரு கண்ணறையும் அவருக்குக் கீழ்படிந்து நடக்கிறது. அங்கே அவருடைய அறிவின்றி நடைபெறும் நிகழ்ச்சிகள் கிடையாது. சுவாமிகளை நோக்கினவர்கள் மணிக்கணக்காக அவரைப் பார்த்தவாறு, அவரது சத்சங்கத்தில் ஈடுபட்டு நிற்பர்! இப்படிச் சுவாமி களின் சத்சங்கத்திலே ஈடுபட்டவர்கள் யாருமே அவர் நீரிழிவு வியாதியாலோ அல்லது இன்னும் வேறு பிணியாலோ பீடிக்கப்பட்டிருக்கிறுர் என்று சொன்னுல் எளிதிலே நம்பிவிடமாட்டார்கள். உறக்கமோ சோர்வோ அவரை ஓய்வெடுக்க வற்புறுத்த முடியாது. ஆச்சிரம சத்

சங்கம் சிலநாட்களில் நடுநிசியையும் தாண்டிவிடும். பாவசம் சுத்தி — சிவானந்தர் இதைத் தவிர மற்றில்லை. "உங்களுடைய எண்ணங்களை ஆராய்ந்து பாருங்கள். அதன் காரணத்தைத் துருவிக் கண்டு பிடியுங்கள்", என்று தமது போதனைகளின் சாராம்சம் என்ற முறையிலே கிராமபோன் ரிக்கார்டில் சுவாமிகள் கர்ஜிக்கிறார்கள்.

"பழியையும் துன்பத்தையும் ஏற்றுக்கொள்" என்ற சாதனைதான் சுவாமிகள் தம்போன்ற துறவிகளிடையே பழகிவரும் மிகச்சிறந்த தவம். இதைவிட உயரிய தவமே கிடையாது! இத் தவத்தைப் பழகத் தொடங்கினால் இதுவே உயரிய தவமென்று நீங்கள் புரிந்து கொள்வீர்கள். இத் தவத்தினால் 'உள்ளே' பயங்கரமான எரிச்சல் இருக்கும். உள்ளேயே அது இறந்துவிடும்படி விடப்பட்டால், வெளியே புகைதலின்றி, அது நமது பாபத்தை இல்லாதாக்கி, சம்ஸ்காரத்தைக் கொன்றொடுக்கி, படாடோபத்தைப் பூண்டோடு தொலைத்து, ஆணவத்தை ஆழப்புதைத்துவிடும் என்பது உறுதி. அவருடைய செருப்பைத் துடைக்கும் பணியைக்கூடச் செய்ய லாயக்கற்ற சாதகர்கள் தன்னை அவமதித்துத் தன் எண்ணங்களைப் புண்படுத்தும்போது சுவாமிகள் சிரித்த முகத்துடன் அவர்கட்கு நல்லாசி கூறுவதை என் சொந்தக் கண்களாலேயே கண்டுள்ளேன். அந்த எண்ணமே என்னை நடுக்கமுறச் செய்கிறது.

## பிரத்யாஹாரம்

ஆசனங்களிலும் பிராணயாமத்திலும் சிவானந்தர் மிகுந்த சிரத்தையுடையவர் என்பதை நீங்கள் ஏற்கெனவே தெரிந்துகொண்டீர்கள்.

பிரத்யாஹாரத்தைப் பொறுத்தவரையில் சுவாமிகள் நமக்குச் சில ருசிகரமான விஷயங்களைப் போதிப்பதோடு நில்லாமல் செய்து காட்டவும் முற்படுகிறார்கள். 'போர்க்களப் பிரத்யாஹாரம்' என்று அதைச் சுவாமிகள் அழைக்கிறார்கள். சந்தடிக்கு நடுவே, ஓசைக்கும் தொந்தரவுக்குமிடையே, மனச்சாந்தியைச் சிதறடிக்கும் உபத்திரவ நிகழ்ச்சிகளுக்கு மத்தியில், ஒரே ஒரு எண்ணத்தின் மீதோ கையில் கொண்ட வேலை மீதோ நமது கருத்தை ஒன்றித்து நிறுத்த நம்மால் இயலவேண்டும். ஒரே விநாடியில், நம் மனதைப் புறப்பொருள்களிலிருந்தும் சப்தத்திலிருந்தும் பின்னிழுத்து அதைஉள்ளேஒன்றுபடச்செய்யநம்மால்முடிய வேண்டும். இதை நாம் செய்யவேண்டுமென்றே சுவாமிகள் விரும்புகிறார்கள். சுவாமிகள் தமது அலுவலகத்தில் அதி முக்யமான வேலைகளை எப்படிச் செய்கிறார்கள் என்பதை ஆச்சிரமத்திற்கு விஜயம்செய்யும் சாதகர்கள் அருகிலிருந்தே ஆச்சரியத்துடன் பார்க்கின்றனர். அரை ஒரு டஜன் டைப் ரைட்டர்கள் ஓசையிட, பல்வேறு இனப் பழக்கவழக்கத்தை கொண்ட மக்கள் சூழ, ஆச்சிரமத்தின் சந்தடிமிகும் இடத்திலே, ஜனங்கள் பலர் வந்தும் போயும் ஓடியும் ஓலமிட்டும் வருகின்ற அதே இடத்தில், ஒரு குகையில் தனித்திருக்கும் போதுள்ள சாந்தியுடன் தன்னுடைய வேலைகளில் தீராதகருத்துக்கொண்டு சுவாமிகள்செயலாற்றி வருகிறார்கள். "அடிக்கடிக் கண்களை மூடி மானசிக ஜபம் செய்து மனதைப் புறப்பொருள்களிலிருந்து அகத்தே இழுக்கக் கற்றுக் கொள்ளுங்கள்", என்ற விஷயத்தைப் பற்றி மற்றோரிடத்தில் ஏற்கெனவே தெரிவிக்கப் பட்டுள்ளது.

# தியானம்

சுவாமி சிவானந்தருக்குத் தியானத்தில் அளவு கடந்த பற்று உண்டு. தன்னலமற்ற தொண்டு செய்வதிலேயே சுவாமிகளின் அன்பு நிலவிவருகிறது என்றாலும், அடிக்கடிக் கங்கைக் கரையிலுள்ள ஏதாவது பாறையின்மீது அமர்ந்து பல மணிநேரம் தியானத்தில் ஈடுபடுவதையும் சுவாமிகள் கைக்கொண்டு வருகிறார்கள். இந்த நிலைமையைத் தனது சுவர்க்காசிரம வாழ்க்கையிலேயே சுவாமிகள் கடைப்பிடித்து வந்தார் என்பதை ஆங்கு வாழ்ந்த சாதுக்கள் தெரிவிக்கின்றனர். சிலசமயம் சுவாமிகள் அருகிலுள்ள காட்டில் சென்று மறைந்தும் விடுவார்களாம்! அங்கேயே நாள் கணக்கில், உலகத்தொடர்பின்றி இருந்து வருவார். திடீரென ஒரு நாள் சுவாமிகள் மக்கள் மத்தியில் நின்று கொண்டிருப்பதையும் காணலாகும். அவருடைய சொந்த நாட்குறிப்பில் ஆங்காங்கு, "நான் இன்னும் அதிக நேரம், பதினாறு மணி நேரம், ஒரேயடியாகப் பதினெட்டு மணி நேரம் தியானத்தில் ஈடுபடவேண்டும்", என்று குறிக்கப் பட்டுள்ளது.

இன்றும் சுவாமிகள் தியானத்தில் இடைவிடாத ஈடுபாடுடையவராக விளங்கி வருகிறார். அதிகாலை பிரம்ம முகூர்த்தத்தில் அவர் தியானம் செய்கிறார். இரவு படுக்கைக்குச் செல்லுமுன் தியானத்தில் ஈடுபடுகிறார். எல்லா சத்சங்கங்களும் சங்கீர்த்தனைகளும் இரண்டு நிமிட மௌனத்தியானத்திலேயே முடிவடையும். இதற்கும் மேலாக, சுவாமிகள் அடிக்கடிப் புலன்களை அடக்கித் தியானத்தில் ஆழ்ந்து விளங்குவதும் உண்டு.

தியானத்தின் பொருளையறிய சுவாமிகளிடம் மன்றாடி வேண்டினோம். "உள்ளத்தினுள் கடவுளுணர்ச்சியின் இடைவிடாத பிரவாகமே தியானம்", என்று அவர் பதிலளித்தார். கண்ணை மூடி உட்கார்ந்திருக்கின்றவனுடைய உள்ளத்தில் என்ன நடக்கிறதென்று யாருக்குத் தெரியும்? அநேகமாக, அப்படிச் செய்கிறவனுக்கே அவன் உறங்குகிறானு, மனக் கோட்டை கட்டுகிறானு, அல்லது உண்மையாகவே தியானத்தில் ஈடுபடுகிறானு என்பது நிச்சயமாகத்தெரியாது! ஆச்சிரமத்தில் தீவிர சாதகன் ஒருவன் இருந்தான். அவனுக்குத் தியானத்தில் அதிகப் பிரியம். கங்கைக் கரையிலுள்ள ஒரு பாறையின் மீது பிரதி தினமும் இரண்டு மூன்று மணி நேரத்திற்குக் குறையாமல் சரீரத்தைச் சற்றேனும் ஆட்டாமல் அப்படியே இருந்து வருவான். எல்லோரும் அவன் தியான நிலையையும் தாண்டிச் சமாதி நிலையை அடைந்து விட்டதாக எண்ணினர். ஒரு நாள் காலை அவன் வகுப்பிற்குச் செல்லாததைக் கண்ட குருநாதர் ஏன் வரவில்லை என்று அவனிடம் வினவினர். "சுவாமிஜி! நான் தியானத்தையே அதிகமாக நேசிக்கிறேன். மேலும், காலை வேளையில் மூன்று மணி நேரத்துக்குக் குறையாமல் தியானத்தில் ஈடுபடுகிறேன்", என்றான்அவன் "ஜாக்கிரதையுடன் இருங்கள்! அல்லது கங்கையில் விழுந்து விடுவீர்கள். எந்த நிமிடத்திலும் சமாதிநிலை வந்தெய்தும். அப்பொழுது கங்கை நீர் உங்களை அடித்துச் சென்றுவிடும்", என்று கூறினர் சுவாமிகள். ஒரு நிமிடம் கழிந்த பின் மேலும் சுவாமிகள் சொன்னர்: "சமாதிக்கான சுருக்கு வழி தெரியுமா? நான் கூறுவதைக் கேளுங்கள்! பழைய சோற்றை எருமைத் தயிருடன் சேர்த்துச் சாப்பிடுங்கள். சிறிது ஓசையுடன் தீர்க்கமாக மூச்சுவிடுங்கள். சற்றே

ஓய்வு பெறுங்கள். உடனேயே சமாதிநிலை ஏற்பட்டுவிடும்!" இந்தச் சமாதி நிலைதான் உறக்கம்! "ஒரு பாறையின் மீது மற்றோர் பாறை மாதிரி உட்காரும் இச்சமாதி அதைவிட விசேஷமானதல்ல!", என்றார் சிவானந்தர். இதைக்கேட்ட சாதகன் கலக்கமுற்று நின்றான். உடனே சுவாமிகள் விவரமாக விஷயத்தை விளக்கிக் கூறலானார்: "எங்கும் பரந்து நிற்கும் கடவுளோடு ஒன்றி விடுவதே தியானம். அம்முறையில் ஐந்து நிமிடமேனும் தியானித்தால் உங்களுடைய உள்ளத்தில் பிரம்மாண்டமான சக்தி உருவாகிறதை அறிந்து கொள்வீர்கள். சில நிமிடங்கள் உண்மையான தியானத்தில் ஈடுபடுவதனால் உலகத்தையே உங்களால் மாற்றி அமைக்க முடியும்; வெறும் வெள்ளைக் காகிதத்தைச் சுருட்டுவதுபோல் சுருட்டிவிட முடியும்!! இப்பொழுது நீங்கள் செய்வதாகச் சொல்லும் மூன்று மணி நேரத் தியானத்தால் தங்களுக்குக் கிட்டியதென்னவோ?! ஒன்றுமேயில்லை!! இதைவிட ஆச்சிரமத்தின் பாகசாலைக்கு வேண்டி கங்கை நீரைக் குடம் குடமாகக் கொண்டுவந்து உதவுதல் நலம். சேவை செய்யுங்கள். அப்பொழுது சத்துவத்தைத் தெரிந்து கொள்வீர்கள். உங்கள் மனம் சத்துவத்தால் நிறைந்திருந்தால் உங்களால் நன்கு தியானம் செய்ய முடியும்".

தனது சுவர்க்காச்சிரம வாழ்க்கையில் சுவாமிகள் தன்னலமற்ற சேவையையும் தனித்த நிலையோடமைந்த தியானத்தையும் ஏன் சேர்த்து வைத்திருந்தார் என்பதை இப்பொழுது நாம் நன்கு தெரிந்துகொள்கிறோம். ஒன்று மற்றொன்றுக்குச் சோதனையாக விளங்குகிறது. சேவையில் தன்னலமின்மையே தியானத்தின் ஆழ்ந்த நிலைக்குக் காரணமாக இருக்கிறது. தியானம் எவ்வளவு எளிதில்லை

அடைய முடிகிறது என்பது சேவை எவ்வளவு செய்திருக்கிறான் என்பதை நிறுத்துப் பார்ப்பதற்கு வகை செய்யும். இதையே சுவாமிகள் நம்மனைவரையும் செய்யச் சொல்கிறார்.

## பிரணவ ஜபம்

"**ஓம்**" என்ற தலைசிறந்த மந்திரமே பெயரின்றிய பரமதத்துவத்தின் பெயர். இதைச் சுவாமி சிவானந்தர் பாரனைத்தும் பரப்பிவருகிறார். அகில இந்திய யாத்திரையின் போது நடைபெற்ற ஒவ்வொரு கூட்டத்திலும் சுவாமிகள் 'ஓம் கீர்த்தனை'யைப் பாடலானார். அவரது ஓம்-ஜபம் ஒலிப்பதிவு செய்யப்பட்டுள்ளது. ஆச்சிரம சத்சங்கத்திலும் அவர் அடிக்கடித் தனது ஓம் - கீர்த்தனையைப் பாடுகிறார்.

கூட்டுமுறைத் தியானம், ஜபம், முதலியன நடைபெறும் பொழுதும், சிவானந்தர் எப்பொழுதும் பக்தர்களிடம் 'ஓம்' என்ற தீர்க்கப் பிரணவத்தை அடங்கின தொனியில் ஆறு அல்லது பன்னிரண்டு தடவை நிகழ்ச்சிக்கு முன்னதாகவே ஜபம் செய்ய வேண்டிக் கொள்வது வழக்கம்.

உலகிலிருந்து தன் மனதை வேறுபடுத்தி நிறுத்த விரும்பும் நேரமெல்லாம் சுவாமிகள் பிரணவத்தை உச்சரித்து வருவார். அகில உலக ஸ்தாபனமாகிய **தெய்வ நெறிக் கழகத்தின்** தனிப்பெரும் தலைவராக விளங்கும் சுவாமி சிவானந்தர் தன்னருகிலுள்ள இருநூறுக்கும் மேற்பட்ட சீடர்கள், இன்னும் உலகிலுள்ள ஆயிரக்கணக்கான சாதகர்கள் ஆகிய இவர்களின் பொருளாதார-ஆத்மிகப் பொறுப்புக்களை எப்படித் தாங்கி வருகிறார்? இந்நிலையிலும் அவர் சாந்தியுடன் எப்படி விளங்குகிறார்? இதன் விடை

பிரணவத்தை உச்சரிப்பதே! அலுவலகத்திலிருந்து திரும்பி ஆச்சிரமத் திண்ணையை அடைந்ததும் சிறிது நேரம் அங்குமிங்கும் உலாவி நிற்பார். அந்நேரத்தில் மெல்லிய குரலில் 'ஓம், ஓம், ஓம்' என்று ஜபித்துக் கொண்டிருப்பார்! சுவாமிகளின் மனதையும் உள்ளத்தையும் இருப்பிடமாக்கி நின்ற எண்ணங்களெல்லாம் அவசர அவசரமாக வெளியே அகன்று செல்வதை அவரது வதனத்தை அவ்வமயம் உற்று நோக்கினால் தெரியவரும். இரண்டே நிமிடங்களுக்குள்ளாக சுவாமிகள் அகத்தே அனுபவிக்கும், எண்ணமற்ற நிலையை அவரது முகத்திலுள்ள சாந்தி வெளிப்படுத்தும்!

## சித்திகள்

சித்திகள் சாதனைக்குப் பெரும் தடைகள் என்பதே சிவானந்தரின் கருத்து. இதுபற்றிச் சாதகர்களிடம் சுவாமிகள் அடிக்கடி எச்சரித்து வருகிறார்கள். தன்னிடம் அரும்பெரும் சித்திகளைக் கொண்டுள்ள சுவாமிகள், மற்றவர் அதை எடுத்துக் காட்டினால் ஒப்புக்கொள்ள மறுத்துவிடுவார்கள். "அதிகமான மக்களிடையே இன்னும் அதிகமான நம்பிக்கையை உண்டுபண்ண வேண்டிக் கடவுள் இத்தகைய அதிசயங்களைச் செய்கிறார்", என்று கூறிச் சென்று விடுவார். இந்தச் சித்திகளை அவர் சற்றேனும் விரும்புவதில்லை. அத்துடன் ஆத்மீகச் சாதகர்களை அவ்வழிச் செல்ல அனுமதிப்பதுமில்லை.

ஸ்ரீமலேயாவில் சுவாமிகள் தங்கியிருந்தபோது அங்கே நடைபெற்ற நிகழ்ச்சியொன்றை இங்கே குறிப்பிடுவது சாலப்பொருந்தும். ஒரு தாந்திரிக யோகி சிவானந்தரை (அன்றைய டாக்டர் குப்புசுவாமியை) அணுகினார்.

ஹனுமாரின் உதவியால் மிக ஆச்சரியமான காரியங்களைச் செய்யும் வகையில் உள்ளதோர் மந்திரத்தை அவருக்குக் கற்றுக் கொடுப்பதாகக் கூறினார். ஒருவகை ஜபத்தைச் சொல்லி, சாயம் பூசின தன் கைக் கட்டைவிரல் நகத்திலே கருத்தூன்றி நிற்கவேண்டும். உடனேயே ஹனுமான் அங்கு தோன்றி இவர் கேட்கும் கேள்விகட்கெல்லாம் விடை பகர்வார்! இதைக் கேட்ட சுவாமிகள் திடுக்கிட்டார்!! ஜபம் செய்யும் கருத்தைச் சுவாமிகள் போற்றினார் என்றாலும் ஹனுமானை அழைத்துக் கேள்விகள் பல அவரிடத்தில் கேட்டு அவரைத் துன்புறுத்துவதை விரும்பவில்லை. "தேவதைகளை நாம் வணங்கவும் பெருமைப்படுத்தவும் வேண்டும். ஆனால் அவர்களை நம்முடைய வேலைக்காரர் ஆக்குவதுதான் கூடாது", என்று கூறிச் சுவாமிகள் அந்த யோகியை ஒரு சிறு தொகையுடன் உடனேயே வழியனுப்பி வைத்தார்!

யோகாப்பியாசம், அதிலும் தியான யோகம், சாதகனுக்கு மிக உயரிய மனோசக்தியை அளிக்கிறது. தூரத்திலுள்ளதைப் பார்க்கும் திறன், மற்றவரின் எண்ணங்களைத் தெரிந்துகொள்ளும் தகுதி, தூரத்திலுள்ளதைக் கேட்கும் சக்தி, முதலியனவெல்லாம் சிவானந்தருக்கு மிகச் சாதாரண விஷயங்களாகிவிட்டன. தாம் ஆச்சரியமான விஷயங்களைச் செய்துவருவதுகூட அவருக்குத் தெரிவதில்லை! உங்களைச் சுவாமிகள் சந்திக்கும்போது உங்களது உள்தோற்றம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அவர் கண்களுக்குப் புலனாகிறது. இதற்கு விசேஷ சக்திகளை அவர் உபயோகிக்க வேண்டியதில்லை. உங்களுடைய உள்ளமும் மனமும் அவருக்குத் திறந்த புஸ்தகமாக விளங்குகிறது. நீங்கள் எண்ணும் எண்ணமும்

சுவாமிகளிடம் சற்றே தோன்றுகிறது. அதேபோல் உங்கள் உள்ளத்தில் உருவாகும் விருப்பங்களையும் அவர் தெரிந்து கொள்கிறார். அவருக்கு அவ்விருப்பங்கள் பிரத்யக்ஷமாகத் தோன்றுகின்றன. அவையனைத்தும் யாதிருச்சிகச் சேர்க்கையாக இருக்கலாம். "நானும் அப்படியே நினைத்தேன்!", என்று சுவாமிகள் சொல்லலாம். நீங்கள் மனதிலே வேண்டினதைத் தானே செய்தபின், "இதை நீங்கள் விரும்புவீர்கள் என எண்ணினேன்!", என்று கூறிப் புன்முறுவல் பூத்து நிற்பார்! உங்களுக்கு இது வியப்பை உண்டு பண்ணும். அவருக்கு அது இயற்கையே!

சிவானந்தரைக் குறித்து அயல் நாட்டிலுள்ள பக்தர்கள் தெரிவிக்கும் அற்புதங்களும் இப்படியே தான்! அவர்கள் சுவாமிகளை நேரில் கண்டு, அவருடைய உயர் சொற்களைக் கேட்டிருக்கின்றனர். அச்சொற்களெல்லாம் 'உண்மை'யே உள்நாட்டிலும் அயல் நாட்டிலுமுள்ள பக்தர்கள் பலரையும் குறித்துச் சுவாமிகள் சதா எண்ணி வருகிறார். எதற்காக? அவர்களுடைய கடிதங்களுக்குரிய பதில் அனுப்பவும், வேண்டும் நூல்களை அனுப்பிவைக்கவும் சதா அவர்களை எண்ணி நிற்கிறார்! சுவாமிகள் மனம் சக்தி வாய்ந்தது. அம்மனதிற்கு அபார மகிமை பொருந்திய பல சிறப்புக்கள் உள்ளன. ஆதலால் அந்த எண்ணம் குரு சீடர்களிடையே மானசிகத் தொடர்பை ஏற்படுத்துகிறது. அவ்வழியே சிவானந்தரின் வலிமை பொருந்திய அறிவு பாய்ந்து செல்கிறது. சீடனின் தேவைக்குத் தகுந்தாற்போல் அவ்வறிவு உதவுவதோடு அற்புதமான பல தோற்றங்களையும், உபதேசங்களையும் தந்து உதவுகிறது. இந்நிகழ்ச்சியோ தானாகவே நிகழ்கிறது!

# சிவானந்தரின் வலுவுடைய புத்தி

மேற்கூறிய மனோசக்திக்கும் மேலாக, யோகியானவன் மனதிலும் புத்தியிலும் அதிசயிக்கத்தக்க ஒரு சில சக்திகளைப் பெறுகிறான். இந்தச் சிறந்த மனோவலிமையே சிவானந்தரை மிகச்சிறந்த ஆத்மீக நூல்களை நூற்றுக் கணக்கில் ஆக்கி உலகத்துக்கு அளிக்க உதவுகிறது.

இற்றைக்கு இருநூறுக்கும் மேற்பட்ட நூல்களின் ஆசிரியராகச் சிவானந்தர் விளங்கி வருகிறார். ஆனால் அதே சமயம் உலகனைத்தும் பரவி நிற்கும் பன்னூறு கிளைகளைக் கொண்ட சக்தி வாய்ந்ததோர் ஸ்தாபனத்தின் தலைவராக அவர் விளங்குவதை நாம் மறந்துவிடக்கூடாது. அத்துடன் நில்லாது, இருநூறுக்கும் மேலான ஸ்திரவாசிகளைக் கொண்டதும், அதே தொகையுடைய அன்றாடப் பார்வை யாளரைக் கொண்டதுமான ஒரு ஆச்சிரமத்தைச் சுவாமிகள் நடத்தி வருகிறார்கள் என்பதையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும். ஆச்சிரமத்திற்கு வந்து ஒரு வாரம் வாசம் செய்யுங்கள். ஆச்சிரம நிர்வாகத்தில் பல பாடங்களை நீங்கள் தெரிந்து கொள்ளலாம். தனது வாழ்க்கையையே குருநாதருக்கு அர்ப்பணித்துள்ள தனிப்பட்ட ஒவ்வொரு சாதகன் மீதும் சுவாமிகள் கொண்டுள்ள கவனிப்பு, பிணியால் அவதிப்படும் நிலையிலுள்ளவர்களைக் கவனிக்க ஏற்பாடு செய்து அவர்களுக்கு வேண்டிய பால்—பழங்களைத் தவறாது அனுப்பிவைத்தல், நோயுற்றவர்களுக்குச் சரியான வைத்திய வசதிகள் செய்யப்படுகிறதா என்பதை ஆராய்தல், குருநாதரின் பாதகமலமே சரணம் என்று தம்மை அடைக்கலம் புகுந்தவர்களின் தேவைகளை அவ்வப்பொழுது கவனித்தல் முதலியன வியத்தற்குரியன! சுவாமிகட்கு

விருந்தினர் கடவுளுக்குச் சமானம். தங்கள் வீட்டைவிட ஆச்சிரமம் மிகவும் சௌகரியமாக, வசதியுடையதாகத் தோன்றும் வகையில் அவர்கள் சுவாமிகளால் போற்றப் படுகின்றனர்! அடுத்ததாக, வளர்ந்து வரும் ஆச்சிரமத்தின் செலவினங்கள் வருகின்றன. ஆச்சிரம ஊழியர்கள் சுதந்திர ரூபத்தில் தாராளமாகச் செலவு செய்து கடனை ஏற்படுத்து வதற்கும் சுதந்திரமுடையவர்! நிலைமை கட்டுக்கடங்காது செல்லும்போது சுவாமிகளிடமே ஓடிச்சென்று அவரது உதவியை நாடி நிற்பது அவர்கள் வழக்கமாகிவிட்டது. இப்படி மூன்று மாதங்களுக்கு ஒரு முறை ஏற்பட்டு வருகிறது. ஆச்சிரமவாசிகளிடையே ஏற்படும் பிளவுகளைத் தீர்த்துவைக்கச் சிற்சில சமயம் ஒரு மாஜிஸ்டிரேட்டாகவும் சுவாமிகள் நடிக்க வேண்டியதிருக்கும். சட்டப் பேராசிரியர் களும், நியாயாதிகாரிகளும் சிறிது காலத்திற்கு ஆச்சிரமத்தில் பயிற்சி பெற்றால் நலமாக இருக்கும். இரண்டு கட்சிகளையும் சார்ந்து நின்று அவரவருடைய வேண்டுகோளில் அடங்கியுள்ள நல்ல அம்சங்களை விளக்கி, அவைகளைக் கடைசியில் ஒன்றாக்கித் தெரிவிப்பார் சுவாமிகள். சில நிமிடங்களிலேயே நட்பும் அமைதியும் அவ்விரு கட்சிக்காரர்களிடையே நிலவி நிற்கும். இதற் குள்ளாக ஆளுக்கு ஒரு கப் தேயிலையைக் கொடுத்துச் சாப்பிடச் சொல்வதன் மூலமாக அவர்களுக்குள் ஏற்பட்டு வந்தபகைமையையும் சேர்த்து சுவாமிகள் ஜீரணிக்கச்செய்து விடுவார்! அலுவலகத்திலுள்ள விலாசப்பட்டிகையில் பதினாயிரத்திற்கும் மேற்பட்ட அன்பர்களின் சரியான விலாசங்கள் வரையப்பட்டிருக்கின்றன. மிக விரிந்த முறையிலுள்ள கடிதப் போக்குவரத்தைத் தாமே கவனித்து வருவதுடன், மிக முக்கியமான தொண்டாம் இலவசப்

புத்தக விநியோகப் பகுதியையும் சுவாமிகள் தாமே நோக்கி வருகிறார்!

இவையனைத்திற்கும் மேலாக, எண்ணற்ற நூல்களை எழுதும் ஆற்றலையும் சுவாமிகள் பெற்றுப்பிரகாசிக்கிறார்கள். அந்நூல்களனைத்தும் அவரது பேனாவிலிருந்து தாமாகவே தோன்றியுள்ளன! மற்றவரின் தூண்டுதலாலோ அல்லது வேறு முயற்சியாலோ அவைகள் தோன்றவில்லை. நம்மிடம் நிலவுவதுபோல் மனோநிலையை அடிப்படையாகக் கொண்டு எழுதும் வழக்கம் சுவாமிகளிடம் காணமுடியாது. மனோ நிலையை ஆக்கி, அதை அடக்கி வைக்கும் சக்தியை அவர் பெற்றிருக்கிறார். அதிகமான சமய எழுத்தாளரைப்போல் உணர்ச்சிக்காக அவர் காத்து நிற்கவேண்டியதில்லை! சதா தெய்வீக உணர்ச்சி ஊற்றெடுக்கும் மனோநிலையிலேயே அவர் தங்கி வருகிறார். குழாயின் மூடியைச் சற்றே திறந்து விட்டால்போதுமானது. உடனேயே அனுபூதி உலகனைத்தும் பெருக்கெடுத்து ஓடும்!! நாகரிக முறையில் அமையும் படிப்பகம் அவருக்கு அவசியமில்லை. பெட்டிகள், அலமாரிகள் முதலியவற்றால் நிறைந்துள்ள ஆச்சிரமத்தின் ஒரு மூலை அவருக்குப் போதுமானது. ஏன்? வேலையில் ஈடுபட்ட உடனேயே சுற்றுப்புறத்தைத்தான் சுவாமிகள் மறந்து விடுகின்றாரே! மேலும், கருத்துக்களைத் திரட்டி வைத்தபின் ஒரு சுகவாசஸ்தலத்திற்குப் பெரும்பான்மைக் கதாசிரியர்கள் வேலையை முடிக்கச் செல்வதுபோல் சுவாமிகள் செல்வதுமில்லை!

ஒவ்வொரு நாளும் குறித்த நேரத்தில் சுவாமிகள் எழுதி வருகிறார். இப்படியே கடந்த முப்பது வருடங்களாக அவர் செயலாற்றி வருகிறார். மூலையிலுள்ள பல அறை

களையும் எந்த நிமிடத்திலும் செயலில் ஈடுபடுத்தவோ அல்லது செயலற்றதாக்கவோ அவரால் செய்ய முடியும். எழுதும் நேரம் வருமளவில், மூளையின் நிர்வாகத் துறை யறிவுப் பகுதி மூடப்பட்டு எழுத்துத்துறையறிவுப் பகுதி திறக்கப்படுகிறது. வெளிவரக் காத்து நிற்கின்ற தெய்வீக எண்ணங்கள் உடனே வெளிவருகின்றன. எழுதும் நேரம் முடிந்ததும், மற்றுமோர் சேவாவிபாகத்திற்கு மூளை வேலை செய்ய முற்படுகிறது. இப்படிப்பட்ட மாற்றம் சௌகரியமான முறையில் நிகழ்கிறது; தூய்மையாகவும் நடைபெறுகிறது. இந்தச் சீர்மைக்கு மாறாக, நம்மில் பெரும்பான்மையோரிடத்திலும் ஒரு செய்கை முடிந்த பிறகும் அது நம் மனதில் தொடர்ந்து செயல்புரிகிறது மேலும் அதன் நிழல் அடுத்த செய்கை தொடங்கின பின்பும் தொடர்ந்து நிற்பதுதான் ஆச்சரியததிற்குரிய விஷயம்!

சுவாமிகளுடன் நெருங்கிய தொடர்புடைய ஒரு சீடர் அவருடன் உரையாடிக் கொண்டிருந்தார். முடிந்துபோன விஷயத்தைப்பற்றி மீண்டும் பேசிக்கொண்டே இருந்தார். உடனேயே சுவாமிகள், "அது முடிந்துவிட்டது! மனதில் "ராம், ராம்" என்று கூறுங்கள்",என்றார். இதுவே ரகசியம். அந்த விஷயத் தொடர்பை அறுத்தெறியுங்கள். அது மனதிலே நிலவாதிருக்கச் செய்யுங்கள். இந்த விஷயத்தில் சிவானந்தர் தேர்ச்சிபெற்றவர். இந்தத் திறமையை அவர் பல காரியங்கட்கும் பயன்படுத்துகிறார். தொடங்கின ஒரு காரியத்தில் முழுமனதுடன் ஈடுபட்டு முடித்தபின் அடுத்த நிமிடம் அதைப்பற்றிய எல்லாவற்றையுமே மறந்துவிட்டு மற்றொன்றை எண்ணி நிற்பது அவரது இயற்கை. இந்த முறை சிக்கல் நிறைந்த பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு உபயோகப்படுத்தப்படுகிறது. உதாரணமாக, இம்முறை

சண்டையிட்டுநிற்கும் இருசாதகர்களிடையே சமாதானத்தை ஏற்படுத்த வேண்டிக் கையாளப்படுகிறது. வாக்குவாதம் வலுக்கும்பொழுது சிவானந்தர் புதியதோர் விஷயத்தைத் திடீரெனத் தொடங்கிவிடுவார்! அப்படிச் செய்வதன் மூலமாகச் சண்டைக்குக் காரணமான பழைய விஷயத்தை மறக்கச்செய்து விடுவார். சூழ்நிலை சாந்தியுடையதானதும் பழைய விஷயத்தை மறுமுறையும் ஆரம்பித்து முடிவு தெரியும் வரை தொடர்ந்து செல்வார். இந்த முறை சச்சரவுகளை அதிகப்படுத்தாது சுமுகமாகத் தீர்த்து வைப்பதில் சிறந்து விளங்குகிறது.

எளிதிலே ஒரு எண்ணத்தை மனதிலே சிவானந்தரால் எப்படிக் கொண்டுவர முடியுமோ, அதேபோல் மனதை எண்ணமற்றதாக்கவும் அவரால் உடனே செய்ய இயலும். ஒரு விஷயத்தை நினைவூட்டுவதற்கு அதிகம் கஷ்டப்பட வேண்டியதில்லை. உண்மையில், நினைவூட்டுவதற்கு நாம் செய்யும் பெருமுயற்சியால் விஷயம் நினைவுக்கு வருவது இன்னும் கஷ்டமாகி விடுகிறது. ஆனால் மனதைச் சலன மற்றதாக்கி விட்டால் அதிலே முக்குளித்து உங்களுக்கு வேண்டியதை எடுத்துவர எளிதாகும். "உங்களிடம் ஒன்று சொல்ல எண்ணினேன்; ஆனால் தற்பொழுது மறந்து விட்டேன்", என்று கூறாத உலகத்து ஒரு சில மகான்களில் சுவாமிகளும் ஒருவராவர். மக்களுக்கு அவர் தெரிவிக்க வேண்டிய பொருள்களோ அனந்தம். நிர்வாக முறையைப் பற்றி ஆச்சிரம அலுவலர்களுக்கு சுவாமிகள் தெரிவிக்கும் கருத்துக்கள் பலப்பல. அன்பளிப்பாக அன்பர்கள் கொண்டுவரும் பழக்கூடையிலுள்ள பழங்களையெல்லாம் எடுத்தபின் பிரசாதமாக ஒரு சில பழங்களை அந்தக் கூடையில் போட்டு அதைத் திருப்பிக் கொடுத்தார்களா

என்ற சாதாரண விஷயத்தில்கூட சுவாமிகள் அதிகமான கவனம் செலுத்த வேண்டுவார். சுவாமிகள் குடிலை விட்டு வெளியேறும் முன்னதாக இத்தகைய ஒவ்வொரு விஷயமும் அவருடைய மூளையில் பசுமரத்தாணிபோல் பதிந்து விடுகின்றன. மேலும், பலவகையான மக்களை அவர் சந்திக்கும்போதெல்லாம் மூளையின் கண்ணறைகளிலிருந்து அங்கே பதிந்து நிற்கும் எண்ணங்களை அப்படியே புலப்படுத்துவார். உடனே ஒவ்வொருவரும் சுவாமிகளின் நல்லுரைகளைப் பெறுகின்றனர். மனச்சோர்வில்லாத சீரிய தன்மை சிவானந்தரிடம் காணப்படும் ஓர் சிறந்த பண்பாகும்.

தியானம் சுவாமிகளின் முகத்திலே சீரிய ஜோதியை உண்டுபண்ணியுள்ளது; கண்களில் இளமைச் சக்தியைக் கொடுத்துள்ளது; உருவமைப்பிற்கே தடுக்க முடியாத காந்த சக்தியைத் தந்துள்ளது! அவரைச் சுற்றி சாந்தியும் ஆனந்தமும் தோய்ந்த ஜோதி பிரகாசிக்கிறது. இது அவரை அணுகும் அனைவரதுஉள்ளத்திலும் சாந்தியும் சந்தோஷமும் நிலவ வகை செய்கிறது. நூற்றுக்கணக்கான குற்றங் குறைகளோடு சுவாமிகளிடம் செல்கின்றவர்கள் அவை யனைத்தும் தீர்ந்து, பகைமையில்லாதவர்களாய்த் திரும்பி வருகிறார்கள்.

சுவாமிகளிடமுள்ள தெய்வீக ஜோதியைச் சில பக்தர்கள் மெய்யாகவே கண்டு களித்துள்ளனர்! நாகபுரி வாசியான பேராசிரியர் திரு. சபாரத்னம், எம். ஏ., பி. டி.; எல். டி. பி., ஒரு விஜயதசமி தினத்தன்று இரவு சிவானந்தரின் திருமுகம் பௌர்ணமிச் சந்திரனைப்போன்று பிரகாசமாக இருப்பதைக் கண்டார். இதன் காரணம் சிவானந்தரிடம் குடிகொண்டுள்ள தியானத்தின்பெருமையே

என்பதை அவர் உணர்ந்தார். அதிலும் அன்று உலக நாயகியாம் தேவியை விசேஷமாக வழிபடும் நவராத்திரி நன்னாள்! சுவாமிகளின் பிரசார யாத்திரைகளின்போது, மானகிரியிலுள்ள பக்தர்கள், காலேத்தியான வகுப்புக்கு சுவாமிகள் தலைமை வகிக்கும் நேரம் அவர்களுடைய உடலைச் சுற்றி ஓர் ஆச்சரியமான ஜோதியைக் கண்டனர்!!

இது போன்று, சிரிய முறையில் தொடர்ச்சியாகச் செய்யப்படும் தியானப் பழக்கம் சிவானந்தருடைய மனத்தில் சிறந்த பலனை ஏற்படுத்தியுள்ளது. அது எப்பொழுதும் உள்முகமாகவே செல்ல முனைகிறது. ஆனால் மற்றவர்களில் இந்த மனம் வெளிக்கிளம்பவே முயல்கிறது. சிறிது நேரம் உள்ளே திருப்ப முயன்றாலும் முடிவதில்லை! கீர்த்தனை செய்யும் நேரங்களில், இந்த உட்செலுத்தப்பட்ட ஆனந்தப் பார்வையை அவரிடம் எல்லோரும் காணலாம்; மேலும் சிவானந்தரின் பாதி மூடிய இடதுகண் பார்வையின்றி விளங்குவதுடன் மிகுந்த சந்தோஷத்தை வெளிப் படுத்துகிறது.

பைரவர், நரசிம்மர், சூரியன் முதலான பற்பல தேவதைகளின் மீதுள்ள தியானம் சுவாமிகளிடம் பல்வேறு சித்திகளை ஆக்கியுள்ளது. இந்த சித்திகள் தகுந்த சமயத்தில் அழைக்காமலேயே வெளியே தோன்றுகின்றன. உங்களுடன் பேசிக்கொண்டிருக்கும்பொழுது அன்பும் கருணையும் நிறைந்த தாயாகச் சுவாமிகளை நீங்கள் உணருகின்றீர்கள். பொதுக்கூட்டங்களில் சொற்பொழி வாற்றும்போது சுவாமிகள் சிங்கம் போன்று கர்ஜிக்கிறார். அவரது முகத்தில் கம்பீரமான பார்வை நிலவுகிறது. அவரது சுட்டுவிரல் உங்களை நோக்கி உலகைத் துறந்து

சன்னியாசியாவதற்கு ஊக்கி நிற்கும். சன்யாச தீட்சை அளிக்கும்பொழுது சுவாமிகளது சரீரத்திலிருந்து அறிவு ஜோதி பிரகாசிப்பதைக் காணலாம். அத்தகைய ஜோதியே உருவான அவர் உருவத்தை உற்று நோக்கும் சாதகர்கள் நடுக்கமுறுவர். இத்தகைய ஆத்மீகத் தோற்றத்தின் பல்வேறு வகையைக் குறித்து சிவானந்தரே அறியாது நிற்கிறார்!

எல்லாவற்றையும் விட முக்கியமானது சுவாமிகளிடமிருந்து தோன்றும் சாந்தியின் பிரபாவம். கங்கைக் கரையிலுள்ள ஒரு சிறு குடிசையில் உட்கார்ந்துகொண்டே சுவாமிகள் உலகனைத்திற்கும் உயரிய சாந்தியையும் ஆனந்தத்தையும் பரப்பி வருகிறார். உலகெங்கிலுமுள்ள லட்சக் கணக்கான ஜீவாத்மாக்கள் சிவானந்தரிடம் அன்பு பூண்டு, அவரது சக்திவாய்ந்த தெய்வீக எண்ணங்களைப் பெறும் நிலையில் இருப்பது மட்டுமின்றி அவைகளைப் பெற்றுத் தாங்கள் பலனடைவதோடு மற்றவர்களையும் நலம்பெறச் செய்து வருகின்றனர். தூய ஆத்மீக சிகரத்திலுள்ள இத்தகைய மக்களின் மனமாற்றம் சுவாமிகள் மனித சமுதாயத்திற்குச்செய்யும் மாபெரும் தொண்டாகும். இத்தொண்டு சாந்தி, அன்பு, சேவை இம்மூன்றும் ஒருங்கே அமைந்த தெய்வீக வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களைச் சித்தரிக்கும் சுவாமிகளது இருநூறுக்கும் மேலான உயர் நூல்களைப் போன்ற உயர்பரிசாகும்.



# அத்தியாயம் 5

## ஞான யோகம்

1. சிவானந்தர் தமது அன்றாட வாழ்க்கையில் வேதாந்தத்தை அதன் பல்வேறு நிலைகளிலும் கடைப்பிடித்து வருகிறார்.

2. பரா வைராக்கியத்தைப் பழகும் சுவாமிகள் மிகச் சீரிய பற்றற்ற நிலையில் நிலைத்திருக்கிறார். ஆதலால், "நான் திரும்பத் திரும்ப மக்களுக்குத் தொண்டு செய்வதற்காக ஜன்மமெடுக்கக் கடவேன்", என்று சுவாமிகள் கூறுகிறார்.

3. சிவானந்தரின் சகிப்புத்தன்மை சீரிய தன்மையுடையது. அது உறுதியானதும் சக்தியுடையதுமாக இருக்கிறது.

4. எல்லோரையும், எல்லாவற்றையுமே சுவாமிகள் தம் குருவாகக் கருதி வருகிறார்.

5. சிவானந்தர் தம்மை ஒரு நிலையான மாணாக்கராகவே கருதுவதுடன் அறிவைப் பெற்று அதை மற்றவர்களுக்கு பயன்படுத்துவதில் தீராத ஆவலுடையவராகவும் விளங்குகிறார்.

6. சிவானந்தர் எப்பொழுதும் உறுதியுடன் பிரம்மானுபூதியில் செறிந்து விளங்குவதுடன் சகஜசமாதியிலும் இருந்துவருகிறார். ஆதலால் அவரிடம் ஆசையும் தன்னல நோக்கமும் அறவே இருக்கமுடியாது. எனினும் மனித சமுதாய சேவையில் தளராத ஊக்கம் கொண்டவராக சுவாமிகள் விளங்கி வருகிறார்கள். கடவுளுடன் ஒன்றுபட்டு நிற்கும் சுவாமிகளின் தோற்றத்தின் வழியே தெய்வீக இச்சையும் அருளும் பெருக்கெடுத்தோடுகின்றன. இதுவே உயரிய **பிரம்ம கர்ம சமாதி**யாகும் ஆங்கு முனிவர் பிரம்மத்துடன் ஏற்கெனவே ஒன்றாகிவிட்டார். அத்துடன் பிரம்ம கர்மத்தைத் தானும் பகிர்ந்து செயலாற்றி வருகிறார். அகில உலக நன்மைக்காக அவர்கள் வெளியிடும் திட்டங்களின் சிரமமில்லாத தன்மை, அத்திட்டங்களைத் தொடர்ந்து வரும் வெற்றி, இவைகளே அவ்வுண்மையின் உயரிய அத்தாட்சிகள்.



# ஞான யோகம்

சிவானந்தரின் ஞானயோகம் தனிச் சிறப்பு வாய்ந்ததும் அதிசயிக்கக்கூடியதாகவும் அமைந்திருக்கிறது. மாபெரும் ஆச்சாரியர்களைவிட இந்த இடத்தில் சிவானந்தர் மிகச் சிறந்து விளங்குகிறார். சென்ற காலத்திலும் தற்காலத்திலுமுள்ள எந்த ஒரு சன்யாசி, முனிவனையும்விட சுவாமிகள் சிறப்புடையவராகத் திகழ்கிறார்கள். சில கர்மயோகிகள் செய்வதுபோல் அவர் வேதாந்தத்தைப் புறக்கணிக்கவில்லை. அதே போன்று, அத்வைதிகள் எனத தெரிவிப்போர் செய்வதுபோல் கர்ம யோகத்தையும் சுவாமிகள் ஒதுக்கித் தள்ளுவது கிடையாது. கர்மயோகத்தையும் ஞான யோகத்தையும் அவர் ஒன்று சேர்த்து நன்முறையில் வெளியிட்டுள்ளார். உலகத்தையே வெறுத்து ஒதுங்கி ஓர் தனித்த இடத்தில் சென்று இருக்கவேண்டும் என்ற வேதாந்திகள் கருத்தையும் சுவாமிகள் ஒப்புக்கொள்வதில்லை, கர்மயோகத்தையே உயரிய வேதாந்த சாதனையாகவும் பக்தி சாதனையாகவும் சுவாமிகள் கருதி வருகிறார்கள்.

தான் அடைய வேண்டிய லட்சியத்தைச் சமீபிக்கச் செய்து, இங்கு இப்பொழுதே அந்த லட்சியத்தை அடையவும் வேதாந்தம் வழிசெய்கிறது. ஒரே பொது அறிவான அந்தப் பரம்பொருளை அறிந்து போற்றுவதே அந்த இலட்சியம். இத்தகைய இலட்சியத்தை மறக்காமல் இருக்கவும் உள்ளிருக்கும் தகைமையை ஓங்கி நிற்கச் செய்யவும் சாதகனிடம் சுவாமிகள் வேண்டிக்கொள்வது இதுவே. அவர்கள் சத்சங்கத்திலே ஈடுபட்டு, வேதாந்தச் சொற்பொழிவுகளைக் கேட்டு, வேதாந்தத் தேற்றத்தையே

தியானித்து, அத்தோற்றத்தின் உட்பொருளைச் செயலிலும் கொண்டுவரப் பாடுபடவேண்டும். இதையே சுவாமிகள் சாதகனிடம் பன்முறை வற்புறுத்துகிறார். தன்னலப் பற்றில்லாத சேவையும் தெய்வ பக்தியுமே உண்மைச் சாதனையெனச் சுவாமிகள் பல தடவைகளிலும் தெரிவித்திருக்கிறார். வெற்றுரை தொடுக்கும் விபரீதச் செயலை சுவாமிகள் ஆதரிப்பதே கிடையாது. அதேமாதிரி சாரமில்லாத வறட்டு வேதாந்தச் சொற்பொழிவுகளையும் அவர் ஆதரிப்பதில்லை.

"'வேதாந்தம்' நூல்களிலிருந்து பெறக்கூடிய ஒரு பொருளல்ல! வேதாந்த அனுபவமும் ஒருவனிடமிருந்து மற்றொருவனிடம் மாற்றக்கூடியதல்ல. சேவை, தன்னலமற்ற சேவையில், ஆணவத்தின் ஒரு அணுக்கூட அதில் கலக்காமல் ஈடுபடுங்கள். அத்தகைய சேவையைச் செய்வதே சிறப்புடைத்து. கடவுளை வழிபடுங்கள். அவனிடம் சரணாகதி அடையுங்கள். நாளடைவில் நீங்கள் வேதாந்த அனுபவத்தைப் பெறுவது திண்ணம். தன்னலமில்லாத சேவையில் சோர்வின்றிச் செயல் படுவதனால் உள்ளம் தூய்மையாகின்றது. தெய்வ வழிபாட்டினால் உள்ளம் உரம் பெறும் பொழுது ஆத்மீக ஜோதி அந்த உள்ளத்திலிருந்து பிரகாசிக்கத் தொடங்குகிறது. அவ்வமயம் வேதாந்த ஜோதி உங்களைச் சுற்றி ஜொலித்து நிற்பதால் எல்லோரும் உங்களால் காக்கப்படுகின்றனர். அதன்பின் வேதாந்த அனுபவத்தைப் பெற்றுவிட்டதாகக் கூறி ஊரெல்லாம் பறைசாற்றித் திரிய வேண்டிய அவசியம் இருக்காது!", என்று சுவாமிகள் பலதடவைகளிலும் தெரிவித்திருக்கிறார்கள். இக்கருத்துக் களையே சுவாமிகளின் அகில இந்திய யாத்திரையிலும்

அதன் பிறகு ஆச்சிரமத்திலும் நாங்கள் அனுபவித்தோம். சுவாமிகளின் அகில இந்திய யாத்திரையின்போது ஒவ்வொரு நிலையத்திலும் லட்சக்கணக்கானவர்கள் அவரைச் சுற்றிநின்று அவர்களது உயரிய மொழிகளைக் கேட்டனர். சுவாமிகளது தரிசன மாத்திரத்தாலே பெரும்பேற்றைப் பெற்றது போன்ற அனுபவத்தை அவர்கள் பெற்றனர். ஒரு ஏழை மற்றோர் ஏழைக்கு என்னதான் உதவ முடியும்? சுவாமிகளைப் போன்ற ஒரு சில மகாத்மாக்களைத் தவிர உலகத்தில் மற்றனைவரும் ஏழைகள். சுவாமிஜி ஒரு ஆப்த-காமி. அவர் மிகச்சிறந்த பொக்கிஷமான பேரருளைப் பெற்றுள்ளார். சுவாமிகளால் உங்களெல்லோரையும் ஆசிர்வதிக்க முடியும். அத்துடன் நீங்கள் வேண்டும் வரங்களையும் அளிக்க முடியும்'', என்று ஷட்தர்சனாச்சாரியர் திரு. ராகவாச்சாரியார் கூறுவதுபோல், சுவாமிகளின் தரிசனத்தைப் பெற்றவர்கள் அனைவரும் எல்லாவற்றையும் பெறுகின்றனர். ஆதலால் சிவானந்தரை எல்லோரும் வணங்கித் தங்களது எண்ணங்களை நிறைவேற்றிக் கொள்கின்றனர்.

சிவானந்தரின் வாழ்க்கையே வேதாந்த விளக்கமாகும். சுவாமிகள் தமது அன்றாட வாழ்க்கையில் வேதாந்தத்தைத் தாமும் அப்பியசித்து மற்றவர்கட்குப் பிரசாரமும் செய்து வருகிறார். வேதாந்த உண்மைகளை வறண்ட முறையில் வாயளவில் கூறுவதை அவர் அறவே வெறுக்கிறார். நாம ரூபங்களுக்குட்பட்ட உலகம் அவர்கள் முன் நிலவுவதில்லை. பிரம்மமே நிலைத்து நிற்கிறது. சுவாமிகள் தெய்வீகப் பார்வையைக் கொண்டு விளங்குகிறார். ஆதலால் அவருக்கு எத்தகைய ஆசையும் கிடையாது. அங்ஙனம் அல்லாது,

ஏதாவதொரு ஆசை இருக்குமென்றால் அது தெய்வீகத் திட்டத்தை நிறைவேற்றுவதைத் தவிர வேறொன்றும் இருக்க முடியாது!

ஞானயோகம் வைராக்கியம் என்கின்ற பாறை மேல் நிற்கிறது. அதில் நிற்பவர் தான் சுவாமி சிவானந்தர். தனது யௌவனப் பருவத்திலும் பிறகும் சுவாமிகள் அதிகமான ஆக்கிரகமுடையவராக இருந்தார் என்பது உண்மையே. ஆனால் அந்த ஆவல் மேலும் மேலும் தொண்டு செய்வதிலும், சேவைக்கான சந்தர்ப்பங்களை மேலும் மேலும் பெறவேண்டுமென்பதிலும் நிலவி நின்றது; மற்றவர்களைப்போல் செல்வத்தைப் பெருக்கிச் சேமித்து வைப்பதில் அல்ல! வைத்தியக் கல்லூரியை விட்டதும் சிவானந்தர் ஒரு பத்திரிகையை வெளியிடத் தொடங்கினார். ஆனால் அதன் பிரதிகளை அனைவருக்கும் சுவாமிகள் இலவசமாகவே வழங்கினார்! மலேயாவில் உறைந்தபோது சுவாமிகள் தம் பொருளை மற்றவர்க்குக் கொடுத்துதவுவதில் மேலும் மேலும் கருத்துடையவராக விளங்கினார். அம்முறையே பொருளியல், அறிவியல், ஆத்மீகவியல் சம்பந்தமான தனது உடைமைகளையெல்லாம் தன்னை அணுகும் அன்பர்கட்குச் சுவாமிகள் பகுத்து அளித்து விட்டார். இப்படி எல்லாவற்றையும் துறப்பதற்குத் தூண்டிய இவ்வைராக்கியம் எப்பொழுதும் அதியற்புதமான விவேகத்தையே அடிப்படையாகக் கொண்டு விளங்குகிறது. சுவாமிகள் தனது இளமைப் பருவத்திலேயே உயரிய பழுத்தறிவைக் கொண்டு விளங்கினார். இந்த ஞானமே அவரைக் கடைசியில் ரிஷிகேசத்துக்கு அழைத்து வந்து சேர்த்தது.

அறுவகை ஒழுக்கங்களான சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை என்னும் சீரிய தன்மைகளைச் சுவாமிகள் முழுமையுங் கொண்டு வந்தார். ஐம்புலன்களையும் மனத்தையும் அடக்கியவராய்ச் சுவாமிகள் தீராத சேவையில் ஈடுபட்டு வந்தார்; மக்களின் நன்மையிலேயே நாட்டம் கொண்டார். அன்று முதல் இன்று வரையிலும் சுவாமிகளின் தோற்றத்தின் பூரண அம்சம் சிரத்தையேயாகும். நம்பிக்கையும் பக்தியும் நிறைந்த நிலையில் சேவை செய்யும் சுவாமிகள் ஒவ்வொரு வேலையையும் திறமை, நம்பிக்கை, பக்தி மூன்றும் பொருந்தப்பெற்று நிற்கும் ஆசையுடைய மனிதன் செய்வதுபோல் தோன்றினும் அவரது உள்ளுணர்ச்சி வேறு விதமாகவே அமைந்திருக்கிறது.

சுவாமிகளின் உள்ளுணர்ச்சி சாதனைகள் நான்கினும் கடைசியான முமுட்சுத்துவமென்ற மோட்சத்திற்கான இச்சையை வெளிப்படுத்துகிறது.

உலகத்தைத் துறந்து இந்தியாவுக்கு வந்தபொழுது சுவாமிகளுடைய மனத்திலிருந்த சீரிய எண்ணம்: "இப்பொழுதே கடவுளைக் காணவேண்டும்", என்பதே. இந்த விஷயத்தைச் சுவாமிகளே தெரிவித்ததாக மற்றோரிடத்தில் கூறப்பட்டுள்ளது. ஆண்டவனுடன் ஒன்றுபட்டுத் திகழும் சிறந்த ஜீவரான சிவானந்தர் இன்றும் அதே தன்மையில் நடந்து வருகிறார். அவரது ஒவ்வொரு செயலும் மிகச்சிறந்த முமுட்சுத்துவத்தைச் சாதகர்களுக்கு ஊட்டி வருகிறது. சுவாமிகளுடைய செய்கைகள் சுயநலமில்லாததும், ஆணவமற்றதும், ஆசையகன்றதுமாக இருப்பதால் கர்மத்தளைகளைப் படம் பிடிக்கக்கூடியதாக

இருக்கின்றன. அவர் சதா சுதந்திர நிலையிலேயே விளங்குகிறார்; விடுதலைக்கான விருப்பத்தையும் தாண்டிய நிலையில் நிலைத்திருக்கிறார். ஆதலால், ஆசைகள், அவற்றுள்ளும் மோட்சத்திற்கான ஆசைகூட, அவரது மனதில் தோன்றுவது கிடையாது. ஆம்! ஏற்கெனவே பெற்ற ஒரு பொருளின் மீது யாருக்காவது ஆசை தோன்றுவதுண்டா? இல்லையன்றோ!!

இங்கு மிகச்சிறந்த இலாபம் எதுவோ அதில் உரம் பெற்று விளங்குவதனால் கடும் கஷ்டமேற்படினும் அதனால் மனிதன் கலக்கமடைவதில்லை. உடலிலே தோன்றும் துன்பங்களைப் பொறுத்துக்கொள்ளும் தகைமை வாய்ந்த ஒருவனுக்குச் சமமாக இந்த உலகில் வேறு யாருமே இருக்க முடியாது. மூளையின் அளவு கடந்த வேலை சுவாமிகளிடம் நீரிழிவு நோயை ஏற்படுத்தியுள்ளது. அவரது வேலைகள் சரிவர நடைபெறுவதற்கு வியாதியைக் கட்டுப்படுத்தியாக வேண்டும். இந்த நோய்க்கான சாதாரண மருந்து 'இன்சுலின்' என்பதே. நாளுக்கொரு 'இஞ்செக்ஷனு'கச் சென்ற பதினைந்து வருடங்கள் கழிந்து விட்டன. ஆச்சிரமத்திலுள்ள இலவச ஆஸ்பத்திரிக்கு ஒரு சிறந்த டாக்டர் நியமனமாவதற்கு முன்னால் சிவானந்தரே தமது சரீரத்தில் 'இன்சுலின்' ஊசி குத்தி வந்தார்! 1950ம் வருடத்திய புகழ்மிக்க அகில இந்திய யாத்திரையின்போது யோகி சிவானந்தரின் மாபெரும் அற்புதங்களில் ஒன்றைக் கண்ணுற்றோம். வயதான அவருடைய யாக்கைக்கு முன்னில்லாத முறையில் சகிக்க முடியாத அளவுக்கு அலுப்புத் தோன்றியது. நாட்கணக்கில் சுவாமிகளின் உடலின் உஷ்ணநிலை மிகவும் அதிகமாகவே இருந்தது; தொண்டையெல்லாம் புண்ணாகிக் கொப்புளித்து, சிறிது

தும்மினாலும் இருமினாலும் மூக்கு, வாய் வழியாக இரத்தம் வரும் அளவுக்கு உடல்நிலை குன்றிவிட்டது. டாக்டர்கள் பயந்தனர். ஆனால் சுவாமிகள் தமது சரீர நிலையை யாத்திரை நிர்வாகிகள் யாருக்குமே தெரியப்படுத்தவில்லை; தமது உடல் நிலையால் யாத்திரைத் திட்டங்களில் இடைஞ்சல் வரவும் அனுமதிக்கவில்லை. 1952ல் 'லம்பாகோ' நோயினால் தாக்குண்டு அறவே நடக்க முடியாத நிலைவந்து எய்தின வரையிலும் சுவாமிகள் தமது அலுவலகம் சென்று வேலைகளைச் சரிவரக் கவனித்து வந்தார்; சிற்சில நேரங்களில் இருகைகளையும் தரையிலே ஊன்றி நகர்ந்து படிகளைக் கடந்து செல்ல நேரிட்ட பொழுதும் அதைச் சற்றேனும் பொருட்படுத்தாது அலுவலகம் சென்று வந்தார். 1954ல் டைபாயிட் காய்ச்சலினால் தாக்குண்ட பொழுதும் சுவாமிகள் ஒருநாள் கூடத் தனது வேலையைச் செய்யாமல் இருந்ததில்லை. அதே போல் தொண்டு செய்வதற்கான வழிவகைகளைச் சீடர்கட்கு எப்பொழுதும் போல் கூறுவதிலும் அவர் பின்வாங்குவதில்லை. மனித சமுதாயத்தின் முக்கிய நலனையே எண்ணி நிற்கும் சக்தி வாய்ந்த மகத்மனத்தை அந்த நோயால் அசைக்க முடியுமா? முடியாது! முடியவே முடியாது!!

மற்றவற்றில் நிலவுவதைப்போல் திதிட்சை விஷயத்திலும் சிவானந்தரின் சாதனை மிகவும் சுறுசுறுப்பாகவும், ஆக்கத்தன்மையுடையதாகவும், சீரிய யோகமாகவும் அமைந்துள்ளது. 'டைபாய்டு' காய்ச்சலினால் அவதிப் படும்பொழுது துன்பத்தைப் பொறுத்துக்கொண்டு படுக்கையில் கப்சிப் என்று படுத்துக்கிடப்பது எளிது. இருப்பினும் உள்ளே ஒரு பிணியாளன் இருக்கிறான் என்று

ஊரார் அறிய ஓலமிட்டுக் கதறும் ஒருவனைவிடச் சும்மா இருப்பது மேலல்லவா? ஆனால் இதைவிடக் கஷ்டமானது பிணியின் பளுவைச் சகித்துக்கொண்டு, அலட்சிய பாவத்துடன் இருப்பதுமன்னியில் மற்றவர்களின் ஆரோக்யம், சாந்தி, மகிழ்ச்சி முதலிய நலன்களிலேயே கருத்துக்கொண்டு நிற்பது. ஒரு பழிச்சொல்லையோ, பிறரால் ஏற்படுத்தப்பட்ட காயத்தையோ பொறுத்துக் கொள்வது எளிது. ஆனால் பழித்தவனையே நேசித்துக் கௌரவித்து அவனுக்குச் சேவை செய்வது அரிது. மிகவும் உஷ்ணமான நேரத்திலும், நன்கு பனி அடிக்கும் பொழுதும் தன்னைச் சுற்றியுள்ள சீதோஷ்ண நிலையைக் குறை கூறாது அவற்றைப் பொறுத்துக்கொண்டிருப்பது எளிது. ஆனால் சுடும் வெயிலிலும் கடுங்குளிரிலும் ஆவலுடன் உங்கள் வரவை எதிர்நோக்கும் சத்சங்கக் குழுவுக்குச் செல்வது கஷ்டமான காரியம். சிவானந்தரின் சகிப்புத்தன்மை இரண்டாவது பிரிவைச் சார்ந்தது. மழைக் காலத்தில் கனமழை பெய்யும்போதும், பனிக்காலத்தில் கடும்பனி வீசும்பொழுதும் சுவாமிஜி தனது அலுவலகத் திற்குச் சென்று ஒழுங்காகத் தனது வேலைகளைச் செய்து வருவார்! இப்படிச் சுவாமிகள் நடந்துகொள்வது பலரையும் பலதடவையும் ஆச்சரியத்திலாழ்த்தியதுண்டு. 1940–ல் சுவாமிகளுக்காக விசேஷமாகத் தயார் செய்யப்பட்ட உணவின் பெரும் பகுதியை ஆச்சிரமத்திலுள்ள அனைவருக்கும் சிவானந்தரே விநியோகம் செய்வது வழக்கம். கடும் வேனிலில் உஷ்ணம் இருக்கும் நேரம், சுவாமிகள் தனது வழுக்கைத் தலையில் ஒரு துண்டைப் போட்டுக்கொண்டு சுடும் வெயிலில் தன் குடீரிலிருந்து நடந்து சென்று ஒவ்வொரு குடீரிலுமுள்ள ஆச்சிரம

வாசிக்குத் தான் கொண்டுவந்துள்ள பெரிய தட்டிலிருந்து பிரசாதத்தை வழங்கிச் செல்வார்! அத்துடன் நில்லாது, "தயவு செய்து வெளியே வராதீர்கள். வெயில் கடுமையாக இருக்கிறது. நீங்கள் நன்றாக ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள்" என்று நல்லுரை கூறியும் செல்வார்!! இதுவே சிவானந்தர் சதா கொண்டு நிற்கும் சகிப்புத்தன்மை. இத்தகைய திதிட்சையை நம்மனைவருக்கும் புகட்டுவதற்காகவே சுவாமிகள் நம்முன் ஓர் உதாரண புருடராக விளங்கி வருகிறார்கள்.

## சிவானந்தரின் குரு

நான்கு சாதனைகளையும் நன்கு இயற்றியபின், சாதகன் சிறந்த சற்குருவை அணுகி ஆத்மானுபூதியைப் பெறுவதற்குச் சீரிய ஆத்மீகப் பயிற்சியில் ஈடுபடவேண்டும். மலம், விட்சேபம், ஆவரணம் மூன்றும் இல்லாமல் விளங்கும் ஈசுவரனின் அவதாரம் யாரை அணுகுவது? ஆத்மானுபூதியை அடையவும் வழியிலுள்ள தடைகளை நீக்கிச் சாதனைக்கு உதவி செய்யவும் சிவானந்தருக்கு ஒரு குருவின் அவசியமே ஏற்படவில்லை. தியானம் செய்வதில் எவ்வித இடையூறு களையும் தான் என்றுமே அனுபவித்ததில்லை என்பதைச் சுவாமிகளே ஒப்புக்கொள்கிறார். எத்தகைய தடையும் சுவாமிகட்கு இன்னலை விளைவிக்கும் ஆற்றல் வாய்ந்ததாக இருக்க முடியாது. இந்த நிலைமை உலகைத் துறந்து சன்னியாசத்தைச் சுவாமிகள் கொள்ளும் முன்னரே இருந்து வந்திருக்கிறது.

இருப்பினும், குருவின் அவசியத்தை மக்களுக்கு எடுத்துக்காட்ட வேண்டிச் சிவானந்தர் தூய்மை பொருந்திய

சுவாமி விசுவானந்த மஹாராஜரின் பாதாரவிந்தத்தை அடைந்தார்! ரிஷிகேசத்துக்கு வந்து சேர்ந்த சில நாட்களுக்குப் பிறகு சுவாமிகள் ஓரிரவை சரண்தாஸர் தர்ம சாலையின் திண்ணையில் கழிக்கலானார். அதே திண்ணையில் சிறிது அகன்று ஒரு வயதான சன்யாசி அன்றிரவு தங்கியிருந்தார். இளைஞர் முதியவரிடம் ரிஷிகேசத்திற்குத்தான் வந்ததன் நோக்கத்தை விளக்கிக் கூறினார். தன்னை அணுகித் தன்முன் நிற்பவர் வருங்கால பூமண்டலேசுவரர் எனத் தெரிந்துகொண்ட அந்த முதிய சன்யாசி உடனேயே சுவாமிகளின் குருவாகத் தான் பணியாற்ற விரைந்தார்! அடுத்த நாள் காலை விசுவானந்த மஹாராஜ் அவர்கள் டாக்டர் குப்புசுவாமியைச் சன்னியாச ஆச்சிரமத்தில் அனுமதித்து, **'சுவாமி சிவானந்த சரஸ்வதி'** என்ற புனிதப்பெயரையும் சூட்டினார். இந்தப் பெயர் இப்பொழுது சாதகர் உலகத்தில் வெகு சாதாரணமாக உச்சரிக்கப்படும் உயரிய சொல்லாகிவிட்டது. சிவானந்தரைச் சன்னியாச ஆச்சிரமத்தில் சேர்த்து வைத்த பிறகு விசுவானந்தர் சீடரிடம் விடைபெற்றுக்கொண்டு காசியை அடைந்தார்.

பல்வகைச் சுபாவங்கள் பொருந்திய பல்லாயிரக் கணக்கான மக்கட்கும் சீரிய உதாரணமாக விளங்குவது தான் சிவானந்தருடைய வாழ்க்கையின் தனிச்சிறப்பு. சத்குருவின் சரணாரவிந்தத்தை அணுகவேண்டிய கடப்பாடுடைய சாதகர்கட்குச் சிவானந்தர் ஓர் சீரிய உதாரணத்தை ஏற்படுத்தியுள்ளார். இன்னும் சிலர் இருக்கிறார்கள். ஆனால் அவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவு. அவர்கள் உள்ளத்தில் தூயராய், சாதனையில் சிறந்தோராய், மானிட குருவைத் தேடிச் செல்லவேண்டிய அவசியம் இல்லாதவர்கள். அத்தகையவர்கள் செய்ய

வேண்டுவதென்ன? சிவானந்தரின் சொந்த வாழ்க்கையையே அவர்களின் வழிகாட்டியாகக் கொள்ள வேண்டும்.

இந்தவிடத்தில் சிவானந்தரின் நடத்தை பகவான் தத்தாத்ரேயருடையதை ஒத்திருக்கின்றது. உயரிய எண்ணத்தை வெளிப்படுத்துகிறவனும் உயரிய செய்கையில் ஈடுபட்டவனுமே சிவானந்தரின் சீரிய குரு. சுவாமிகள் சிறு குழந்தைகளினுடையவும் சொற்களைக் கவனமாகக் கேட்கும் தன்மையுடையவர். இப்படி அவர்கள் செய்வதன் கருத்தென்ன? ஒரு வேளை அக்குழந்தைகளின் சொற்களிலும் உயரிய குருவின் உபதேச மொழிகள் உறைந்து கிடக்கலாமல்லவா?! ஆம்! தன்னுடைய சீடர்களை தன்னுடைய குருவெனச் சுவாமிகள் பலதடவைகளிலும் பறைசாற்றியிருக்கிறார்கள். "அவர்களிடமிருந்து பல பாடங்களையும் நான் பயின்றிருக்கிறேன்", என்கிறார் சுவாமிகள். இந்த அபூர்வ சுபாவம் சாதாரண மனிதரால் எண்ணவும் முடியாதது.ஒரு குருவைத் தேடிச் சரணடைந்து அவருடன் பல நாட்கள் இருக்க முற்படாத சுதந்திர மனோ பாவமுடைய சாதகர்களும் மிகுந்த பணிவுடன் அமைந்து எல்லோரையும் சமமாகக் கருதுவதற்கு முடியும் என்பது மட்டுமல்லாது, தன்னுடைய வேலைக்காரர்களையும், என் சீடர்களையுமே தனது குருவாக எண்ணி நடக்கவும் முடியும் என்பதைச் சிவானந்தர் இதனால் தெளிவு படுத்தியுள்ளார். இங்கும் ஏனைய சாதனைகளைப்போல் வெளிப்பகட்டை அறவே இல்லாதாக்கச் சுவாமிகள் பலவழிகளையும் கண்டு பிடித்துள்ளார். நீங்கள் ஒரு தனிப்பட்ட குருவின் தேவையை நாடவில்லை என்றால் நல்லதே; ஆனால் எல்லோரையும் உங்களது குருவாகக் கருதி வழிபடுங்கள்!

அனுபவம் தான் சிவானந்தரின் மிகச்சிறந்த குரு. தாமும் மற்றவரும் அனுபவித்து வரும் ஒவ்வொரு அனுபவத்திலிருந்தும் சுவாமிகள் உயரிய பாடத்தைப் பெறுகிறார். இந்தப் பாடத்தை அவர் ஒருபொழுதும் மறப்பதே கிடையாது. உதாரணமாக ஒரு சிறிய விஷயத்தைத் தெரிவிக்க விரும்புகிறேன். சுவாமிகளது இளமைப் பருவத்தில் தென்னங்கீற்றினாலும் பனையோலையினாலும் கூரைகள் போடப்பட்டிருந்ததால் ஒரு கடைத் தெரு அனைத்தும் பூராவும் தீயினால் வெந்து நீறாகியதை அவர்கள் இத்தகைய கூரை ஆபத்தானது என்ற பாடத்தை புரிந்துகொண்டார். அதற்குப் பிறகு இன்றுவரையிலும் ஓலையால் கூரைவேயப்பட்ட வீடுகளில் சுவாமிகள் தாமறிந்த எவரையும் வசிக்க அனுமதிப்பதே இல்லை; அதைவிட வெறும் திறந்த வெளியில் வாழ்வதையே அவர்கள் விரும்புகிறார்கள்.

தன்னுடைய அனுபவத்தின் மூலமாகத் தான் பெற்ற பாடங்களை மற்றவரின் நலனுக்காகச் சுவாமிகள் சதா உபயோகித்து வருகிறார்கள். அதிக நேரம் கங்கை நீரில் நின்றுகொண்டு ஜபம் செய்வதால் தனக்குக் கால் உளைச்சல் தோன்றுமானால், மற்றவரையும் அங்ஙனம் செய்வதைச் சுவாமிகள் அனுமதிக்கமாட்டார்! தமது தேகாந்தர வாழ்க்கையிலிருந்து அலச்சல் தீவிர சாதனைக்கும் சேவைக்கும் இடையூறாக இருப்பதைக் கண்ட சுவாமிகள் மற்றவர்களையும் அங்ஙனம் அலைவதிலிருந்து தடுக்க முயலுகிறார்! சுவாமிகள் தம்முடைய சுற்றுப்பிரயாணத்தின் போது ஓரிடத்தில் ஸ்திரமாகத் தங்குவதன் அவசியத்தை உணர்ந்தார். (1) பிச்சையின்றிக் கிடைக்கும் சாதாரண உணவு, (2) ஒரு நல்ல படிப்பகம், (3) வைத்திய வசதிகள், (4) தனித்திருந்து தியானம் செய்வதற்கான வசதி, இவை

அந்த இடத்தில் இருக்கவேண்டும் என்பதாகவும் எண்ணினுர். ஆதலால் இந்நான்கு தேவைகளையும் பூர்த்திசெய்த ரிஷிகேசத்தையே தேர்ந்தெடுத்துத் தனது ஆசிரமத்தை அங்கு ஸ்தாபித்தார். ஆச்சிரமத்தை நிறுவின உடனேயே தாம் தமது சன்யாச வாழ்வின் முற்பகுதியில் பட்ட துன்பங்களைத் தன் சீடர்கள் படக்கூடாது என்பதற்காக இந்த நான்கு வகையான வசதிகளையும் சுவாமிகள் உடனேயே ஏற்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டார். இவ்வனுபவங்கள் எல்லாம் சிவானந்தரின் குரு எனலாம். அவற்றிலிருந்து பெறும் பாடங்களை சுவாமிகள் மறப்பதே கிடையாது.

ஆனுல் இந்தப் பாதை, சிரிய சாதனையை மேற்கொண்டு உயர்ரக தெய்வீகக் குணங்களைப் பெற்றுள்ள சாதகர்கட்கு மட்டுமேயன்றி மற்றவர்கட்கல்ல என்று சுவாமிகள் பன்முறை கூறியுள்ளார்கள். ஏனையவர்கள் ஒரு குருவைச் சார்ந்து, அவரது உபதேசத்தைப்பெற்று, அவரது பேருதவியால் சிரிய சாதனையில் ஈடுபடவேண்டும்.

## சிரவணம், மனனம், நிதித்தியாசனம்.

யோக வேதாந்த ஆரண்யப் பல்கலைக் கழக வகுப்புக்களின் போது உறங்கி வழியும் ஒரு சாதகனைச் சுவாமிகள் தட்டியெழுப்பி, "வகுப்பின் போது கேட்கும் முக்கிய கருத்துக்களைக் குறித்துவைக்கும் குறிப்புப் புத்தகத்தை வைத்திருக்கின்றீரா?", எனக் கேட்டார். அந்தச் சாதகன் அநேகமாகக் குறிப்பெழுதுவதே கிடையாது! ஆனுல் சுவாமிகள் அப்படி இருப்பதேயில்லை. "வகுப்பு முடிந்ததும் எனது குடிலுக்குத் திரும்பி வருகிறேன். உடனேயே

பல்கலைக் கழக வகுப்புக்களில் தெரிவித்த கருத்துக்களைப் பற்றி மறுமுறையும் ஞாபகப்படுத்திக்கொள்கிறேன். அவைகளின் மீதுள்ள ஆழ்ந்த தியானம் அவற்றுடன் தொடர்புகொண்ட தூய எண்ணங்களை எழுப்புகிறது. இவையனைத்தையும் ஒரு கட்டுரையில் புகுத்திஉலகத்திற்குச் சமர்ப்பித்து வருகிறேன்'', என்று சுவாமிகள் தெரிவிக்கிறார்.

இங்கு ஞானயோக சாதனையின் முப்பிரிவுகளான சிரவணம், மனனம், நிதித்தியாசனம் என்ற மூன்றையும் சுருக்கமாகச் சுவாமிகள் தெரிவிக்கிறார். ஒரு சத்சங்கத்திலோ அல்லது சுவாத்தியாயத்தின் போதோ பெற்ற கருத்துக் களைப் புத்தகத்திலே எழுதி வருவதால் மனம் மடியின்றிச் செயல்பெற ஏதுவாகும். இந்தப் பழக்கம் மனனத்திற்கும் அதன் மூலம் நிதித்தியாசனத்திற்கும் வழிகோலுவது உறுதி.

உதாரணமாக, ஒரு நாள் காலை பிரம்மத்தின் இயற்கையைச் சத்—சித்—ஆனந்தமாக வர்ணிக்கும் ஒரு வேதாந்த நூலைச் சுவாமிகள் படிக்கலானார். இந்தத் தனித் தேற்றத்தின் மீது சிவானந்தர் தியானித்ததன் காரணமாகக் கீழ்வரும் கருத்துக்கொண்ட பாடல் அவரிடம் தோன்றிற்று. நிற்குணத் தியானத்திற்குப்பெரும் உதவியென்ற முறையில் இந்தப் பாட்டைச் சுவாமிகள் உலகத்துக்கு அளித்திருக் கிறார்கள்.

சத்—சித்—ஆனந்தம்
சத்தியம்—அறிவு—இன்பம்
உண்மை உணர்ச்சி சந்தோஷம்
அஸ்தி பாதி பிரியம்

உயிர் வெளிச்சம் அன்பு
அமரத்வம் அறிவு ஆனந்தம்
எல்லாம் குறிப்பது ஒன்றைத்தான்!
உருகின அன்பே ஆனந்தம்!!

*இதுவே நிற்குணத் தியானம் என்று அலுவலகத்தில் அந்தக் கவியை எங்களுக்குச் சுவாமிகள் படித்துக் காண்பித்துக் கூறினார்:* "சத்-சித்-ஆனந்தத்தை நினையுங்கள். ஆத்மன் அல்லது பிரம்மத்தை எண்ணுங்கள். பிறகு சத்-சித் ஆனந்தத்திற்கு நிகரான பிம்பத்தின் தன்மையைக் குறிக்கும் உயர்குணங்களை எண்ணி நில்லுங்கள். அவற்றிற்கு நிகரான குணங்கள் உங்கள் மனதிலே யேதோன்றும். பிறகு அவற்றின். மீது தியானம் செய்யுங்கள். இதுவே நிற்குணத் தியானம் சதா சிந்தனை செய்தவண்ணமாகவே நீங்கள் இருக்கவேண்டும் திடீரென மின்னல் போன்று அது உள்ளே தோன்றும். அதுவே சத்தியம்".

*அதே போல் பகவத்கீதை, உபநிடதம் போன்ற சமய நூல்களிலிருந்து சிவானந்தர் சில வரிகளை மனனநிதித்தியாசனத்திற்கு வேண்டித் தேர்ந்தெடுத்திருக்கிறார். அவற்றைக் கீழே காணலாம்:—*

"அஹமாத்மா குடாகேச சர்வபூதாசயஸ்திதா"
*"எல்லா ஜீவர்களிலும் உறைந்து நிற்கும் ஆத்மாவே நான்"*

ஈசாவாஸ்ய மிதம் சர்வம்
ஏகமேவாத்விதீயம் பிரம்மம்
இரண்டல்லாத ஒன்றே பிரம்மம்.

# அன்றாட வாழ்க்கையில் வேதாந்தம்

*ஆத்மீக ஒருமைப்பாட்டை உணர்வதென்பது சிவானந்தரிடம் ஏட்டளவிலே நிலவும் கொள்கையல்ல! இந்த மாபெரும் உண்மையின் பல்வேறு தன்மைகளையும் நடைமுறையில் உணர்வதே சிவானந்தரின் சீரிய செயலாகும். இந்த ஒருமைப்பாட்டை உணரும் தன்மை சுவாமிகளது அன்றாட வாழ்க்கையின் சாரமாகிய தளர்ச்சியில்லாத தன்னலமற்ற சேவையாலும் பேரன்பாலும் தெரிவிக்கப் படுகிறது.*

*இந்த ஒற்றுமையுணர்ச்சியும் சிவானந்தருடன் சேர்ந்தே தோன்றியதே. யுவனாகவிருந்தபோது வேலி மேயும் பணியில் பற்றுக்கொண்டு அதைக் கற்க எண்ணி அதில் திறம்படைத்த ஒருவனிடம் சுவாமிகள் சென்றார். அத்தொழிலாளி ஹரிஜன வகுப்பைச் சார்ந்தவன். சிவானந்தர் (டாக்டர் குப்புசுவாமி) சனாதன சைவப் பிராமணர் குடும்பத்தைச் சார்ந்தவர். ஒரு ஹரிஜனிடம் செல்வதால் குடும்பத்திலுள்ள பெரியவர்களின் கோபத்துக்கு ஆளாவது திண்ணம் என்பது அவருக்குத் தெரியும். எப்படியாவது வேலி மேயும் பணியைத் தெரிந்து கொள்ளவும் ஆவல். அந்த ஹரிஜனிடம் சென்று சுவாமிகள் ஒரு நாள் பாடம் சொல்லிக்கொண்டார். தனக்குக் கற்றுக் கொடுத்த பாடத்திற்காகச் சிவானந்தர் அந்தத் தொழிலாளிக்கு பூமாலை அணிவித்து, விலையுயர்ந்த வெகுமதிகளையும் (குருதட்சிணை!) அளித்து அவனை வழிபட்டார்!! (குருவை மதித்து, வழிபட்டு, அவருக்குச் சேவை செய்ய வேண்டும் என்பதில் சுவாமிகள் எவ்வளவு) தூரம் கருத்துடையவர் என்பதை இது குறிப்பிடுகிறது.*

ஒரு மேல் ஜாதியைச் சார்ந்தவர் என்ற அபிமானத்தின் அணுவேனும் இல்லாமல், அடுத்தவன் தாழ்ந்த ஜாதியைச் சார்ந்தவன் என்ற நிகிருஷ்ட பாவமும் இல்லாமல் சுவாமிகள் அன்று முதல் இன்றுவரையும் விளங்கி வருகிறார்கள்.

*இதேபோல் இனியொரு நிகழ்ச்சி சுவாமிகள் மலேயாவில் வாழ்ந்து வந்த காலத்தில் நடைபெற்றது. சுவாமிகள் ஒரு நாள் ஸ்டூடியோவுக்குப் படம் எடுக்கச் சென்றிருந்தார். அவருடைய சமையல்காரர் திரு. நரசிம் மய்யரும் அன்று அவருடன் இருந்தார். திரு. நரசிம்மய்ய ருடைய முகத்தில் டாக்டரின் உடை அணிந்து படம் எடுக்கவேண்டும் என்ற எண்ணம் நிலவுவதைக் கண்ட சுவாமிகள் உடனேயே அம்முறையில் அவரது படத்தை எடுப்பதற்கு ஏற்பாடு செய்தார். "நரசிம்ம தீட்சிதரவாள்! எனது உடையில் தாங்கள் படம் எடுக்கவேண்டும் என்று நான் விரும்புகிறேன்", என்று கூறிக்கொண்டே சுவாமிகள் தனது உடையை அவருக்கு அணிவித்துத் தன்னுடைய செலவிலேயே படம் பிடிக்கச் செய்தார்கள். சுவாமிகளின் உறுதியான மனப்போக்கைக் கண்ட அனைவரும் அதிசயித்து நின்றனர்.*

*நேர் மாறாக அகில இந்திய யாத்திரையின்போது புது டில்லியில் நடந்த பெரிய அரசாங்க அதிகாரிகள் பலர் நிறைந்த ஒரு கூட்டத்தில் இந்த வேதாந்தச் சிங்கம் முழங்குவதை நாங்கள் கண்டோம். அந்த இடத்தில் சிவானந்தர் ஆண்டவனின் அதிசக்திவாய்ந்த அவதாரமாகத் திகழ்ந்தார். அவர் முன்னிலையில் மந்திரிகளும், நீதிபதிகளும், மற்றவர்களும் குழந்தைகளாகவே தோன்றினர். அனைவரும் ஆத்மானுபூதியின் பெருமையைப் புரிந்துகொண்டிருப்பார்கள்*

என்பது உறுதி. அத்தகைய ஆத்மானுபூதியின் முன் எத்தகைய பெருமையும் சூரியன் முன் பனிபோல் மறைந்து செல்வது திண்ணம்.

உலகத்தின் வலிமை பொருந்திய சக்கரவர்த்தி யானாலும் சரி, அல்லது மிக ஏழ்மையுடைய பிச்சைக்கார னாயினும் சரி, படித்த பண்டிதனாயினும் சரி, அல்லது எழுத்தறிவில்லாத குழந்தையாயினும் சரி, சிவானந்தருக்கு யாவரும் சமம். அவர்களிடம் சுவாமிகள் சமமான மரியாதை யுடனும் அன்புடனும் பழகி வருகிறார்கள்.

## தன்னைத் தெரிந்துகொள்வதன் பலன்!

சிவானந்தரின் ஆத்மானுபூதியின் அசாதாரணச்சிறப்பு, அதன் பலன்கள் அவரால் மட்டுமல்லாது மனித சமுதாயம் அனைத்தினாலும் அனுபவிக்கப்படுகிறது என்பதே. சுவாமிகளுடைய வாழ்க்கை, அவ்விடம் நிலவி நிற்கும் சேவை, அறிவு, அன்பு, எல்லாம் மனித சமுதாயத்தின் பொதுநலனுக்காகவே அமைந்துள்ளன. இதன் காரணம் ஒரே தெய்வீகஜோதியின் அம்சங்களான அனைவரும் சமமே என்ற சிவானந்தரின் சீரிய பார்வையே!

பரந்து விளங்கும் பேருணர்ச்சியிலிருந்து சுவாமி களுடைய கட்டுரைகள், நூல்கள் முதலியன தோன்று கின்றன. ஆதலால் அவை முடிவில்லாதன; உயரிய உணர்ச்சியை ஊட்டக்கூடியன; படிப்பவர் உள்ளத்தை ஊடுருவிப் பாய்ந்து செல்லும் தன்மையன. அவை அஞ்ஞானத்திரையை அகற்றும் ஆற்றலுடையனவாகவும் இருக்கின்றன.

மகிழ்ச்சி, ஆனந்தம், சாந்தி, சக்தி இவற்றைத் தன்னை அடைந்து தெய்வீக முன்னிலையில் நிற்கக்கூடியவர்கட்கு மட்டுமல்லாது ஆயிரம் மைல்களுக்கப்பால் வசிக்கும் அநேகாயிரம் அன்பர்களுக்கும் சிவானந்தர் பரப்பி வருகிறார். ஆனால் சுவாமிகளிடம் பக்தி பூண்ட சாதகர்கள் மட்டுமே இவ்வுயரிய இன்பத்தைப் பெற்றுத் தங்களுடைய வாழ்க்கையைத் தூய்மையாக்கி வாழ்கின்றனர்.

சிவானந்தர் தம்மை எல்லோருடனும் ஒன்றாகவே எண்ணிவருகிறார் என்பது உண்மையே. அவரை அணுகும் ஒவ்வொருவரும் தங்களது தோற்றத்தைச் சுவாமிகளிடம் காண்பது அசாதாரண உண்மையாகும். அதே போல் தங்களுடைய உடலோடு ஒட்டிய அழுக்குகள் அகன்றவராய், தெய்வீகத் தன்மையுடையவராய் அவர்கள் சுவாமிகளைக் காண்கின்றது சாலச்சிறந்த உண்மையேயாகும். சிவானந்தர் எல்லோரிடத்திலும் கருணை கொண்டு விளங்குகிறார். அவர் எல்லோரையும் புரிந்து கொள்கிறார். அம்முறையே மற்றவர் செய்ய முடியாத அளவுக்கு அனைவருக்கும் உதவியும் சேவையும் அவர் செய்து வருகிறார்.

முற்றிலும் மாறுபட்ட மனோபாவமுடையவர்கள், பல்வேறு தேசத்தவர்கள், பலவகையான எண்ணங்களைக் கொண்டவர்கள், பற்பல விதமான ஆசைபிடித்தவர்கள், அனைவரும் சுவாமிகளின் காருண்யம், ஆறுதல், தங்களது பிரச்சினைகட்கான தீர்வு முதலியவற்றைக் குருநாதரின் பாதகமலங்களில் பெறுவதற்காகக் கூட்டம் கூட்டமாகக் கூடி ஒவ்வொரு நாளும் சிவானந்தரைச் சுற்றி நிற்பதைக் காணும் யார்தான் ஆச்சரியம் கொள்ளாமலிருப்பர்!

சுவாமிகளின் உருவ அமைப்பிலும், நடைமுறைகளிலும், தன்னைச் சுற்றி நிற்பவரோடுள்ள பழக்கத்திலும் நிமிடத்துக்கு நிமிடம் மாறுதலைக் கண்டவர்கள் அதிசயித்து நிற்கின்றனர். மனச்சோர்வடைந்தவர்களைக் குஷிப்படுத்துவதும், வருத்தமுற்றவர்களைத் தேற்றுவதும், அவதிப்படுகின்றவர்களை ஆதரிப்பதும், சாதர்களை நல்வழி நடாத்தக் கட்டளைகள் பிறப்பிப்பதும், அன்பர்களுக்கு மந்திரதீட்சை அளிப்பதும், சாதகனுக்குப் பிராணாயாமத்தைச் செய்து காட்டுவதும், ஆங்கிலேயரைப் போன்று தலையசைத்து நன்றி தெரிவித்து, இந்தியனைப் போன்று கைகூப்பி வணங்கி வரவேற்பதும், சிறிய துறவியைப்போல் கண்ணை மூடித் தியானம் செய்வதும், பிறரைப் போல் சிரிப்பதும், பிறரைத் தன் கல்வியிற்சிறந்த வேடிக்கைச் சொற்களால் சிரிக்கச் செய்வதுமாகப் பற்பல செய்கைகளைச் சுவாமிகள் ஒரே மூச்சில் செய்து வருகிறார்கள். இவற்றையெல்லாம் அவர் ஒரே வேளையில் எப்படித்தான் செய்து வருகிறார்? இவையனைத்தும் அவரது உள்ளத்தி லூறும் பேரன்பின் பல்வகைத் தோற்றமே! எனினும் உதவும் நபரின் தேவைக் கேற்றவாறு அவை வேறுபடுகின்றன. ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் தேவையைப் பெறுகின்றனர். சுவாமிகள் முன் சமர்ப்பிக்கப்படும் பிரச்சினைகள் தவறானவைகளாக இருந்தாலும் அவை அவருக்குத் தவறுடையனவாகத் தோற்றுவதில்லை! மிகவும் கடுமையான கேள்விகளெல்லாம் சுவாமிகளிடம் கேட்கப்படுகின்றன. சுவாமிகட்கோ எல்லாரிடமும் அன்பும் கருணையும் தோன்றி நிற்கின்றன. ஒவ்வொருவருடைய விஷயத்திலும் எவ்வாறு செயல்பட வேண்டும் என்பது அவருக்கு நன்கு தெரியும். தன்னை

யனுக்கும் நபருடன் சுவாமிகள் உடனேயே ஒன்றிவிடுவது தான் இதன் காரணமாகும் என்றால் மிகையாகாது.

அகில உலகப் பேருணர்ச்சியில் சுவாமிகள் எப்பொழுதும் தங்கி வருகிறார்கள். ஆதலால் ஒருவருடைய நம்பிக்கையையும் ஒருபொழுதும் அவர் பங்கப் படுத்துவது கிடையாது. ஒவ்வொரு சாதகனையும் அவன் நிற்கும் அதே நிலையிலேயே எடுத்துக் கொள்கிறார். அத்துடன் மெதுவாக அவன் கையைப்பிடித்து வாழ்க்கையின் லட்சியத்திற்கு அழைத்துச் செல்லுகிறார். அந்த சாதகனை ஒரேயடியாக மாற்ற ஒருபொழுதும் அவர் முயற்சி செய்வது கிடையாது; ஆனால் வழிகாட்டிச் செல்கிறார்!!



# அத்தியாயம் 6

## சம்பூர்ண யோகம்

1. *சிவானந்தரின் அன்றாட நடவடிக்கை எல்லா யோகங்களையும் தழுவிய சிறிய பகுதியைக் கொண்டதாக இருக்கும். நான் செய்வது போன்று நம்மையும் அங்ஙனம் செய்வதற்கு சுவாமிகள் வற்புறுத்துகிறார்.*

2. *சிவானந்தரின் திரிசூலம்—ஆத்மீகக்குறிப்பு உறுதிப்பட்டியல், அன்றாட நடவடிக்கை — இந்தச் சம்பூர்ண யோகத்தைச் சாதகன் கடைப் பிடிக்க உதவுகிறது.*

3. **சிவானந்த யோகமே** *வருங்கால யோகமாகும்.*



# சம்பூர்ண யோகம்

உலக சரித்திரத்தில் ஆத்மானுபூதி என்ற லட்சியத்தை அடைய ஏதாவது ஒரு வழியைப் போதித்து பழகி வந்த தீர்க்கதரிசிகள், மகாத்மாக்கள், துறவிகள் பலர் இருந்து வந்திருக்கின்றனர். ஆனால் சம்பூர்ண யோகத்தின் தீர்க்கதரிசியான சுவாமி சிவானந்தர் தனிப்பட்ட சாதனையை எவ்வளவு நல்ல முறையே செய்தாலும் போதாதென்றும் ஒவ்வொரு சாதகனும் தனது ஆத்மீகப்பட்டியலில் எல்லா யோகங்களிலுள்ள எல்லா அம்சங்களையும், அதாவது கடவுளை அடையும் சகல வழிகளையும், ஆழப்பதித்துக் கொள்ளவேண்டும் என்று வற்புறுத்தி வருகிறார்.

சிவானந்தரிடம் அவருடைய சொந்தக் கொள்கைகள் எதையும் காணமுடியாது. கடவுளால் தொன்றுதொட்டுப் பலதடவைகளில் அருளப்பெற்ற தெய்வீகச் செய்தியை அவர் மறுபடியும் மக்களுக்குத் தெரிவிக்கிறார். கடவுளோடு ஒன்றாகி நிற்கிறார். ஆகையால் கடவுளுக்கு வேண்டி சுவாமிகள் பேசுகிறார். என்றாலும் சுவாமிகளின் போதனைகளிலிருந்து ஏதாவது ஒரு கோட்பாட்டை நாம் காண முயன்றால், நம் முன் தோன்றுவது "கொஞ்சத்தின் கோட்பாடு" (Doctrine of a Little). அதுவே சம்பூர்ண யோகம் என மற்றொரு முறையில் அழைக்கப்படுகிறது. அன்பின் அடிப்படையிலுள்ள மனித உருவின் முழு வளர்ச்சியே எளிதில் அவனை லட்சியத்தை அடைவிக்க வல்லது எனச் சுவாமிகள் நம்மனைவரையும் எச்சரிக்கிறார். உடலின் எப்பகுதியிலுள்ள பலவீனமும் சரீரத்தையே அழித்துவிடும். மேலும் சாதனையின் ஒரு தனிப்பட்ட

*பிரிவிலுள்ள விசேஷத்திறமை நமது பகுத்தறிவையும் சகிப்புத்தன்மையையும் இல்லாதாக்கி, நிகிருஷ்டபாவத்தையும் பகைமையையும் ஏற்படுத்தி நமது ஆணவத்தைப் பெருகச் செய்கிறது. சிவானந்தரின் "கொஞ்சத்தின் கோட்பாடு" பாதையிலுள்ள பற்பல வீழ்ச்சிகளையும் நீக்கிச் சாதகனைக் கரடுமுரடற்ற, எளிய, மென்மையான வழியே கடவுளின் திருவடிகளுக்கு அழைத்துச் செல்கிறது. சிவானந்தரின் சொற்களிலேயே இதோ இந்தக் கோட்பாடு ஒரு சிறிய பஜனைப்பாடலின் உருவத்தில் தோன்றியுள்ளது. சுவாமிகள் இயற்றிய இந்தப்பாட்டை மகாமந்திரத்தைப்பாடும் மெட்டில் பாடலாம். சிவானந்தர் இந்தப் பாட்டைத் தமது 1950-ம் வருடத்திய அகில இந்திய யாத்திரையின்போது தாம் பேசிய ஒவ்வொரு கூட்டத்திலும் பாடிவரலானார். இதோ அந்தப் பாட்டைக் கேளுங்கள்.*

ஹரே ராம ஹரே ராம
ராம ராம ஹரே ஹரே
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண
கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே.

சிறுகச் சிறுக உண்ணுக பருகுக
சிறுகச் சிறுகப் பேசுக தூங்குக
சிறுகச் சிறுகக் கூடுக பழகுக
சிறுகச் சேவை ஓய்வும் கொள்க.

சற்றே முயல்வாய் சற்றே இருநீ
சற்றே படிப்பாய் சற்றே தொழுவாய்
சற்றே ஆசன முறை கொள்வாய்பின்
சற்றே பிராணயா மமும் செய்யே.

சிறிதே உன்னுக சிறிதே உளளுக
சிறிதே ஜபமும் பாடுக புகழும்
சிறிதே எழுதுக மந்திரம் மேலும்
சிறிதே நல்லார் உறவும் கொள்க.

ஒவ்வொன்றிலும் சிறிது செய்தால் எல்லாவற்றையும் செய்ய நேரமிருக்கும். இம்முறையே ஆத்மானுபூதி அனைவருக்கும் எளிதிலே கிடைக்குமளவில் அருகில் கொண்டுவரப் பட்டிருக்கிறது. நீங்களும் ஒருபெரும் வீழ்ச்சியிலிருந்து காப்பாற்றப்படுவது திண்ணம்.

இத்தகைய சேர்க்கை சிவானந்தரின் செய்கைகளில் பிரதிபலித்து நிற்கிறது. அவர்களது அன்றாட நடவடிக்கை நம்மிடம் சுவாமிகள் செய்யச் சொல்லும் சாதனைகளின் கூட்டுச் சேர்க்கையாகவே இருக்கிறது. சுவாமிகளின் அன்றாட வாழ்க்கையே ஒரு "கொஞ்சத்தின் பாடல்" (Song of a Little) என அமைந்துள்ளது. சுவாமிகள் எங்குச் சென்றாலும் தன்னுடன் எடுத்துச் செல்லும் பொருள்களனைத்தும் இந்தப் பாட்டை விளக்கிக் காட்டுகின்றன.

ரிஷீகேசத்திற்கு சுவாமிகள் விஜயம் செய்தது முதல் இன்றுவரை தன்னுடன் எல்லாவற்றிலும் சிறிது கொண்ட அநேகம் பைகளைச் சிவானந்தர் எங்குச் சென்றாலும் எடுத்துச் செல்வது வழக்கம். அவற்றில் குழந்தைகளுக்கான இனிப்புப் பண்டங்கள், பிஸ்கோத்து முதலியன, முதியவர்கட்கு முந்திரிப்பருப்பு, சாதாரண பிணிகட்கான சில பொது மருந்துகள், சாதகர்கட்குரிய புத்தகங்கள், துண்டுப் பிரசுரங்கள், முதலியன நிரம்பியிருக்கும். "ஒரு

சின்னஞ்சிறு உலகத்தையே உள்ளடக்கிய ஒரு பை எல்லோரிடமும் இருப்பது அவசியம்'', என்று சிவானந்தர் ஒரு தடவை தெரிவித்திருக்கிறார். தமது சொர்க்காசிரம நாட்களில் நடைபெற்ற நிகழ்ச்சியொன்றைச் சுவாமிகள் தெரிவித்தார்கள். சிங்கை மகாராணியுடன் லக்னௌவில் யாத்திரை செய்யும்பொழுது ஒரு நாள் ஒரு அபாயம் நிகழ்ந்ததாம். அன்றிரவு அவர்கள் சென்ற கார் ஒரு ஒதுங்கின இடத்தில் தகராறினால் நின்றுவிட்டது. கார் டிரைவர் மெழுகு வத்தியையும் தீப்பெட்டியையும் தேடிச் செல்ல முயன்றார். இரவு நேரத்தில் யாரிடம் சென்று கேட்பது? அவர்களோ ஆளில்லாத இடத்திலல்லவா அகப்பட்டுக்கொண்டனர்! உடனேயே சுவாமிகள் தன் பையிலிருந்து மெழுகுவத்தியையும் தீப்பெட்டியையும் எடுத்துக் கொடுத்தார்!! அவர்களின் பையில் குழந்தைகட்காகச் சில பிஸ்கோத்துத் துண்டுகள், ஒரு ஊசி, ஒட்டும் துணி, 'டிங்க்சர் ஐயோடின்', 'ஆஸ்பிரின்', 'சாரிடான்', காகிதத் துண்டுகள், பென்சில், ஒரு ஜோடிக் கத்தரிகள், கீதையின் பிரதியொன்று, ஒரு ஜபமாலை, மந்திரமெழுதும் புத்தகம் ஒன்று, முதலிய பல பொருள்கள் இருந்தன. தெருவழியாக நடந்து செல்லும் பொழுதே சிறிது தருமம், சிறிது பிணியாளர் சேவை, சிறிது ஜபம், பஸ் ஸ்டாண்டில் நிற்கும்போது சிறிது கீதாபாராயணம், சிறிது மந்திர மெழுதுதல் முதலியன எல்லோராலும் செய்யமுடியும்.

மிகச் சிறந்த தஸ்தாவேஜுகளில் சுவாமிகளின் ஆத்மீகக்குறிப்பு உங்களுடைய வீட்டில் வாழும் குருவாகும். அது இந்தச் சம்பூர்ண யோகத்தைச் செய்ய உங்களுக்கு உதவியாக இருக்கும். ஆத்மீகக் குறிப்பில் சிவானந்தர் எல்லாவித சாதனைகளையும் அடக்கியுள்ளார். அந்த நாட்

குறிப்பில் உங்களது அன்றாட நடவடிக்கைகளைச் சுவாமிகள் குறிக்கச் சொல்கிறார். இப்படிச் செய்வது எவ்வளவு முறை ஜபமாலையை உருட்டினீர்கள், பிராணாயாமம் செய்தீர்கள், என்பதைச் சும்மா குறித்து வைத்துப் பார்ப்பதற்கல்ல; உங்களது ஊக்கம் குறையாமலிருப்பதற்காகவே. இந்த நாட்குறிப்பும் அதன் பல்வேறு அம்சங்களும்—அன்றாட நடவடிக்கையும், வருட உறுதிப்பட்டியலும்—சிவானந்தரின் திரிசூலத்தை ஆக்குகிறது. இந்தத் திரிசூலத்தின் முன் உலகியல், அஞ்ஞானம் என்ற பிசாசுகள் இருந்த இடம் தெரியாது ஓடி மறைந்துவிடுகின்றன.



# முடிவுரை

சம்பூர்ண யோகம் சுவாமி சிவானந்தரால் மனித சமுதாயத்திற்கு அளிக்கப்பட்ட மிகச்சிறந்த பரிசாகும்; மனித சமுதாயநலனுக்கும் உலகசாந்திக்குமான மிகச்சிறந்த நன்கொடையாகும்; மக்களிடையே சகோதர பாவத்தை உண்டுபண்ணுவதற்கான சிறிய வழியுமாகும். இந்த யோகம் பரந்து விரிந்தது. தேசங்கள் எல்லாவற்றிலுமுள்ள சகல மத நூல்களிலுள்ள போதனைகளின் சாரத்தை இது வெளிப்படுத்துகிறது. இதுவே உலகப் பொது நிலமாகும்.

இந்தச் சிவானந்த யோகத்தைப் பழகுவதனால் மனிதன் மேன்மையுறுகிறான்; அவனுடைய பார்வை விரிவடைகிறது; அவன் உள்ளம் மென்மையாகிறது; அவன் அறிவு வளர்கிறது; அவனது ஆத்மீக உணர்ச்சி தூண்டப்படுகிறது. இந்த யோகத்தின் பிரகாசத்தில் மனிதன் சிறந்து வாழ்வதோடு எல்லாரிடத்திலும் அன்பு பூண்டு அவர்களுக்கான உயரிய சேவையில் ஈடுபடுகிறான்; தன்னைத் தூய்மைப் படுத்த முயலுகிறான்; அகத்தே நிலவும் பலக்குறைவைப் போக்க முனைகிறான்; பல்வேறு ஒழுக்கங்களை வளர்க்கப் பாடுபடுகிறான். தான் கொண்ட சமயம், தான் கடைப் பிடிக்கும் சமயக்கோட்பாடு, தான் சார்ந்த தேசம், இவைகளுக்குச் சற்றேனும் சம்பந்தமின்றிச் சிவானந்தரின் சீடன் தனது அருகிலுள்ளவர்களைவிடச் சிறந்தவனாகி விடுகிறான்; அகில உலக சகோதரத்வத்தையே, ஏன் அகில உலக ஆத்மீகத் தன்மையையே தனது அன்றாட வாழ்க்கையில் உணர முயற்சி செய்கின்றான். இதுவே சிவானந்தர் தன் சீடன்முன் வைக்கும் லட்சியமாகும். இந்த லட்சியத்தை அடைய முயல்வதனாலும் மனிதன் மனிதருள்

சிறந்தவனாகிவிட முடியும்; இலட்சியத்தை அடைந்ததும் அவன் கடவுளோடு கலந்து நிற்கிறான்!

## சிவானந்த யோகமே வருங்கால யோகமாகும்

ஸ்ரீ குருபகவான், சிவானந்த பகவான், யோகீசுவரேசுவரர், நம்மனைவருடைய புகலிடம், நம்மைத் தூய்மைப் படுத்திக் காப்பாற்றி, இருள் சூழ்ந்த பாலைவனமான இச் சம்சாரத்தில் நமக்குச் சேவை செய்யும் பாதகமலதூளியைக் கொண்ட அவதாரபுருடரான ஸ்ரீசுவாமிசிவானந்தசரஸ்வதி மஹராஜ் அவர்கள் நீடுழி வாழ்ந்து மனித சமுதாயத்தை

அசத்தியத்திலிருந்து சத்தியத்திற்கும்
இருட்டிலிருந்து வெளிச்சத்திற்கும்
மரணத்திலிருந்து அமரத்துவத்திற்கும்

அழைத்துச் செல்ல ஆண்டவன் அருள்புரிவாராக.

ஸ்ரீ சத்குரு மகராஜ் கீ ஜய்!



ஓம்

# தெய்வ நெறிக் கழகம்

## 1936-ம் வருடத்தில்

## ஸ்ரீ சுவாமி சிவானந்தஜி மகாராஜ் அவர்களால்

## ஸ்தாபிக்கப்பட்டு

## மக்களுக்குத் தொண்டுசெய்து வருகிறது!

1) சிவானந்தர் இலவச ஆசுபத்திரி
2) சிவானந்தர் ஆரம்பப் பள்ளி
3) சிவானந்தர் ஆயுர்வேத மருந்துச்சாலை
4) விசுவநாதர் ஆலயம்
5) யோக வேதாந்த ஆரண்யப் பல்கலைக்கழகம்
6) சிவானந்தர் கலா நிலையம்
7) சிவானந்தர் யோக நிலையம்
8) யோக வேதாந்த ஆரண்யப் பல்கலைக்கழகப் புத்தகாலயம் முதலிய பல்வேறு துறைகளில்,

மக்களின் தொண்டிலேயே கருத்துக்கொண்டு,
கழகம் செயலாற்றி வருகிறது.

இந்த ஸ்தாபனங்கள் அனைத்தும் மக்களின் பேருதவியால்
நடைபெற்று வருகின்றன!

உங்களின் அரிய ஒத்துழைப்பே
இவ்வுயரிய தொண்டை ஆக்குகிறது.

*உங்களது உயரிய ஒத்துழைப்பை வரவேற்கும்:*

**செயலாளர், தெய்வ நெறிக் கழகம்,**
**சிவானந்த நகர் போஸ்ட்.**
(U. P.)

ஓம்.

# ஆண்டவனுக்குப் பிடித்தமான சேவை!

யஜ்ஞத்தில் சிறந்த

# ஞான யஜ்ஞம்

அல்லது

# ஆத்மீய அறிவுப் பிரசாரம்

—※—

கடந்த கால் நூற்றாண்டாக ஸ்ரீ சுவாமி சிவானந்தர் இவ்வரிய சேவையில் ஈடுபட்டு வருகிறார்.

ஆண்டவனின் திருவருளையும் சுவாமிகளின் உயரிய நல்லாசிகளையும் பெறுவதற்கு இதுவே ஓர் அரிய சந்தர்ப்பம்.

சுவாமிகளின் அரிய ஆங்கில நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்பு வெளியீட்டுத் திருப்பணியில் உங்கள் பேருதவியைச் செய்ய முற்படுங்கள்!

**பல்லாயிரக் கணக்கானவர்கள் பயனடைய, உங்கள் பெயரால், உங்கள் நன்கொடையில் சுவாமிகளின் உயரிய நூல்களைத் தமிழில் வெளியிட விரைவிலேயே முன்வாருங்கள்.**

*உங்கள் உயரிய சேவையை எதிர்நோக்கும்:*

அத்தியாத்ம-ரத்ன

**கி. வானமாமலை,**

**26, சிவபுரம், திருநெல்வேலி ஜங்ஷன்.**

(S. Ry.)

# சுவாமி சிவானந்தரின் திருவருள் அற்புத அனுபவங்கள்.



என்னுடைய மாமனார் கடப்பை சச்சிதானந்த சுவாமிகளின் சீடர். அவர்கள் செய்யும் பிரார்த்தனையையும் அப்யசிக்கும் யோக முறைகளையும் நான் கூர்ந்து கவனித்து வந்தேன். எனக்கும் ஒரு குருநாதர் வேண்டும் என்ற எண்ணம் உண்டாகியது. 1947ம் ஆண்டு ஒரு நாள் இரவு என்னையறியாமல் எனக்கு ஒருவிதமான அழுகை உண்டானது. அழுதழுது கண்களெல்லாம் சிவந்துவிட்டன. அன்றிரவே ஒரு கனவும் கண்டேன். கனவில் கடப்பை சுவாமிகள் தோன்றி 'உன்னுடைய குரு நானல்ல அவர் நாளடைவிலேயே தோன்றுவார்!!' என்று கூறினார். குருவின் உருவம் மறுமுறையும் தோன்றி, "உன்னுடைய மாமனார் அறையிலுள்ள மேஜையைத்திறந்து பார். அதற்குள் உன்னை எதிர்நோக்கி நிற்பது எது என்பதைத் தெரிந்துகொள்!" என்று கூறியது. அடுத்த நாள் காலை அந்த மேஜையைத் திறந்து பார்த்தேன். அதில் 'Sivananda Diamond Jubilee Commemoration Volume", என்ற நூல் இருந்தது. அதை எடுத்து மிக்க மகிழ்ச்சியுடன் திறந்து பார்த்தேன். எனது சீரிய குருநாதர் **ஸ்ரீ சுவாமி சிவானந்த சரஸ்வதி மஹராஜ்** அவர்களின் ஜோதிமயமான முகம் அந்தப் புத்தகத்தை அலங்கரித்து நின்றது.

ஸ்ரீ குருபக்தி சிரோமணி
**தனம்**
தென் ஆப்பிரிக்கா.

இந்த அதிசய அனுபவத்திற்குப் பிறகு ஸ்ரீ சுவாமி சிவானந்தர் அவர்களுக்கு நான் கடிதம் எழுதினேன். இரண்டு நாள் கழித்து சிவானந்தரின் திவ்ய தரிசனம் எனக்குக் கிடைத்தது. காஷாய உடையில் அவரது ஜோதி மயமான உயரிய தோற்றத்தைக் கண்ட என் உள்ளம் ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டிருந்தது. அந்த அவசரத்தில் சுவாமிகள் படிப்பதற்காக எனக்கு ஒரு புத்தகத்தையும் அளித்ததாகத் தோன்றியது. என்ன ஆச்சரியம்! அடுத்த நாள் காலை தபால்காரன் அதே புத்தகத்தை, நான் தோற்றத்தில் கண்ட அதே நூலை, சுவாமி சிவானந்தர் அனுப்பியிருப்பதாகக் கொண்டுவந்து கொடுத்து நின்றான்!!

மற்றோர் நாள் மற்றோர் தோற்றம். அதிலும் சுவாமி சிவானந்தர் தோன்றினார். ரிஷிகேசத்திலுள்ள சுவாமிகளின் ஆச்சிரமத்தில் இருப்பது போலத் தோன்றிற்று. கரைபுரண்டு ஓடும் கங்கைநதி, உயரிய சிகரங்களைக் கொண்ட இமய பர்வதம், சாந்தமான சூழ்நிலையில் அமைந்துள்ள ஆச்சிரமம் — இவைகளையும் கண்டேன். சிவானந்தரின் திருப்பாதங்களில் விழுந்து, "இந்த ஜன்மத்தில் மட்டுமல்லாது, வரும் பிறவிகளிலும், பகவானே! நீங்கள் என்னுடைய குருவாகத் திகழவேண்டும்", என்று இறைஞ்சி நின்றேன். சுவாமிகள் எனக்கு மந்திர தீட்சையளித்து, "நானே உன்னுடைய ஒப்பற்ற குருநாதர். நான் எப்பொழுதும் உன்னுடனேயே இருந்து வருவேன்", என்று உறுதிமொழியும் கூறினார். அது முதல் சிவானந்தர் எப்பொழுதும் என்னுடனேயே இருந்து கொண்டு பெரும் அபாயங்களிலிருந்து என்னைக் காப்பாற்றி வருகிறார்;

லட்சியத்தை நோக்கிச் செல்வதில் எனக்குப் பல வகை களிலும் உதவி வருகிறார். அன்று முதல் எனது அன்றாட வாழ்க்கை அற்புத நிகழ்ச்சிகள் நிறைந்ததாகவே இருக்கின்றன. அத்தகைய அற்புத நிகழ்ச்சிகளுள் ஒரு சிலவற்றை மாத்திரம் இங்கே நான் குறிப்பிட விரும்புகிறேன்.

மறுமுறையும் ஆனந்த குடீரில் இருப்பதான ஒரு தோற்றம். இதற்கு முந்திய தோற்றத்தில் கண்ட மாதிரி அதே மரத்தடியில் உட்கார்ந்திருப்பதாகவே தோன்றியது. இந்தத் தடவை தென் ஆப்பிரிக்க மக்களுக்குரிய செய்தி யொன்றைச் சுவாமிகள் என்னிடம் அளித்தார். "Detach (பிரி) — Attach (சேர்)", என்ற எளிதான இரண்டு பதங்களே அச்செய்தி. மற்று யாரிடமிருந்தும் இந்தப் பதங்களை அதுவரையிலும் நான் கேட்டதேயில்லை. ஒரு வாரம் கழித்து ஆச்சிரமத்திலிருந்து எனக்கு ஒரு சிறு வெளியீடு வந்து சேர்ந்தது. அதைத் திறந்து பார்த்ததில் அதில் அதே இரண்டு பதங்கள்— "Detach—Attach"— இருக்கக் கண்டேன்!

ஒரு நாள் நான் உபவாசமிருந்தேன். அன்று மாலை சிறிது சோர்வாக இருந்ததால் சற்றே உறங்கி விழித்தேன். ஒரு கணப்பொழுதில் சுவாமி சிவானந்தர் கண்ணைப் பறிக்கும் நீலஜோதியால் சூழப்பெற்று என் முன் தோன்றி நின்றார். வீட்டின் கூரையே மறைந்துவிட்டது போலவும் அவ்வழியே சுவாமிகள் வீட்டினுள் வந்திறங்கியதுபோலவும் தோன்றிற்று. அவருடைய திருப்பாதங்களைப் பணிவுடன் வழிபட்டேன். சுவாமிகளும் என்னை ஆசிர்வதித்தருளினார். சந்தோஷத்தின் மேலீட்டால் நான் கூச்சலிட்டேன். இந்தக்

கூச்சலைக் கேட்ட என் தாயார் நானிருக்குமிடம் தேடி ஓடி வந்தாள். அவர்களும் அந்த நீல ஜோதியைக் கண்டார்கள்; ஆனால் சிவானந்தரின் உருவத்தைப் பார்க்க முடியவில்லை. அந்தத் தோற்றம் மிகவும் உண்மையானதென்பதை நான் உணர்ந்தேன். அது என் கற்பனையல்ல என்பதையும் தெரிந்துகொண்டேன்.

சிவானந்தரின் விபூதிப்பிரசாதம் மாதம் தோறும் அவர்களிடமிருந்து எனக்கு வரத்தொடங்கியது. அதை முழு நம்பிக்கையுடனும் பக்தியுடனும் போற்றி வந்தேன். இறக்கும் தறுவாயிலுள்ள எந்த ஒரு ஜந்துவினுடையவும் வாயில் அத்திருநீற்றில் ஒரு துளியை போட்டு வந்தேன். அப்படிச் செய்வதால் அந்த ஜந்துவின் அடுத்த பிறவி நல்லதாக அமையும் என்பது என் நம்பிக்கை.

மாலை நேரத்தில் வீட்டில் தனியாக இருக்க வேண்டுமே என்பதற்காக ஒரு நாயை மிகவும் அன்பாக வளர்த்து வந்தேன். அந்த நாய் ஒரு நாள் இறந்து கிடந்தது. அதன் அருகே உட்கார்ந்துகொண்டு மகாமிருத்யுஞ்சய மந்திரத்தை ஜபம் செய்தேன். நாயை ஒரு துணியில் பொதிந்து ஈக்களும் ஏனைய பூச்சிகளும் அதன் சரீரத்திலும் நுரை கசிந்தோடும் அதன் வாயிலும் உட்கார்ந்து உபத்திரவம் செய்யாதவாறு பாதுகாக்க முற்பட்டேன். வீட்டினுள் சென்று சிறிது பாலைக் கொண்டுவந்து அதில் சுவாமிகளின் விபூதிப் பிரசாதத்தையும் சேர்த்து, சிவானந்தரின் திரு நாமத்தை மும்முறை உச்சரித்துக்கொண்டே அதன் வாயில் விடுத்தேன். நான் குருநாதரின் அருளுக்காக அழுது கண்ணீர் வடித்தேன். "சுவாமிஜீ! உங்களிடம் திவ்யசக்தி நிறைந்து நிற்கிறது. உங்களால் எதையும் செய்ய இயலும்.

நீங்கள் இஷ்டப்பட்டால் இந்நாயையும் உயிர்ப்பிக்கமுடியும்" என்று கூறி மகாமிருத்புஞ்சய மந்திரத்தைப் பலதடவை ஜபம் செய்தேன். பிறகு யாருக்கோ 'போன்' செய்வதற்காக அகத்தே 'போன்' இருக்கும் அறையினுள் சென்றேன். 'போன்' செய்துகொண்டிருக்கும் பொழுது யாரோ என் புடவையில் உரசுவதுபோல் தோன்றியது. திரும்பிப் பார்த்தேன். நான் கண்டதென்ன? கனவா? அல்லது நனவா? என்ன ஆச்சரியம்! நான் பார்த்தது யார்தெரியுமா? எனது அருமை நாய்தான்!! நான் கட்டிவிட்ட அதே மஞ்சள் துணியுடன் அருகில் நின்று கொண்டிருந்தது அந்த நாய். அது உயிர்பெற்று உன்மேஷமாக நின்றது. சிவானந்தரின் திருப்பெயரும் திருவருளும் அந்த நாயை யமபுரியிலிருந்து திரும்பவும் பூவுலகத்திற்குப் பிடித்திழுத்து வந்து சுவாமிகளின் தெய்வீக அருளின் பெருமையை அவனியி லுள்ளோர் அனைவரும் அறியும் முறையில் உணர்த்தி நின்றன. என் குருதேவரால் செய்ய முடியாததும் உண்டோ? அடுத்த நாள் என் வீட்டிலும் டர்பன் (தென் ஆப்பிரிக்காவின் ஒரு நகரம்) தெய்வ நெறிக் கழகத் திலும் சிவானந்தருக்கு வெகு விமரிசையாக வழிபாடுகள் நடைபெற்றன.

தென் ஆப்பிரிக்க இனத்தவர்களிடமிருந்து எங்கட்கு பற்பல இன்னல்கள் ஏற்பட்டன. அவர்களின் கத்திகளி லிருந்தும் துப்பாக்கிகளிலிருந்தும் நான் பலதடவைகளிலும் உயிர் தப்பியிருக்கிறேன். எனது வாழ்க்கையில் நடைபெற்ற நிகழ்ச்சிகளைக் குறிப்பதென்றால் ஒரு பெரும் புத்தகமே யாகிவிடும். ஒவ்வொரு தடவையும் நான் ஆபத்துக்குள் ளாகியபோது சிவானந்தரே என்னை அருகிலிருந்து

விடுவித்துக் காப்பாற்றியிருக்கிறார் என்று சொல்வதே சாலப்பொருந்தும்.

என் கையில் மிக மோசமான வகையிலுள்ள பாலுண்ணிகள் நிறையத் தோன்றத் தொடங்கின. இதை எப்படிப் போக்குவதென்று எண்ணி நிற்கும் நேரம் சுவாமிஜியின் அற்புதச் செயலை உணர்ந்த ஒரு சிலர் சுவாமிகளிடம் பிரார்த்தனை செய்வதால் அதுபோய்விடும் என்றனர். கடவுளின் அவதாரமாக விளங்கும் என் குருநாதரிடம் எனக்காக, அதிலும் என் சரீர நலனுக்காக எதுவும் கேட்பது அறிவீனம் என்றே எண்ணினேன்; சுவாமிகளிடம் அவ்வளவு தூரம் சரணாகதி அடைந்துள்ளேன். சுவாமிகளிடம் நான் சதா ஆத்மானுபூதியையே வேண்டி வந்தேன். ஆதலால் எனது பிரார்த்தனை வேளையில், "நீங்கள் விரும்பினால் கண்மூடித் திறப்பதற்குள் என் உள்ளங்கையில் தோன்றியுள்ள பாலுண்ணிகளும் மறைந்துவிடும். இந்தப் பாலுண்ணிகள் காரணமாக என்னால் எந்த ஜோலியும் சரிவரச் செய்ய முடியவில்லை", என்று மட்டும் கூறினேன். இந்த முறை எனது பிரார்த்தனையும் அவ்வளவு ஆழ்ந்ததாக இல்லை. இருப்பினும் அடுத்த நாள் காலை கையிலிருந்த பாலுண்ணிகள் ஒன்றுகூட இல்லாமல் மறைந்துவிட்டன! என்னே அதிசயம்!! இதே போல் என் காலில் தோன்றிய பித்த வெடிப்பும் ஆச்சரியப்படுமளவுக்குக் குணமாகிவிட்டது!!

இனியொரு நாள் இன்னொரு அதிசய நிகழ்ச்சி ஏற்பட்டது. ஒருவன் என்னை விஷம் வைத்துக் கொல்ல கருதினான். ஒரு நாள் வழக்கம்போல் மொட்டைமாடியில் சூரிய நமஸ்காரம் செய்து கொண்டிருந்தேன். சூரியனி

லிருந்து ஒரு திவ்யஉரு தோன்றி, "உடனே அடுக்களையை நோக்கி விரைந்து செல்!", என்று கட்டளையிட்டது. நான் முதலில் அதைப் பொருட்படுத்தவில்லை. ஆனால் மறு முறையும் அதே எச்சரிக்கை வெளிவந்தது. உடனே ஓடோடி அடுக்களைக்குள் சென்றேன். அங்கே அந்த நபர் எதையோ எனக்குள்ள பாலிலே சேர்ப்பதை — அது விஷமாகத் தானிருக்க வேண்டும் — கண்டேன். நான் அந்தப் பாலைக் குடிக்காது சென்றுவிட்டேன். மரணத்தி லிருந்து நான் காப்பாற்றப்பட்டேன்.

என் அண்டை வீட்டில் ஒரு கிறிஸ்தவ மாது வசித்து வந்தாள். அவள் மிகவும் நல்லவள். வேனல்கட்டியினால் அவள் அவதிப்பட்டுக் கொண்டிருந்தாள். ஆப்பரேஷனைத் தவிர வேறுவழி கிடையாது என டாக்டர்கள் தெரிவித்தனர். அதைச் செய்து கொள்ள அந்த மாது விரும்பவில்லை. நான்அவளிடம் சென்றேன். மகாமிருத்யுஞ்ஜயமந்திரத்தைப் பன்முறை ஜபம்செய்து, சுவாமிஜியின் விபூதிப்பிரசாதத்தை அவளுடைய சரீரத்தில் சிரங்கிருந்த இடத்தில் தடவினேன். என்ன ஆச்சரியம்! உடனேயே அந்தக் கட்டி உடைந்து விட்டது! அந்த மாது ஆச்சரியம் மிகுந்தவளாய் ஆனந்தக் கண்ணீர் வடித்தாள். "எத்தனையோ பேர் சிகிச்சை செய்தனர். என்னுடைய மதத்திலும், ஏசுநாதரிடமும் உள்ள நம்பிக்கைகூட இதைக் குணப்படுத்தவில்லையே!", என்றாள் அந்த அம்மையார். "ஆனால், எனது குருநாதர் சிவானந்தரும் ஏசுநாதர்தான்", என்றேன் நான்!!

• •

ஒரு தடவை மரணத்தின் பிடிப்பிலே துடித்துக் கொண்டிருந்தபொழுது சிவானந்தர்தான் என்னைக் காப்பாற்றினார். கத்திகள், துப்பாக்கிகளுடன் மூவர்

எங்கள் வீட்டினுள் நுழைந்தனர். என்னைச் சுவரோடு துப்பாக்கித் தடியால் அமுக்கி நிறுத்தி, நான் ஓலமிட்டால் சுட்டுக் கொன்றுவிடுவதாகப் பயமுறுத்தினர். ஒருவன் என் அருகே வந்து என்னிடமிருந்த எல்லா விலையுயர்ந்த பொருள்களையும் பணத்தையும் உடனேயே அவனிடம் ஒப்படைத்துவிடக் கோரினான்; ஓசையிட்டால் சுட்டுவிடுவதாகவும் எச்சரித்தான். நான் நகைகளைத் தேட அடுத்த அறைக்குச் சென்றதும் என்னை அவர்கள் கூர்ந்து கவனித்தவாறே இருந்தனர். கடவுளின் கிருபையாலும் குருநாதர் அருளாலும் கத்தியுடன் நின்ற இரண்டு கொள்ளைக்காரர்களையும், துப்பாக்கியுடன் நின்ற மற்றவனையும் தாண்டிச் சென்று உதவிக்காகக் கூச்சலிட்டேன். வீட்டிலுள்ள அத்தனைபேரும் ஒவ்வொருவராக உதவிக்குக் கூக்குரலிட்டனர். நாங்கள் ஏன் கொல்லப்படவில்லை என்பது எங்களுக்கே ஒரு புதிராக விளங்கியது! கொள்ளைக் காரர் துப்பாக்கியை உபயோகிக்காது, ஒரு பொருளையும் தொடாது, வீட்டிலிருந்து ஓடிவிட்டனர்!!

அவர்கள் பலகாலம் தலைமறைவாகவே இருந்து வந்தனர். போலீசாராலும் அவர்களைக் கண்டுபிடிக்க முடியவில்லை. ஒரு நாள் எனது கணவனுர் ரோடு வழியாகச் செல்லும் பொழுது எங்களைக் கவர்ந்து கொல்ல விரும்பிய அந்த கொள்ளைக்காரனைக் கண்டார். மற்றோர் நண்பரின் உதவியுடன் அவனைக் கைதுசெய்ய வழிசெய்தார்.

எனது சகோதரியின் மகள் திருமணம் விஷயமாக சகோதரியின் குடும்பத்துக்கும் மற்றொரு குடும்பத்துக்கு மிடையே மனஸ்தாபம் ஏற்பட்டது. எதிர்தரப்பார் எனது சகோதரியின் மகளைத் தூக்கிச் செல்லத் திட்டமிட்டனர்.

அவர்கள் ஒருசில ஆப்பிரிக்கருடன் வந்து அந்தப் பெண்ணைத் தூக்கிச் சென்றனர். எனது சகோதரியை பிடித்துக் கட்டி அடித்துக்கொல்ல முற்பட்டனர். இதற்கிடையே அவளுடைய கடைசிக் குழந்தை ஓடோடியும் வந்து என்னிடம் அவளது கவலைக்கிடமான நிலையைத் தெரிவித்தான். நான் உடனேயே புறத்தே சென்றேன். என் சகோதரி வீட்டை நோக்கி ஒரு லாறி செல்வதைக் கண்டேன். லாறி டிரைவரிடம் என்னையும் அதுவரை அழைத்துச் செல்ல வேண்டினேன். அவனும் ஒப்புக் கொண்டான். சகோதரி வீட்டருகே சென்றதும் அவளை மற்றவர்கள் துன்புறுத்துவதைக் கண்டு மனம் நொந்தேன். நான் அவர்களின் நடுவே ஓடிச் சென்று, சிவானந்தரின் திருநாமத்தை உச்சரித்துக்கொண்டே, "ஒரு விதவையை அடிப்பதற்கு உங்களுக்கு வெட்கமாக இருக்கவில்லையா? அவளைத் துன்புறுத்தாது விட்டுச் செல்லுங்கள்", என்றேன். ஒரு சில விநாடிகளில் அத்தனை பேர்களும் மறைந்து விட்டனர்! பிறகு நான் தெரிந்துகொண்டது தான் என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. என்னைச் சுற்றிப் பலம் பொருந்திய பல நபர்கள் சேர்ந்த ஒரு படை நிற்பதாக அவர்கள் புரிந்துகொண்டு இருந்த இடம் தெரியாது ஓடி விட்டனர் என்பதைத் தெரிந்துகொண்டேன்! ஆனால் நான் மட்டுமே சென்றேன் என்பதுதான் உண்மை!! அவர்கள் பயந்து ஓடிப்போயினர். என்னைக் காப்பாற்றியவர் சிவானந்தரே! சுவாமிகள் ஒரு பெரும் படையின் தோற்றத்தைக் கொண்டு காட்சியளித்தார் போலும்!!

லைசென்சின்றி ரிவால்வார் (துப்பாக்கி) வைத்திருந்த காரணத்துக்காக என் கணவனர் குற்றம் சாட்டப்பட்டார்.

அப்பொழுதும் சிவானந்தர் தான் எங்கள் உதவிக்கு வந்து சேர்ந்தார். அந்தத் துப்பாக்கி தொன்று தொட்டே எங்கள் வீட்டிலிருந்து வரும் பூர்வீக சொத்து. நாங்கள் அதை உபயோகிப்பதே கிடையாது. ஆனால் போலீசார் எப்படியோ குற்றம் சாட்டினர்; அதற்காகச் சிறைச்சாலைக்குப்போக வேண்டிய நிலைமையும் வந்துவிட்டது. ஒரு நாள் நான் ஒரு கனவு கண்டேன். அதில் சிவானந்தர் தோன்றி, "நாளை உனது பழங்காலப் பள்ளித் தோழி ஒருத்தி வந்து உனக்கு உதவி செய்வாள்; வழக்கும் தள்ளப்பட்டுவிடும்", என்று தெரிவித்தார். அடுத்த நாள் ஒரு சிநேகிதி வந்து சேர்ந்தாள். அவள் உதவியால் வழக்கு பதினைந்து நிமிட நடவடிக்கைக்குப் பிறகு தள்ளப்பட்டது!

இந்தப் பெரும் அற்புதங்கள் மட்டுமல்ல; என் வாழ்க்கையே அன்றாட அதிசயங்கள் பல நிறைந்ததாக இருக்கிறது. சிவானந்தர் என் வாழ்க்கையின் பொறுப்பை ஏற்றுக்கொண்ட பின்னர் எனக்கு என்னைப்பற்றிக் கவலைப் படவேண்டிய அவசியமே ஏற்படவில்லை. ஒரு தடவை கொதிக்கும் நெய்யில் கையை வைத்துவிட்டேன்; கைவெந்து விட்டது. சிவானந்தர் அனுப்பிய புனித விபூதிப் பிரசாதத்தைத் தடவினேன்; கொப்பளங்கள் உடனே ஆறி கையும் குணமாகிவிட்டது.

எனக்கு மட்டுமல்ல, சிவானந்தரின் பிரசாதத்தை நான் யாருக்கெல்லாம் கொடுத்தேனோ, அவரது புனித நாமத்தை எவருடைய செவிகளில் கூறினேனோ, அவர்கள் அனைவருக்கும் இந்த அதிசயப் பாதுகாப்புக் கிடைத்தது. நாய்கள் மோட்டார் கார்களால் நசுக்குண்டன. மனிதர் பலர் பெரும்

அபாயங்களில் அகப்பட்டனர். அவர்களனைவரையும் சிவானந்தரின் திருநாமம் காப்பாற்றியது. இவற்றையெல்லாம்விட அதிசயிக்கத்தக்கதுதான் நான் மூன்று வருடங்களுக்கு முன்னால் சுவாமிஜியின் விசுவரூப தரிசனத்தைப் பார்வையிட்டது. அவருடைய வாயினுள் ஈரேழு பதினான்கு உலகத்தையும் நான் கண்டேன். அந்தத் தோற்றம் எனக்குச் சொல்ல முடியாத ஆனந்தத்தையும் உயரிய சாந்தியையும் அளித்தது.

எனது குறைந்த பக்திக்கே சிவானந்தர் இவ்வளவு தூரம் உதவி செய்வார் என்றால் அவர்களிடம் பூர்ணமாகச் சரணாகதி அடைந்தவர்களும், அவரைக் கடவுளின் அவதாரம் எனக்கொண்டு அவர்களின் சேவைக்காகத் தன்னை ஜன்ம ஜன்மாந்தரத்திற்கும் ஆத்ம சமர்ப்பணம் செய்தவர்களும் எத்தகைய பேரருளைப் பெற்றுப் பெருமையுடன் விளங்குவார்கள் என்பதை எண்ணி எண்ணி வியப்புறுவோமாக.

சிவானந்தர் எனக்கு உயிரைக் கொடுத்தார். அவரே எனது கடவுள். அவரே எனக்கு சர்வமும். அவரது புகழை நான் எப்படிப்பாடுவேன்?

உலகத்தைக் காகித மாக்கிக்
கடலை ஓர் மைக்கூடாக்கி
மரங்களைப் பேனாவாக்கிக்
காலத்தை எழுத்தாள னாக்கினாலும்
சிவானந்தரின் சீரிய பெருமையை,
அவர் அருளால் நிகழும் அற்புதங்களை,
அளவிட்டுக் கூறுதல் ஆகாத காரியமே!

*அவர் தான் ஏசுநாதர்; அவர்தான் புத்தபிரான்; அவரே ஸ்ரீராமர்; அவரே ஸ்ரீ கிருஷ்ணர்; அவர்தான் சிவன்; அவரே தேவியுமாகும். அவரிடம் எல்லா தெய்வங்களும் தேவியும் தங்களது நிறைவைப் பெற்றனர். அவரது பாததூளி நம்மைப் பரிசுத்தப் படுத்தி, நம் வாழ்க்கையைப் பெருமையுடையதாக்கி நம் ஆத்மாவை விழிப்படையச் செய்வதாக. அவர்கள் என்றென்றும் வாழ்ந்து நம்மனை வருக்கும் நல்வழி காட்டுவார்களாக!*



# பிராவ் வாலின்ஸ்கியின்
## அற்புத அனுபவங்கள்

பிராவ் வாலின்ஸ்கி என்ற ஜர்மன் மாது கத்தோலிக்க கிறிஸ்தவர். வியாபாரத்தில் கூர்ந்த மதிநுட்பமுடையவர். ஒரு புத்தகப் பிரசுராலயத்தின் தலைவராகப் பணியாற்றி வந்தார். அவரது கணவனுர் ஒரு போலீஸ் உத்தியோகஸ்தர் அவர்களுக்கு இரண்டு குமாரர்கள். சுவாமிஜியை தரிசனம் செய்ய வேண்டுமென்று பிராவ் வாலின்ஸ்கி இந்தியா வந்து சேர்ந்ததும், அவரது குமாரர்களில் ஒருவன் தன்னையும் சன்யாச சீடனுக ஒப்புக்கொள்ளும்படி சிவானந்தருக்குக் கடிதம் எழுதினுன்! அவர்களின் இளைய குமாரன் ஆத்மீக விழிப்புடையவன் என்றும் சுவாமிஜியிடமிருந்து வந்த எல்லாச் செய்திகளையும் அவன் நன்கு தெரிந்திருந்தான் என்பதாகவும் அவன் தாயார் தெரிவித்தாள்.

கடந்த சில வருடங்களில் இந்தக் குடும்பம் அன்றுட வாழ்வில் குருதேவரால் அற்புதமான முறையில் நல்வழி நடத்தப்பெறுகிறது. "ஒவ்வொரு நாள் காலையும் சிவானந்தர் என்னை எழுப்புகிறுர். எங்கள் வாழ்க்கையில் தோன்றிய பல கஷ்டங்களையும் அவர் தீர்த்து வைத்திருக்கிறுர். வருங்காலத்திலும் அவர் என் மூலகாக வேலை செய்து மனித சமுதாயத்துக்கு சேவை செய்வார் என்பது உறுதி", என்று அவ்வம்மையார் தெரிவித்தார்.

முக்கியமான விஷயம் என்னவென்றுல் அந்த அநுசய வாணியும், அதை உறுதிப்படுக்தும் முறையிலமையும் குரு தேவரின் கடிதங்களும், அவரைப் பணிசெய்யக் கோரியது.

"வீட்டில் மனைவியாகவும், தாயாகவும் பணிசெய்; அலுவலகத்தில் வேலையுடன் உன் கடமையைச் செய்; முடிந்த அளவில் மனித சமுதாயத்திற்குத் தொண்டு செய்", என்பதே இடைவிடாத அந்தக் கட்டளை. பிராவ் வாலின்ஸ்கியும் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து, வீட்டிலும் அலுவலகத்திலும் நாள் பூராவும் வேலை செய்து வந்ததோடு நில்லாமல் இரவு வெகுநேரம் வரையிலும் குருதேவரைப்பற்றியும் குருதேவரின் ஆங்கிலநூல்களின் ஜெர்மன்மொழிபெயர்ப்பை ஆக்குவதிலும் மிகுந்த பணியாற்றி வரலானார்.

இந்த வருடம் ஆகஸ்டில் அவள் கண்ட தோற்றத்தில் குருதேவர், "நீ ஓர் நல்ல சிஷ்யையாக இருப்பாயோ?", என்று கேட்டார். "ஆம்!" என்று அவள் பதிலளித்தாள். பிறகு அதே திவ்ய வாணி அவளை இந்தியா செல்லக் கோரியது. ஆகஸ்ட் ஏழாம் தேதி மறுமுறையும் அத் தோற்றத்தை அவள் கண்டாள். செப்டம்பர் 19ம் தேதியில் குருதேவரிடமிருந்து அவளுக்கு ஓர் கடிதம் வந்தது. ஆனால் அதிலடக்கம் அவளுக்கு முன்னமேயே தோற்றத்தில் தெரிந்ததாகவே இருந்தது. தான் கண்ட தோற்றமும், பெற்ற செய்திகளும் உண்மையானவைகளே என்பதை அவள் உணர்ந்தாள். அதே போல் தியானம் செய்யும் நேரங்களிலும் உண்மையாகவே மனித சமுதாயம் ஒரே குடும்பம் என்பதாகவும், உலகனைத்தும் ஒரே பரமாத்மாவில் கோர்க்கப்பட்டிருப்பதாகவும், அந்தந்த அறைகளிலுள்ளவர் பேசுவதைப்போல் கண்டத்துக்கப்பாலுள்ள மற்றக் கண்டத்திலிருந்தும் ஆத்மீய விழிப்புடையவர்கள் பேச முடியும் என்பதாகவும் உள்ள அந்தரங்க உணர்ச்சி அவளது உள்ளத்தில் எழத்தொடங்கியது.

அங்ஙனம் அவர் இந்தியா வர ஆயத்தமானபொழுது, வழிச் செலவுக்கான பணம், கணவனின் எதிர்ப்பு, என்ற இரண்டு பிரச்சினைகளும் எழுந்தன. "சிவானந்தர் எல்லாம் செவ்வனே நடைபெறும் என்று சொன்னார். சிறிது நாட்களில் ஒரு நல்ல நண்பர் தோன்றிப் பிரயாணத்திற்கான செலவைத் தாமே ஏற்றுக்கொள்வதாகத் தெரிவித்தார்; என்னுடைய கணவனாரும் தானாகவே முன்வந்து எனது ஆத்மீய எண்ணம் சித்திபெறத் தன்னால் ஆனதைச் செய்வதாக ஒப்புக்கொண்டார்", என்று கூறினார் வாலின்ஸ்கி. இப்படி அவர் குருநாதரின் திருவடிகளில் வந்து சேர்ந்தார்!



## ஜினீவா தெய்வ நெறிக் கழகத்தின் செயலாளர்

# திருமதி சிவானந்த மார்கரீதா

(திருமதி ஜி. எம். ஷ்னீடர், ஆசிரியை, "சின்திசே யூனிவர்செல்", ஜினீவா, சுவித்ஸர்லான்ட்)

## அவர்களின் அற்புத அனுபவங்கள்.

*"கிறிஸ்தமஸ் தினமாகிய இன்று என்னைப்போல் வேறு யாரும் ஆசீர்வதிக்கப்படவில்லை!...........*

*தியோஸ் சர்ச்சில் நடைபெற்ற நடுநிசிப் பிரார்த்தனைக் கூட்டத்தில் ஆல்டாரின் மேல் குரிசின் முன்பாகத் தாங்கள் உண்மையாகவே உட்கார்ந்திருப்பதை நான் கண்டேன்; இது மருட்சியல்ல, உண்மையே! தாங்கள் அன்பு, தேஜஸ், தூய்மையுடன் விளங்கினீர்கள். உடனேயே தங்களிடம் வந்து சரணாகதியடையவேண்டும் என்ற எண்ணம் தோன்றியது.*

*இப்பொழுது உடல்நலமின்றிப் படுக்கையில் படுத்தபடியே எழுதுகிறேன். நேற்று ரொம்பவும் அதிகமாக இருந்தது; ஆனால் இன்று குணமடைந்ததாக எனக்குத் தெரிகிறது. இது ஓர் அற்புதமல்லவா? ஒரு மருந்தையும் நான் வேண்டுவதில்லை. நீங்களே எனது டாக்டர்! தங்கள் கடிதங்களும் பிரசாதங்களுமே என்னுடைய மருந்து. தங்கள் போட்டோக்களே தலையில் வைக்கும் குணமை பொருந்திய தலைவலி மருந்தாகும். தூக்கத்திலும் இடையூறுகளிலும் தங்களையே எண்ணி மகிழ்ச்சியுறுகிறேன்............"*



# சிவானந்தாச்சிரமத்தில் ப்ராவ் வாலின்ஸ்கி.

ரிஷிகேசம், 16—12—'53.

51 வயதான ஜர்மன் மாது ப்ராவ் சார்லட் வாலின்ஸ்கி ஹெல்லர் என்பவர் அதிசயமான ஒருவரின் கட்டளையால் உந்தப்பெற்று தான் வந்துசேரவேண்டிய இடமாகிய சிவானந்தாச்சிரமத்தை வந்தடைந்தார். தெய்வ நெறிக் கழகத்தின் ஸ்தாபகரான ஸ்ரீ சுவாமி சிவானந்தரைக் கண்டதும் அவர் ஆனந்தக் கூத்தாடினார். அன்று நூரென் பர்க்கில் தான் கேட்ட திவ்ய வாணி சிவானந்தருடையதே என்பதைத் தெரிந்து கொண்டார்.

ஆனந்தம் மேலிட்டவராய் சுவாமிகளிடம், "சிவா! தங்கள் திருப்பெயர் ஜர்மானிய தேசமெங்கிலும் ஒலித்துக் கொண்டிருக்கிறது. இந்த உலகத்தையே நம்பி நிற்கும் மக்களுக்குத் தங்களது போதனைகள் ஆத்மீக விழிப்பையும், சாந்தியையும், நம்பிக்கையையும், ஆறுதலையும் அளிக்கிறது", என்றார். தன்னையொரு சிஷ்யையாக ஒப்புக்கொள்ளச் சுவாமிகளிடம் அவர் வேண்டினார்; சுவாமிகளிடமிருந்து தான் அதிகமதிகம் படிக்க முடியும் என்றும் அந்த மாது கூறினார். குறைந்தது ஆறுமாத காலமாவது ஆச்சிரமத்தில் தங்கி சுவாமிகளின் முன்னிலையில் யோகத்தைத் தெரிந்து பழகத் தீர்மானித்துள்ளார்.

அந்த ஜர்மன் மாது ஒரு எழுத்தாளர்; பிரசுரகர்த்தர்; அவர்களுக்கு முறையே 30, 12 வயதுடைய இரண்டு குமாரர்கள் இருக்கின்றனர்.

"ஹிந்துஸ்தான் டைம்ஸ்", புதுடில்லி.

---

தங்களுடன் தொடர்புடைய இரண்டு சிறிய சுவப்பனங்களைக் குறித்துத் தெரிவிக்க விரும்புகிறேன். எனது முதல் கனவில் தாங்கள் பிரகாசமான ஒருஅறையில் கோட்டணிந்து நிற்பதைக் கண்டேன். ஒரு இளம் இந்தியருக்கு தங்கள் இடது கையை அசைத்து ஏதோ செய்ய உத்தரவிட்டுக் கொண்டிருந்தீர்கள். இத்தோற்றம் ஒரு சில வினாடிகளே நின்றன; ஆனால் மிகவும் தெளிவாகத் தெரிந்தது. கண் விழித்துக் கொண்டதும் நான் தங்களைக் கண்டது கனவில் எனத் தெரிந்தது. ஆம்! அதே சமயத்தில்தான் தாங்கள் எனக்கு வேண்டிய புத்தகங்களைத் தெரிந்தெடுத்துக் கொண்டிருந்திருக்க வேண்டும்.

ஆகஸ்ட் 15ல், திரும்பவும் ஒரு சிறு காட்சி. விமானத் தபாலில் தங்களிடமிருந்து ஒரு பார்சலைப் பெற்றுநின்றேன். அதை உடைத்து உற்று நோக்கினேன். புனிதமான இமய மலையின் உயரிய இடங்களில் உண்டாகும் ஒருவகை அழகான மஞ்சள் நிறப் பூக்களின் ஒரு குவியல் இருப்பதைக் கண்டேன். என்னருகிலிருந்த உறவினர்களை அழைத்து, “பாருங்கள்! சிவானந்தரிடமிருந்து எனக்கு நிறையப் பூக்கள் வந்துள்ளன! இமயத்திலுள்ள ‘அரிகுலம்’ என்ற பூ!”, என்றேன். எனது உள்ளம் சந்தோஷத்தினால் நிறைந்து நின்றது. அந்தப் பூக்களை, அப்பொழுது பறித்தது போல் தோன்றிய அந்தப் பூக்களை என் கையினால் அள்ளிக்கொண்டிருந்தேன். இந்த அழகான காட்சியை அனுபவித்த பின் கண்விழித்தது, உறக்கமும் கலைந்தது!

ஹில்ட்கார்ட் மிஷ்லர்,
மூனிச், ஜெர்மனி.

---

வீட்டை விட்டு வெளியே வந்து சஞ்சரிக்கும் சாதுவாக காசியில் தங்கலானேன். தேவி அன்னபூர்ணாவின் திருக் கோவிலிலேயே எனது காலத்தைப் போக்கி வந்தேன். ஒரு நாள் எனக்கு ஒரு தோற்றம் தெரிந்தது. அதில் உயரமும், திடகாத்திரமுமான சுவாமி ஒருவர் அவரது மூன்று சீடர்களுடன் தோன்றி, "என்னிடம் வாருங்கள்!", என்று கூறி மறைந்துவிட்டார். பிறகு பத்திரிநாத் செல்லும் வழியில் சிவானந்தாச்சிரமத்திற்குள் நுழைந்தேன். சுவாமிஜியைப் பார்த்ததும் எனக்கு ஆச்சரியம் மேலிட்டது. நான் தோற்றத்தில் கண்ட அந்த நபர் நம் சுவாமிஜியேதான் என்பதைத் தெரிந்து புளகாங்கிதமடைந்தேன். அலுவலகத்தினுள் சென்ற பிறகு இனியொரு தோற்றம் தோன்றியது. அதில் சுவாமி சிவானந்தர் பேருருக் கொண்டு அந்த இடமனைத்தையும் நிரப்பி நின்றதுடன், அதற்கப்பாலும் பரந்து தோன்றினார்! சுவாமிஜி என்னை லேசாகப் பார்த்து, "இதுவே உங்களுடைய பத்திரிநாத்; இங்கேயே வாசம் செய்யுங்கள்", என்று கூறினார். நான் அப்படியே கட்டளைக்குக் கீழ்ப்படிந்தேன்.

**சுவாமி துரியானந்தர்.**

---

## உயிர் மீண்ட விந்தை

மிருந்த சக்திவாய்ந்த மின்சார அதிர்ச்சியால் தாக்கப் பட்டேன். அதனால் உடல்நிலை கெட்டுவிட்டது. தலையில் ஒரு பெரிய புண்ணும் தோன்றியது. அதிலிருந்து சீழ் பிரவாகம் பெருக்கெடுத்து ஓடியது. இத்தகைய மோசமான நிலைமையில் என்னைக் காப்பாற்றி அருளும்படி சுவாமி சிவானந்தருக்குக் கடிதம் எழுதினேன். ஒரு வாரத்திற்குள் சுவாமிஜியிடமிருந்து பிரசாதத்துடன் பதில் வந்து சேர்ந்தது. சுவாமிஜியின் பதில் என்று எழுதப்பட்டதோ அன்று முதல் தலையிலுள்ள புண் ஆறவும் தொடங்கியது. இந்நிகழ்ச்சி 1954ல் நடைபெற்றது.

வாழ்க்கையில் வெறுப்புக்கொண்டு தற்கொலை செய்து விடலாமா என்று துணிந்து நிற்கும் நேரம் அங்ஙனம் எண்ணுவது மடமை என்று தெரிவிக்கும் சுவாமிஜியின் கடிதம் கையில் கிடைத்தது. கண்களும் திறந்தன. ஆடத் பார்த்தவன் என்ற சொல்லையும் சுவாமிகள் பெற்று நின்றார்.

மிகவும் நோய்வாய்ப்பட்டு ஆஸ்பத்திரியில் உயிருக்கு மன்றாடி நின்ற நேரம். “இறைவன் உனக்கு நீண்ட ஆயுளும், நிறைந்த அருளும் அளித்துக் காப்பானாக”, என்று கூறும் சுவாமிஜியின் கடிதம் கிடைத்தது; பிணியும் அகன்றது. பாசம் சுற்றி வந்த எமன், நலம் சுற்றி வரும் சிவனுக்குமுன் என்ன செய்ய முடியும்? வைத்தியர்கள் திகைத்து நின்றனர்!

இன்னும் இதுபோன்ற அற்புத நிகழ்ச்சிகள் பல சிவானந்தரின் அருளால் நிகழ்ந்துள்ளன.

**சிவானந்த தாசன்**, நெல்லை.

# ‘இமயத்தின் ஜோதி’

## ஸ்ரீ சுவாமி சிவானந்த சரஸ்வதி
## அவர்களின்
## அரிய ஆங்கிலச் சிறு நூல்கள்!



அத்தியாத்ம-ரத்ன

**ஸ்ரீ கி. வானமாமலையின் அரிய தமிழாக்கம்..**



**வெளி வந்தவை**

| | | |
|---|---|---|
| ஆனந்த ரகசியம் | .... | 0—4—0 |
| அன்பின் ஆக்கம் | ... | 0-4—0 |
| அருள் வழி | ... | 0—4—0 |



*விரைவிலே வெளிவர,*
*அன்பர்களின் ஆதரவை*
*எதிர் நோக்கி நிற்பவை:*

இன்பம் எங்கே? — பிரம்மசரியத்தின் பெருமை!
சமயத்தின் சாரம்! — தீய பழக்கங்கள் தீரவழி!
மறதியும் மருந்தும்! — வேதாந்தமும் விடுதலையும்!
ஸ்திரீ தர்மம்! — மனிதனும் மதமும்!

(இன்னும் பல)



*அன்பர்களின் ஆதரவை நாடும்:*

**கி. வானமாமலை,**

**26, சிவபுரம், திருநெல்வேலி ஜங்ஷன்.**

# அஞ்சலி



நாடு சுதந்திரமடைந்து விட்டது. ஆனால் அதைவிடச் சிறந்ததும் கஷ்டமானதுமான பல பிரச்சனைகள் தேசத்தை எதிர் நோக்கி நிற்கின்றன. இப்பிரச்சனைகளைத் தெய்வீக சக்தியால் தான் தீர்த்து வைக்க முடியும். தெய்வீக சக்தி நம்மிடம் தோன்றி, நம் மூலமாகச் செயல்படவேண்டும். ரிஷீகேசம் போன்ற இடத்தில் தான் இது உண்டாகுதல் முடியும். இந்த நோக்கத்தை வெற்றிபெறச் செய்ய சுவாமிகள் நம் தாய் நாட்டினதும் அகில உலகத்தினதும் நலனுக்கு வேண்டித் தமது திருப்பணியைத் தொடர்ந்து செய்து வருவார் என நம்புகிறேன்.

**டாக்டர் ராஜேந்திரப் பிரசாத்,**
இந்திய ஜனாதிபதி
[சிவானந்த ஆச்சிரமத்தில் நடைபெற்ற சொற்பொழிவின் பகுதி]

---

சுவாமி சிவானந்தர் ரிஷீகேசத்தினின்று செய்து வரும்பெரும் பணியை நான் மிகுந்தஆர்வத்துடனும், அக்கரையுடனும் கவனித்து வருகிறேன். நம் கண்ணுக்குப் புலப்படுவதைவிட வாழ்வில் அதிகம் இருக்கிறது என்பதை உலகம் உணரச் செய்யும் எந்த முயற்சியையும் பாராட்டுவது அவசியம்.

**டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன்,**
இந்திய உதவி ஜனாதிபதி.

---

எத்தனையோ புகழ்மாலைகளுடன் எனது இந்தப் புகழுரைகளையும் சேர்க்க விரும்புகிறேன்.

தம் சாதனையினாலும், எழுத்தினாலும் இந்தக் காலத்தில் எவரையும்விட அதிகமாக நம் பழம்பெரும் தர்மத்தில் சிரத்தை ஏற்படும்படிச் சுவாமிகள் செய்திருக்கிறார். எந்தக் கஷ்டத்தையும் சோதனையையும் சிரமமின்றித் தாண்டவைக்கும் மதத்தின்

அருளைப் போதிப்பவர் சுவாமிகள். அகிலத்தையெல்லாம் அன்புடன் அணைக்கும் அருட்சுடர் வள்ளல்தான் சுவாமிகள்.

நிலைகெட்ட உலகை நல்வழியில் நடாத்தவேண்டிச் சுவாமிகள் இன்னும் பலகாலம் வாழ்வாராக.

**பி. எஸ். குமாரசுவாமி ராஜா,**
ஒரிஸ்ஸா கவர்னர்.

---

சுவாமிஜிக்கும் வயதாகி வருகிறது. ஆனால் அவர் முதுமையை அடையமாட்டார். காலத்தை எதிர்த்து நிற்கக்கூடிய ஒரு ஆத்ம சக்தி அவருள்ளே நிலவி நிற்கிறது. சுவாமிஜியும், அவரது சீடர்களும் செய்துவரும் பணி பரந்தது. அவர் பொருளையும், புகழையும் விட்டு உலகத்தைத் துறந்தது தம் நாட்டிற்கு மனே, ஆத்மீகத் துறைகளில் இன்னும் பயனுள்ள முறையில் தொண்டாற்ற வேண்டும் என்பதற்காகத்தான் என்பது எனக்கு நன்கு தெரிகிறது. அவரது மேலான நோக்கம் நிறைவேற அவர் நெடுநாள் வாழவேண்டும்.

**பட்டாபி சீதாராமய்யா,**
மத்தியப் பிரதேச முன்னாள் கவர்னர்,

---

தமது பிறந்த தினத்தன்று சுவாமிஜி தெரிவிக்கும் நல் வாழ்த்துக்கள் அவற்றைப் பெறுவோர் அனைவரையும் ஆனந்தக் கடலில் ஆழ்த்துவதுடன், தமது சீடர்களாகவும் நல்லுரைகளைப் போற்றுபவர்களாகவும் அவர்களை ஆக்கிவிடும் என்பது திண்ணம்.

**எம். எஸ். ஆனே,**
பீஹார் முன்னாள் கவர்னர்.

---

இந்தியப் பண்பாட்டை மேலோங்கச்செய்வதற்குச் சுவாமிகள் செய்துவரும் விலைமதிப்பற்ற சேவைகட்காக எனது பாராட்டுதலைத் தெரிவிக்க விரும்புகிறேன் துறவின் பெருமையால் தூண்டப் பெற்ற அவரது முயற்சிகள், நம்மனைவரையும் உயரிய அறிவியல் ஒழுக்க நிலைக்கு உயர்த்த வேண்டுமென்ற அவரது பெருந்

தன்மையான விருப்பம் இவையனைத்தும் பயன்பெறுவது திண்ணம் என்பதே என் மனப்பூர்வமான எண்ணம்.

பஸல் அலி,
அஸ்ஸாம் கவர்னர்.

---

உலகாயதம் ஓங்கி நிற்கும் இந்த நாளில் ஸ்ரீ சுவாமி சிவானந்தர் சொல்லிலும் செயலிலும் ஆத்மீகப் பாதையைக் காட்ட அரும்பாடு பட்டு வருகிறார். அவர் நெடுநாள் வாழவேண்டும் அவர்களின் சீரிய உதாரணம் உண்மையான ஆத்மீக வாழ்க்கையைச் செவ்வனே கடைப்பிடிக்க எண்ணும் எல்லா சாதகர்கட்கும் வழி காட்டியாக விளங்குவதாக.

ரெங்கநாத திவாகர்,
பீஹார் கவர்னர்.

---

சுவாமிஜியின் சீரிய தோற்றமும் அவரது உயரிய போதனைகளும் நம் நாட்டில் மிகுந்த நன்மைகளைச் செய்து வருகின்றன. மேலும் நம் ஆச்சாரியர்களின் அகில உலகப் பொதுப் போதனைகளால் தூண்டப்பெற்ற அவரது பரந்த நோக்கம் இந்தியாவிலும் அயல்நாட்டிலும் உள்ள நாகரீக ஆடவர் பெண்டிரை நன்கு கவர்ந்துள்ளது.

தன்னுடைய நோக்கத்தை நிறைவேற்றச் சுவாமிஜி இன்னும் பலகாலம் வாழவேண்டும் என்பதாகவே நான் வேண்டுகிறேன்.

கே. எம். முன்ஷி,
உத்தர் பிரதேச கவர்னர்,

---

தெய்வ நெறிக் கழகமும் அதன் வெளியீடுகளும் இந்து மதத்தின் முக்கியத்துவத்தையும் பண்பாட்டையும் அவைகளின் தூய தன்மையில் பரப்பப் பாடுபட்டு வருகின்றன. தூய்மை பொருந்திய ஸ்ரீ சுவாமி சிவானந்தர் தாம் செய்துவரும் நற்பணியை தொடர்ந்து பல காலம் செய்துவர நீடு வாழவேண்டுகிறேன்.

கே. சந்தானம்,
முன்னாள் லப்-கவர்னர். விந்தியப்பிரதேசம்,

---

தமது முன் பார்வையிலுள்ள சீடர்களை அழைத்துச் செல்வது மட்டுமின்றி, தேசமெங்கிலும் பரவி நிற்கும் பெரும் குழுவான ஆதரவாளர்களையும் ஊக்குவதில் சுவாமிகள் சிறந்து விளங்குகிறார். அவர்கட்கு நம் நாட்டுப் பழங்கால ரிஷிகளின் போதனைகளை விளக்கிக்கூறித் தமது சொந்த வாழ்க்கையை உதாரணமாகக் காட்டி புத்துணர்ச்சியூட்டி வருகிறார்.

**ராஜாஜி,**
முன்னாள் இந்திய கவர்னர் ஜெனரல்.

---

குறிப்பிடத் தக்க ஆத்மீக விழிப்புக்கும் மனிதநல முயற்சிகளுக்கும் அடிக்கடிப் பாராட்டுதல் செய்வது அவசியமே. சிவானந்தர் ஆத்மீக விழிப்பை ஏற்படுத்தி நன்னல முயற்சியில் ஈடுபடுவதில் தலைசிறந்தவர்.

**டாக்டர் ஸி பி. ராமஸ்வாமி அய்யர்,**
உப அத்யட்சகர், காசி இந்து சர்வகலாசாலை,

---

ஸ்ரீ ரமணர், அரவிந்தர் இவர்களின் மறைவுக்குப் பின் இந்து மதக் கொள்கை, வேதாந்தம், மதம், இவற்றைப் பரப்பும் பெரியார்களில் தலைசிறந்தவர் சிவானந்தர் அவர்களே, உலகுக்கு அரும் பணி ஆற்ற அவர் இன்னும் பல்லாண்டு வாழ்வாராக.

**ஜஸ்டிஸ் ஏ. எஸ். பி. அய்யர்,**
நீதிபதி, சென்னை.

---

சமுதாயத்திற்குப் பெரும்பணியாற்றி வரும் சுவாமி சிவானந்தருக்கு நீண்ட ஆயுளும், திடமும் ஏற்பட வேண்டுகிறேன். நாமெல்லோரும் கருத்தில் கொண்டுள்ள சமூக நலனுக்கு அவருடைய நூல்கள் பெரிதும் உதவி வருகின்றன.

**ஜி. வி. மாவ்லங்கர்,**
இந்தியப் பாராளுமன்ற முன்னாள் சபாநாயகர்.

---

*சுவாமி சிவானந்தர் உலக சமாதானத்துக்காக இயன்ற மட்டும் உழைக்கும் பெரு மகான்களுள் ஒருவர். அவரது சொல்லும் செயலும் உலகெங்கும் பலருக்கு ஊக்கத்தைஉண்டுபண்ணுகின்றன. அவர் இன்னும் பலகாலம் வாழ்ந்து பெரும்பணியாற்றுவார் என நம்புகிறேன்.*

**வி. வி. கிரி,**
முன்னாள் தொழில் மந்திரி, இந்திய அரசாங்கம்.

---

*சுவாமி சிவானந்தரின் திருப்பணியைக் குறித்துச் சொல்ல வேண்டுவது அனுவசியம் மக்களுக்கு உயர்ந்த லட்சியங்களையும், உபதேசங்களையும் காட்டவேண்டி அவர் பன்னாள் வாழ்வாராக. அவருக்கு என் வணக்கமும் நல்வாழ்த்துக்களும்.*

**அனுக்ரஹ நாராயணசின்ஹா,**
நிதி-தொழில்-விவசாய மந்திரி, பீஹார்.

---

*இந்தப் புராதன நாட்டின் மாபெரும் மதாச்சாரியர்களின் சரித்திரம் எழுதப்படும் காலத்தில் சுவாமி சிவானந்தரின் பெயர் எல்லாவற்றிற்கும் முன்னதாக முதலிடம் பெறும். சுவாமிஜியின் பெயரைப்பற்றி முகவுரையாக எதுவும் தெரிவிக்க வேண்டிய அவசியமில்லை. சிவானந்த நகரிலிருந்து பரவும் தெய்வீக ஜோதி இன்று நம் நாட்டில் மட்டுமல்லாது, அவரது செய்திகள் சென்று சேரும் எல்லா நாடுகளிலும் பிரகாசித்து நிற்கிறது. அவரது போதனைகளின் அந்தர்தேசீயத்தன்மை அவரை எப்பொழுதாவது சந்தித்த எல்லா நபர்களிடத்திலும் ஒரு அடையாளத்தை ஏற்படுத்தியுள்ளது. ஆத்மீக அறிவைப் பரப்புவதன் மூலமாக மனிதசமுதாய நலனை ஏற்படுத்தும் திருப்பணியில் தமது வாழ்க்கையையே சுவாமிகள் அர்ப்பணம் செய்துள்ளார். சண்டையும் சச்சரவும் மிகுதியாகக் காணும் தற்கால உலகம் அவரது உயரிய போதனைகளால் நல்வழியே செல்வதாக.*

**குல்சாரிலால் நந்தா,**
திட்ட மந்திரி, டில்லி.

---

அகில இந்திய யாத்திரையின் போது சுவாமிகளைப் பூனாவில் சந்தித்தது எனக்கு நன்கு நினைவிருக்கிறது. அவரது தோற்றம் என்னைப் பெரிதும் கவர்ந்தது. பண்டைய நாள் முனிவர்களையும் ஆத்ம ஞானமெய்தினவர்களையும் பற்றிய நினைவு தான் எனக்கு வந்தது.

ஆத்மீகப் பாதையிலே ஆழ்ந்துவிட்டோரிடம் மட்டுமே காணக் கூடிய ஒரு பெரும் சாந்தி அவரிடம் குடிகொண்டிருக்கிறது. அவர் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து, தொண்டாற்ற வேண்டும் எனப் பிரார்த்திக்கிறேன்.

**பி. ஜி. கேர்,**
முன்னாள் இந்திய ஹை கமிஷனர், லண்டன்.

---

உலகாயதம் ஓங்கி நிற்கும் இந்தப் பூவுலகில், ஆத்மீக அறிவை பரப்பும் ஒரு சஞ்சிகை இருப்பது மிகவும் நல்லது. ஏன்? வாழ்க்கையின் ஒழுக்க, ஆத்மீக மதிப்பு நம் ஒவ்வொருவருடையவும் மனதிலும், இதயத்திலும் நிலவவேண்டும் என்பதே என்நம்பிக்கை. ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் பிறந்த நாளன்று எனது நல் வாழ்த்துக்களைத் தெரிவிப்பதுடன் 'தெய்வீக வாழ்க்கை' என்ற சஞ்சிகையின் வெற்றிக்கும் வேண்டுகிறேன்.

**ராஜகுமாரி அமிருதகௌரி,**
இந்திய சுகாதார மந்திரி.

---

சுவாமி சிவானந்தர் மிகவும் முக்கியமான பணியாம் ஆத்மீக சாந்தியையும் ஆறுதலையும் தெரிவிக்கும் செய்தியை, ஆசையும் இடையூறுகளும் நிறைந்த கடலில் அங்குமிங்கும் அலைக்கப்பட்டு நிற்கும் சாதாரண மனிதனுக்கும் அளித்து வருகிறார். அவர் நீடூழி வாழ்க.

**டாக்டர் சம்பூர்ணனந்த்,**
உத்தரப் பிரதேச முதன் மந்திரி.

---

ரிஷிகேசத்தில் கங்கைக் கரையில் சுவாமிகள் அமைத்துள்ள ஆச்சிரமத்தைச் சில மாதங்கட்கு முன்பு பார்க்கக் கிடைத்தது. உலகின் ஆத்மீக முன்னேற்றத்திற்காக அவர் செலவிடும் பெரும் சக்தி என்னைக் கவர்ந்தது. எங்கெங்கும் இந்து தர்மத்தைப் பரப்புவதில் அவர் பெருமுயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார். தெய்வ நெறிக் கழகத்தார் வெளியிடும் பத்திரிகைகளே ஆத்மீக மறுமலர்ச்சித் துறையிலே அவர் செய்யும் பெரும் தொண்டின் சின்னங்கள். அவரையொட்டிப் பல தன்னலமற்ற தொண்டர்கள் வாழ்கின்றனர். அவரது இயக்கம் உலகெங்கும் உள்ள மக்கள் வாழ்வில் தெய்வாம்சத்தை பரப்பி வருகிறது.

பெரும் பாக்கிய வசத்தால் நாம் பெற்றுள்ள வேததர்மத்தின் பிரசாரத்திற்காகச் சுவாமி அவர்கட்கு நீண்ட ஆயுளை வேண்டுகிறேன்.

பி. என். தத்தர்,
இந்திய உள்நாட்டு உதவி மந்திரி.

---

இன்று நமது நாடு ஆத்மீக முன்னேற்றத்திற்கான புத்துணர்ச்சியோடும் பேருக்கத்தோடும் துடித்து நிற்கிறது. அதிக மான மக்கள் தீயொழுக்கத்தைத் தவிர்த்து நல்லொழுக்கத்தைக் கொள்ளும் எண்ணம் கொண்டு விளங்குகின்றனர் என்றால், ஒழுக் கத்தையும் சாந்தியையும் பரப்பும் சிறு வெளியீடுகள், சமயவேதாந்த நூல்களின் மூலம் தனது நல்லாசிகளை மக்கள் மீது சொரிந்து நிற்கும் சுவாமி சிவானந்தரின் சோர்வின்றிய முயற்சியே அதன் காரணமாகும்.

116 வருடமான வேதாயுளைக் கொண்டு துறவினதும் முயற்சியினுடையவும் தலைசிறந்த உதாரணமாக சுவாமிகள் வாழ்ந்து தொண்டாற்ற வேண்டுகிறேன்.

என். சந்திரசேகரய்யர்,
இந்தியத் தலைமை நீதிமன்ற நீதிபதி.

---

சுவாமிகளின் நல்லாசிகளை நான்கு நூல்களின் மூலமாகப் பெற்றுள்ளேன்.

ஸ்ரீ மஹராஜின் அருளால் முந்திய மாபெரும் உண்மைகள் மீது பெரும் மதிப்புக்கொண்டு ஓர் உறுதியான நிலைமையை ஏற்படுத்த வேண்டி சஞ்சரித்து வருகிறேன். ஸ்ரீ சுவாமிஜியின் ஆசிர்வாதம் என்னுடன் எனது முயற்சிகளில் நிலவி நிற்பதாக.

பணிவான நமஸ்காரம்.

**எம். எஸ். கோல்வால்கர்,**
ராஷ்டிரீய சுயம் சேவக் சங்கம், நாகபுரி,

---

சுவாமி சிவானந்தரின் அதீதமான சக்தியும் உயரிய சகானுபூதியும் வெகு தொலைவிலுள்ள இந்த அமெரிக்க நகரத்தில் உணரப்பெறுகின்றன.

**ரெவரண்ட் ரேபர்ன் பிலிப்ஸ்,**
போர்ட்லாண்ட்.

---

இந்த சுவாமிஜியின் அருட்பார்வை லட்சக்கணக்கான சாதகர்களை வசீகரித்து, ஆறுதலளித்து ஆத்மீக உணர்ச்சியை யூட்டி, ஆசிர்வதித்திருக்கிறது.

**ஜே. ஹோமான்,**
ஹாலண்ட், யூரோப்.

---

டென்மார்க்குக்கும் இந்தியாவுக்கும் இடையேயுள்ள தூரம் ஆயிரக்கணக்கான மைல்கள் இருந்தாலும், இங்குள்ள யோக இயக்கத்தின் தலைவராக இருந்து, ஒவ்வொரு யோகாப்பியாசியி னுடையவும் முன்னேற்றத்தை வெகு அக்கறையுடன் கவனித்து வருபவர்தான் சுவாமி சிவானந்தர்.

**இ. பி. லார்ஸன்,**
கோபன்ஹேகன்,

---

சுவாமி சிவானந்தர் லட்சக்கணக்கான மக்களால் தற்காலத்தி லுள்ள புனித புருடர்களுள் தலைசிறந்தவர் எனக் கொண்டாடப் படுகிறார்.

**டாக்டர் என். டப்ளியூ. வாக்கர், D. Sc.**
யு. எஸ். ஏ. வடஅமெரிக்கா.

---

உயரிய மதகுருவினுடையவும் மக்களுக்கு நல்வழி காட்டும் சீரிய தலைவருடையவும் கடமைகளை நிறைவேற்ற தாங்கள் இப் பூவுலகில் தோன்றிய நேரம் மிகவும் புனிதம் வாய்ந்தது! வாழ்க்கையின் உண்மையையும் உள்ளிருக்கும் கடவுளையடையும் விதத்தையும் மிகவும் அழகாகத் தாங்கள் தெரிவித்தது போல் வேறு யாரும் தெரிவித்ததாக நான் காணவில்லை. அந்தஉண்மையே எல்லாவர்க்கும் தாங்களே மிகச்சிறந்த ஜோதியாக விளங்குகிறீர்கள் என்பதை எடுத்துக்காட்டுகிறது. தங்கள் நூல்கள் எங்களுடைய மிகவும் விலை மதிப்புள்ள பொக்கிஷமாகும்.

**ரைட் ரெவரன்ட் சார்ல்ஸ் டி. போல்ட்வுட்,**
லண்டன்.

---

இந்தியா வர நான் எண்ணவில்லை. இந்தியா வர கனவுகூடக் கண்டதில்லை. ஆனால் மாபெரும் காந்தமான சிவானந்தர் என்னைப் பிடித்திழுத்தார். நான் ஒரு சிறிய பிரசுரத்தைப் படித்தேன். அது என்னை அப்படியே ஆட்கொண்டு மாற்றியமைத்தது. நான் தற்பொழுது சிவானந்தர் முன் நிற்கிறேன்.

**ஆர். டி. வெர்தர்,**
பெர்த், ஆஸ்டிரேலியா,

---

மேன்மை தங்கிய சுவாமிஜி அவர்களே! எனது உள்ளத்தி லிருந்து உந்தித் தள்ளும் உயரிய உணர்ச்சியால் தூண்டப்பெற்றுத் தங்களுக்குத் தங்களின் பிறந்தநாள் விழாவன்று, தூரத்திலிருக்கும் ஆஸ்டிரேலியாவிலிருந்து எனது மனமார்ந்த நல்வாழ்த்துக்களைத் தெரிவிக்க விரும்புகிறேன். நான் எப்பொழுதும் தாங்கள் என்னுடன் இருப்பதாகவே உணருகிறேன். தங்களை எங்களுடன் இருக்கும்படிச் செய்தது ஆண்டவனின் உயரிய நற்பண்பே. உண்மையில் இது ஆச்சரியமானதே. எனது அன்பும், நன்றியும் சதா நின்று நிலவும்!

**திருமதி இ. மேசன்,**
ஆஸ்டிரேலியா.

---



"கருணையே வடிவமாகி ஈகையே கதிர்களாகி
அருணனே பொலிவதாகி அமைதியே நிஷ்டையாகி
இருள் நரகான வாழ்வில் இரவிபோல் ஒளிபரப்பி
அருள் விளையாடல் செய்யும் ஆனந்த குடலோன்
வாழ்க !"

**சுத்தானந்த பாரதி.**

ஜோதி அச்சு நிலையம்; திருநெல்வேலிச் சந்திப்பு — '56.

## எட்டய்யபுரம்.

## 8—9—1956

ஸ்ரீ ஸ்வாமி சிவானந்த சரஸ்வதி மஹராஜ் அவர்களின் எழுபதாவது பிறந்ததின விழாவின் நினைவுச் சின்னமென்ற முறையில் எட்டய்யபுரம் மேன்மை தங்கிய மஹாராஜா அவர்களால் அன்பளிப்பாக அளிக்கப் பெற்ற சீரியதோர் மாளிகை

**“ சிவானந்த மந்திர் ”**

என்ற ரூபத்தில் கவியோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதி அவர்களால் ஆத்மீகப் பிரசாரத்திற்காகத் திறந்து வைக்கப் பெறுகிறது.

## பத்தமடை.

## 8—9—1956

ஸ்ரீ ஸ்வாமிஜியின் எழுபதாவது பிறந்ததின விழா புனித தினத்தன்று ஸ்வாமிஜியின் பூர்வீக இடமாகிய பத்தமடையில் ஆத்மீகப் பிரசாரத்திற்காக வேண்டி ஓர் சீரிய மாளிகையை எழுப்பும் நன்முயற்சியின் தொடக்கவிழா என்ற முறையில் திருமதி சிவானந்த சுந்தரி மாதாஜி அவர்களால்

**“ சிவானந்த மடத் ”**தின்

அஸ்திவாரக்கல் நாட்டப்பெறுகிறது.